உ

ஓம் குஹாயநம:

# திருப்புகழமிர்தம்.

## ஒரு சிறந்த மாத வெளியீடு.



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

(மலர் 2.)

ஈஸ்வர ஹு சித்திரை மீ முதல் பங்குனி மீ வரையில்.

1937 ஹு ஏப்ரல் மீ முதல் 1938 ஹு மார்ச்சு மீ வரையில்



திருப்புகழ்த் தொண்டன்,

கிருபானந்தவாரி.

"திருப்புகழமிர்தம்" ஆபீஸ்,
108, சாமிநாய்க்கன் தெருவு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

1938

இதன் விலை ரூ. 1-8-0. தபாற்கூலி வேறு.

உ

# திருப்புகழமிர்தம்

## பொருளடக்கம்



### புராண வரலாறுகள்.

| விஷயங்கள். | | பக்கங்கள். |
|---|---|---|
| வீட்டுநெறி | ... | 281 |
| நாம ஏனை பிறந்தோம | ... | 312 |
| நானகு ரத தினங்கள் | .. | 341 |
| தாமம் | ... | 346 |
| இரவல | ... | 351, 383 |
| மகன் தாய்தநதைககாற்று முதவி | ... | 374 |
| ,, (தாய்தந்தை செயயுமம நன்றி) | ... | 374 |
| ,, (துற்புதகிரன் இயல்பு) | ... | 377 |
| ,, (மகன் ஆற்று முதவி) | ... | 379 |

---

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர். 2 Vol. 2 | ஈசுவர ௵ சித்திரைமீ 1உ ஏப்ரல்—1937 | இதழ் 1 No. 1

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்

(13) தொந்திசரிய மயிரே வெளிற நிரை
தந்தமசைய முதுகே வளைய இதழ்
தொங்க வொருகை தடிமேல் வரமகளிர்
நகையாட

தொண்டுகிழவ னிவனா ரெனஇருமல்
கிண்கி ணெனமு னுரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு
செவியாகி

வந்தபிணியு மதிலே மிடையு மொரு
பண்டி தனுமெ யுறுவே தனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடுகு
துயர்மே

மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே யொழுகவுயிர்
மங்கு பொழுது கடிதே மயிலின்மிசை
வரவேணு

எந்தை வருக ரகுநாயக வருக
மைந்த வருக மகனே யினிவருக
என்கண் வருக எனதா ருயிர்வருக
அபிராம

இங்கு வருக அரசே வருகமுலை
யுண்க வருக மலர்சூ டிடவருக
என்று பரிவி னொடுகோ சலைபுகல
வருமாயன்

சிந்தை மகிழு மருகா குறவரிள
வஞ்சி மருவு மழகா அமரர்சிறை
சிந்த அசுரர் கிளைவே ரொடுமடிய
அடுதீரா!

திங்களரவு நதிசூ டிய பரமர்
தந்தகுமர அலையே கரை பொருத
செந்திநகரி லினிதே மருவி வளர்
பெருமாளே!

## பதவுரை.

*எந்தை வருக - என் அப்பனே வா!, ரகுநாயக வருக - ரகு குலத்திற்கு நாயகனே வா!, மைந்த வருக - வலியுடையவனே வா!, மகனே இனி வருக - என் புதல்வனே தாமதியாது இனி வருவாய், என் கண் வருக - எனது கண்ணே வா!, எனது ஆர்உயிர் வருக - எனது அருமையான உயிருக்கு நிகரானவனே வா!, அபிராம இங்கு வருக - அழகிற் சிறந்தவனே இவ்விடம் வா!, அரசே வருக - இராஜாவே வா!, முலை உண்க வருக - பால் உண்ணவா!, மலர் சூடிட வருக - மலர்களை சூட்டிக்கொள்ள வா!, என்று பரிவினொடு கோசலை புகல - என்று அன்புடன் கௌசலாதேவி சொல்லி அழைக்குமாறு, வரும மாயன் - இராமபிரானாக அவதரித்து வந்த மாயா சொரூப ாகிய நாராயணமூர்த்தி, சிந்தை மகிழும் மருகா - உள்ளங் களிக்கும் படியான மருமகரே!, குறவர் இள - குறவர் குலத்தில் தோன்றிய வரும் இளமை யுடையவரும், வஞ்சி மருவும் அழகா - வஞ்சிக்கொடி போன்ற இடை யுடையவருமாகிய வள்ளிநாயகியார் அணைகின்ற அழகிற் சிறந்தவரே!, அமரர் சிறை - தேவர்களது சிறைச்சாலைத் ...மானது, சிந்த - நீங்குமாறு, அசுரர் கிளை - இராக்கதர்களுடைய ...வதும், வேரொடு மடிய - வேருடன் (அடியோடு) அழிந்து ...வடுதீரா - போர் ...ந்து கொன்ற தீரரே!. திங்கள் -*

சந்திரனையும், அரவு - பாம்பையும், நதி - கங்கையையும், சூடிய - சடா பாரத்திற் றரித்துள்ள, பரமர் - எப்பொருட்கும் இறைவரும் பெரிய பொருளுமாகிய சிவபெருமான், தந்த குமர - பெற்றருளிய குமாரக் கடவுளே!, அலை (ஏ-அசை) கரை பொருத - கடலில் எழும் அலைகள் ஒழியாது கரையில் மோதப்பெற்ற, செந்தில் நகரில் - திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில், இனிதே மருவி வளர் - இனிமையாகப் பொருந்தி வாழ்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே!, தொந்தி சரிய - வயது முதிர்ச்சியால் வயிறு சரிந்து தொங்கவும், மயிர் (ஏ-அசை) வெளிற - கருத்திருந்த தலைமயிரானது (கொக்கைப் போல்) வெளுத்து நறைக்கவும், நிரை தந்தம் அசைய - வரிசையாக இருந்த பற்கள் அசையவும், முதுகு (ஏ-அசை) வளைய - நிமிர்ந்திருந்த முதுகானது (பல்லக்குபோல்) வளையவும், இதழ் தொங்க - உதடுகள் தொங்கவும், ஒரு கை தடிமேல் வர - (கூனுடன்) ஒரு கரம் தடியின் மேல் பொருந்தி வர (தடியூன்றி தளளாடி நடந்துவருகின்ற சமயத்தில்), மகளிர் - பெண்கள், நகையாடி - (கிழவனாகிய என்னை நோக்கி) ஏளனமாகச் சிரித்து, தொண்டு கிழவன் இவன் ஆரென - "பழைய கிழவனாகிய இவன் ஆர்? என்று பரிகசிக்கவும், இருமல் கிண்கிண் என - கிண்கிண் என்ற ஒலியுடன் இருமல் வரவும், முன் உரை (ஏ-அசை) குழற - முன்னர் திருத்தமாகப் பேசிக்கொண்டிருந்த சொற்கள் குழறவும், விழி துஞ்சு குருடுபட (ஏ-அசை) கண்கள் எக்காலத்தும் தூங்குவதுபோல் ஒளி குன்றி குருட்டுத்தன்மை யடையவும், செவிடு படு செவியாகி - காதுகள் செவிட்டுத்தன்மை யடையவும், வந்த பிணியும் - உடலுக்கு வந்த நோயும், அதிலே மிடையும் - அந்த நோயை அகற்றுதற்பொருட்டு நெருங்கிய, ஒரு பண்டிதனும் - ஒரு வைத்தியனும், மெய் உறு வேதனையும் - சரீரத்திற்கு வந்த நோயாலாகிய துன்பமும் துன்புறுத்த, இள மைந்தர் உடைமை கடன் ஏது என - இளம்பருவத்தையுடைய மக்கள் சொத்து எவ்வளவு இருக்கிறது என்றும் கடன் எவ்வளவு இருக்கிறது என்று கேழ்க்கவும், முடுகு துயர் மேவி - இதனாலாகிய துன்பங்களை நான் அடையவும், மங்கை அழுது விழவே - என் பத்தினி ஓவென்று கதறி அழவும், யமபடர்கள் நின்று சருவ - யமதூதர்கள் என் உயிரைப்பற்றுமாறு வந்து நெருங்கி நிற்கவும், மலம் (ஏ-அசை, ஒழுக - மலம தண்ணீர் போல் ஒழுகவும், உயிர் மங்கு பொழுது - அடியேனது உயிர் மங்குந் தன்மை யடையும்போது, கடிதே மயிலின் மிசை வரவேணும் - விரைவாக மயில்வாகனத்தின்மீது வந்தருள் புரியவேணும்.

## பொழிப்புரை.

என் அப்பனேவா! இரகுகுலத்திற்கு நாயகனேவா! வலியுடையவனேவா! என்மகனே! இனிவருவாயாக, என்கண்ணேவா! எனது ஆருயிரேவா! அழகிற்சிறந்தவனே! இவ்விடம்வா, ராஜாவேவா! பால்குடிக்கும்பொருட்டு வா! மலரைச்சூடிக்கொள்ளுவதற்காக வா! என்று அன்புடன் கௌசலாதேவி அழைக்குமாறு மண்ணுலகில் அவதரித்துவந்த இராமபிரானும் மாயாசொரூபமாகிய மகாவிஷ்ணு உள்ளம் மகிழ்ச்சி யடையும் மருமகரே! குறவர்குலத்திற் பிறந்தவரும் இளமை யுடையவருமாகிய வள்ளியம்மையார் மருவுகின்ற கட்டழகுடையவரே! தேவர்களது சிறைவாசம் ஒழிய அசுரர்களது வமிசம் அடியோடு போர்புரிந்து அழித்த தீரரே! சந்திரனையும் சர்ப்பத்தையும் நதியையும் சடையிற்சூடிக்கொண்டுள்ள சிவபெருமான் பெற்ற குமாரமூர்த்தியே! கடலின் அலை கரையில் மோதுகின்ற திருச்செந்தூர் என்னும் புனித தலத்தில் வாழ்கின்ற பெருமையிற் சிறந்தவரே! முதுமையடைந்ததனால் தொங்கி சரியவும், கருமைநிறம் பொருந்திய மயிர்கள் வெளுத்து நரையடையவும், வரிசையாகிய பற்கள் அசையவும், முதுகு வளையவும், உதடுகள் தொங்கவும், ஊன்று கோலின்மீது ஒருகரம் பொருந்துமாறு தள்ளாடி நடந்துவருங்காலையில் பெண்கள் "பழய கிழவனாகிய இவன்யார்?" என்று எள்ளிநகையாடவும், கிண் கிண் என்ற ஒலியுடன் இருமல் வரவும், அழுத்தமாகவும் திருத்தமாகவும் முரண்பேசிக்கொண்டிருந்த வார்த்தைகள் குழறவும், கண்கள் எப்போதும் தூங்குவதுபோல் ஒளிகுன்றி குருட்டுத்தன்மையடையவும், செவிகள் செவிட்டுத்தன்மை யடையவும், உடலுக்குவந்த நோயும், அதனை நீக்குதற்கென நெருங்கிவந்த வைத்தியனும், சரீரத்திற்கு உற்ற பிணியின் துன்பமும் (ஒருங்கேவருத்த), இளம் பிள்ளைகள் சொத்து (ஆஸ்தி) எவ்வளவு இருக்கிறது? கடன் எவ்வளவு இருக்கிறது? என்று கேழ்க்கவும், துன்பமானது மிகவும், விரைந்து வரவும், என்பத்தினி ஓ வென்று கதறிஅழவும், யமதூதர்கள் என் உயிரைப் பற்றுமாறு வந்து நெருங்கி நிற்கவும், மலம் ஒழுகவும் ஆகிய மாறுவஸ்தையடைந்து உயிர்மங்குகின்ற காலத்தில் தேவரீர் மயில்வாகனத்தின்மீது விரைவாகவந்து அடியேனைக் காத்தருளவேண்டும்.

## விரிவுரை.

தோந் திசரிய :—

வயது முதிர்ந்தகாலத்தில் ஆலிலைபோலிருந்த வயிறு பெருத்து சரிந்துவிடும்.

மயிரே வெளிற :—

கருமைநிறத்துடனிருந்த மயிர்கள் கொக்கு போல் நரைத்து வெளுத்துவிடும். "தலைமயிர் கொக்குக் கொக்க நரைத்து" என்ற திருவாக்கையும் உன்னுக

நிறைதந்தம் அசைய :—

முத்தைப் போல் வரிசையாயிருந்த பற்கள் அசைந்து உதிரும்.

"வயது சென்றது வாய்ப்பல்லுதிர்ந்தது"

—திருப்புகழ்.

பற்கள் உதிர்ந்த வுடனே சொற்கள் கெட்டுவிடுமாதலால் இறைவனை வாயார வாழ்த்துதற்கு இயலாது போம். ஆதலால் பற்கள் விடுமின் இறைவனைத்துதித்தல் வேண்டும். பற்கள் உதிர்ந்தபின் மந்திரம் ஜெபிப்பார்க்கு சித்தியுறுமென்னும் மந்திரசாத்திரத்தையும் உய்த்துணர்க.

முதுகே வளைய —

"நிமிர்ந்த முதுகுங் குனிந்து" என்றபடி முதுகு பல்லக்கு போல் வளைந்துவிடும். அங்ஙனம் கூன் வளைந்தபின் இறைவன் திருவடியை மனத்தின்கண் நினைத்து தியான சமாதி செய்தற் கியலாது. முதுகுதண்டிலுள்ள சுழிமுனை என்னும் வெள்ளை நரம்பிலுள்ள தாமரைத்தண்டின் சிறு துவாரம்போன்ற நுண்ணிய வழியில் பிராண வாயுவை கபாலம் வரைக்கும் ஏற்றி சிவயோகசாதனம் முதுகு வளைந்துவிட்டபின் செய்யமுடியாது எனவே இடுப்பும் முதுகும் சிரமும் நேரேநிறுத்தி சித்திரப்பதுமைபோல் இருந்து தியானித்தல்வேண்டும். ஆதலால் முதுகுவளையாமுன் சிவயோகத்தை முயலல்வேண்டும்.

மகளிர நகையாடி :—

முதுமைப் பருவம் வந்த காலத்தில் பெண்களும் இளைஞர்களும் பரிகசித்து நகையாடுவர்.

" வருத்தமுந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கினை யோருடன் யாவரும்
வசைக் குறுஞ்சொலி னுல்மிக வேதினம் நகையாட"
—(மனத்திரைந்) திருப்புகழ்.

விழிதுஞ்சு குருடுபடவே :—

*கண்கள் முதுமையில் ஒளிகுன்றி குருடுபடும். அங்ஙனம் கண்ணொளி யிழந்தபின் இறைவனது திவ்யமங்கள திருமேனியின் பொலிவைக்கண்டு "ஐந்துபோறிவுங் கண்களே கொள்ள" என்ற பேரானந்தத்தை யடையமுடியாது. ஆதலால் கண்கள் ஒளியுடன் விளங்கும்போதே கண்ணினுலாகிய பயனைப் பெறவேண்டும்.*

செவிடுபடு செவியாகி :—

*முதுமையில் கண்கள் குருடுபட்டதோடு காதுகளும் கேட்குந் தொழிலை இழந்துவிடும். அங்ஙனம் செவியடைந்தபின் இறைவனது அருட்பெருங் குணங்களைக் கேட்டு மகிழமுடியாது. செவிபடைத்ததன்பயன் இறைவனது சீர்கேட்டு சிந்தை மகிழ்தலே.*

" செவ்வேளின் சீர்கேளாச் செவியென்ன செவியே"

வந்த பிணியும் :—

*உதிரம் வற்றி உடல் தளர்ந்துவிடுவதால் முதுமையில் பல நோய்கள் வந்து துன்புறுத்தும்.*

" சூலை சொறி யீளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடேபிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல்
அழிவேனோ"
—(வாலவய) திருப்புகழ்.

இள மைந்தர் உடைமை கடன் ஏதெனா :—

*தொங்கி சரிந்தும், மயிர் நரைத்தும், பற்கள் கழன்றும், முதுகு வளைந்தும், இதழ் தொங்கியும், தடியூன்றியும், "இந்தக் கிழவன் யார்" என்று பெண்கள் பரிகசித்து நகையாடவும், இருமல் வரவும், மொழி குழறவும், குருடு படவும், செவிடு படவும், பற்பல நோய்கள் வரவும், வைத்தியன் வந்து பணங் கேழ்க்கவும், உடலில் வேதனையும் இவை முதலிய பல துன்பங்களால் துன்புற்று ஆவிபிரியுங்காலத்தில், இளம்*

பிள்ளைகள் மாணுவஸ்தைப் படுவோனுடைய வருத்தத்தைக் கண்டு மனம் துடியாது, ஆஸ்தி எவ்வளவு? கடன் எவ்வளவு? எங்கெங்கு கொடுத்திருக்கிறீர்! என்று கேட்டு துன்புறுத்துவார்கள். அவர்களது நன்மையைக் கருதுவார்களே யன்றி நம்முடைய நன்மையைக் கருதி ஆன்மா க்ஷேமமடைகின்ற வழியைத் தேடமாட்டார்கள்

யமபடர்கள் . . . . . மலமே ஒழுக:—

யமதூதர்கள் வந்து பாசக்கயிற்றால் உயிரைக்கட்டி யீர்க்கின்ற சமயத்தில் மலம் நீர்போலே நெகிழ்ந்து ஒழுகும்.

உயிர் மங்கு பொழுது கடிதே மயிலின் மிசை வரவேணும்:—

ஆவி மங்குகின்ற காலத்தில் முருகனுடைய தெரிசனம் உண்டாயின் இயமதூதர்கள் வெருவி ஓடுவார்கள். ஆதலால் விரைவாக மயில்வாகனத்தின்மிசை வந்து காப்பாற்றவேணும் என்றனர்.

எந்தை வருக . . . . . வருமாயன்:—

பகவானுகிய நாராயணர், அளவற்ற தவம்புரிந்த கௌசலாதேவி அன்புடன் பற்பல வகையாக அழைக்க அவளது திருவுதரத்தில் தோன்றி மகனுக வந்தனர்.

"மன்னுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே"

— திருமொழி.

சிந்தை மகிழ மருகா :—

ஷண்முகப் பெருமான் அளவற்ற கருணையும், முடிவில்லாத ஆற்றலும், ஞானமேயொரு திருமேனியும் உடையவராக இருந்து கார்த்திகைப் பெண்கள் அறுவர்களுக்கும் மகனுகிய அன்னார் பலவாறு அழைக்க அவர்களுக்கு அருள்புரிந்தமையால், நாராயணர் சிந்தை மகிழுகின்றார்.

குறவரிள வஞ்சி மருவும் அழகா:—

முருகப் பெருமான் வள்ளி நாயகியார் மருவுகின்ற அழகிற் சிறந்தவர்; முருகப்பெருமானுடைய வடிவே அழகு; அழகால் அவரின் மிக்காரும் ஒப்பாரும் இல்லை. "முழுதுமழகிய குமர"

—திருப்புகழ்.

அமரர்சிறை சிந்த . . . . . . . . அடுதீரா :—

தேவர்களை சூரபன்மன் சிறையிட்டு பல யுகங்களாகத் துன் புறுத்த, இனி நமக்கு உய்வில்லை என்று நிர்க்கதியாக இருந்த தேவர்களது சிறையைமீட்டு சூராதி அசுரர்களது குலத்தை அடியோடுஅழித்து முருகப்பெருமான் அறத்தை நிலைபெறச் செய்தனர். ஒருவராலும் வெல்லவொண்ணாத சூரன் முதலியோரை வென்றதனால் தீரன் என்றனர்.

தேவர்கள் என்பது :—சத்துவம் முதலிய நற்குணங்கள்; அசுரர்கள் என்பது :—தாமசம் முதலிய தீயகுணங்கள்; தீயகுணங்களை அழித்து நற்குணங்களை நிலைபெறச் செய்தனர் என்பது அதன் தத்துவம்.

திங்கள் அரவு . . . . . . . . . தந்தகுமர :—

அபயமென்று வந்த சந்திரனையும் கொல்லவந்த அரவம் முதலியவைகளையுங் காப்பாற்றி சடாபாரத்தில் சூடிக்கொண்ட கருணை மூர்த்தியாகிய கண்ணுதற் கடவுளது மைந்தனை படியால், இயம பயம் நேருங்கால் மயில் மிசை வந்து காத்தருளல் வேண்டும் என்று விண்ணப்பம புரிகின்றனர்.

அலையே கரை . . . . . . . . . . பெருமாளே :—

அலைகள் வந்து தமதுதிருவடியில் ஓய்வுறுமாறு கடற்கரையில் முருகன் உறைகின்றனர். அலைகள் என்பது பலவகையான எண்ணங்கள். அவைகள் எம்பெருமானது திருவடியில் ஓயுமாறு செந்திலம்பதியில் வாழ்கின்றனர். செந்திலாண்டவனை நினைப்பார்க்கு துன்பங்கள் இல.

## கருத்துரை.

மாயவனது மருகரே! வள்ளிநாயகியின்மணவாளரே! அசுரரை யழித்த அதிதீரரே! சிவபெருமானது புதல்வரே! செந்திலாண்டவரே! பற்பலதுன்புற்று ஆவிபிரியுங்கால் மயில்மிசைவந்து காப்பாற்ற வேண்டும்.

உ

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

## நூன்முகம்.

"செந்திலையுணர்ந்து உணர்ந்து உணர்வுற" என்று நம் அருணகிரிநாத சுவாமிகளால் புகழ்ந்தோதிய திருச்செந்தூர் என்னும் திருத்தலம் சுப்ரமண்ய க்ஷேத்திரங்களில் முதன்மை பெற்றது. கடற்கரையில் காண்போர் கண்ணுங்கருத்துங் கவருங் கவினுடையது இரண்டாவது படைவீடு. பாண்டியராஜனது மகளாகிய அங்க சுந்தரிக்கு சாபத்தால்வந்த குதிரைமுகம் மாறி அழகிய முகம்கிடைத்த வதனாரம்பதீர்த்தமுடையது. இயற்கையழகால் எக்காலத்தும் இன்பத்தை நல்குவது. 'பரமபதமாய செந்தில்' 'மகாபுநிதந்தங்குஞ் செந்தில்' என்ற திருவாக்குகளால் இப் புனிதக்ஷேத்திரத்தின் பெறுமை நன்கு வெளியாகின்றது. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஊமையாயிருந்து ஐந்தாவது ஆண்டில் இத்திருப்பதிக்குச் சென்றவுடன் அருள்பெற்று கந்தர் கலிவெண்பா எனனும் அரிய பிரபந்தத்தை ஓதிய மகிமையுடையது. வேண்டுவார் வேண்டிய வரங்களையெல்லாம் விரைவிலீந்து கலியுகவரதராகக் கந்தப்பெருமான் எழுந்தருளியுள்ள தெய்வீகமுடையது.

இத்தகைய திவ்ய க்ஷேத்திரத்தில் ஆதிசங்கர பகவத்பாதர் வந்தபோது எம்பெருமானை வழிபட்டு புஜங்க ஸ்தோத்திரம் என்னும் இனிய பிரபந்தத்தைத் திருவாய் மலர்ந்தருளினர். அந்நூலைப் பாராயணம் புரிவோர்க்கு இகபர சித்தியாம். இதன் பொருளையுணர்ந்து பாராயணம் புரிதலே சிறப்புடைத்தாதலால் இதன் பொருளை விளக்குதும். அன்பர்கள் கருத்துணர்ந்து தினந்தோறும் பூஜாகாலங்களில் அன்புடன் பாராயணம் புரிந்து "யார் வேண்டினுங் கேட்ட பொருளீயுந் தியாகாங்கசீல" னும் குமாரபரமேஸ்வரனது திருவருளைப் பெறுமாறு வேண்டுகின்றனம்.

## நூல்.

सदा बाल रूपापि विघ्नाद्रि हन्त्री ।
महादन्ति वक्त्रापि पञ्चास्य मान्या ॥
विधीन्द्रादि मृग्या गणेशाभि धामे ।
विधत्तां श्रियंकापि कल्याणमूर्तिः ॥

ஸதா பால ரூபாபி விக்நாத்ரி ஹந்த்ரீ
மஹா தந்தி வக்த்ராபி பஞ்சாஸ்ய மான்யா ।
விதீந்த்ராதி ம்ருக்யா கணே சாபி தா மே
வித த்தாம் ஸ்ரியம் காபி கல்யாணமூர்த்தி: ॥ (1)

## அவதாரிகை.

ஸ்ரீமத் சங்கராசார்ய சுவாமிகள் பக்தானுக்கிரகார்த்தம், ஜயந்திபுர (திருச்செந்தூர்) த்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருப்பவரும், பரமசிவனுக்குப் பிரணவார்த்தத்தை உபதேசித்த குருவாகையால் "ஸ்வாமிநாதன்" என்றும் ஆன்மாக்களின் ஹ்ருதய குகையில் சூட்சும ஜ்யோதிஸ்வரூபரா யிருப்பவராகையால் "குஹன்" என்றும் மற்றும் பற்பல காரணங்களைப்பற்றிப் பக்தர்களால் பல்லாயிரக் கணக்கான திருநாமங்களாற் றுதிக்கப்படாநின்றவருமான பரம்பொருளைத் துதிக்கத் தொடங்கி, அது இடையூறின்றி இனிது முடியும் பொருட்டு முதலில் விநாயக ஸ்துதி ரூபமாகிய மங்களத்தைச் செய்கின்றார்.

## பதவுரை.

ஸதா - எக்காலத்தும்,
பால ரூபா அபி - குழந்தை வடிவ முடையதாயினும்.
விக் நாத்திரி ஹந்த்ரீ - இடையூறாகிய மலையைப் பிளக்கின்றதும்,
மஹா தந்தி வக்த்ரா அபி - பெரிய யானையின் முகத்தை யுடைத்தாயினும்,
பஞ்சாஸ்ய மாந்யா - சிங்கத்தால் அல்லது பரமசிவனால் வெகுமானிக்கத் தக்கதும்;
விதீந்த்ராதி ம்ருக்யா - பிரமன் இந்திரன் முதலிய தேவர்களால் தேடத்தக்கதும்,
கணே சாபிதா - கணேசன் என்று பெயருடையதுமான,
காபி கல்யாண மூர்த்தி - ஒப்பற்ற மங்கள மூர்த்தியான,
மே - எனக்கு,
ஸ்ரியம் - (மோக்ஷ) லக்ஷ்மியை,
விதத்தாம் - கொடுக்கட்டும்.

## பொழிப்புரை.

எப்போதும் சிறுகுழந்தை வடிவமுடையதாயினும் தனது அன்பர்களுக்கு வரும் மலைபோன்ற இடையூறுகளைப் பிளக்கத்தக்க வலியுடையதும், பெரிய யானை முகத்தை யுடையதாயினும் சிங்க (பரமசிவ) த்தின் அன்பிற் குரியதும், பிரமன் இந்திரன் முதலிய இமையவரால் தேடப்படுவதுமான கணேசர் என்ற மங்கள மூர்த்தி எனக்கு † மோட்சத்தை அனுக்கிரகிக்கட்டும்.

குறிப்பு :— * பஞ்சாஸ்யன் ஐந்து முக முள்ளவன். இவை ஈசான தத்புருஷ, அகோர, வாமதேவ, சத்யோஜாத என்னும் ஐந்து முகங்கள் இருப்பதால் பரமசிவனுக்குப் பெயராம்.

பஞ்சாஸ்ய—விரிந்த முகத்தையுடையது என்று மற்றொரு பொருள். விரிந்த முகத்தையுடைய சிங்கத்திற்கும் பெயராம். எனவே பஞ்சாஸ்ய என்பது சிவபெருமானுக்கும் சிங்கத்திற்கும் பொருளாம.

† லக்ஷ்மி என்பது பொதுவாகச் செல்வத்தைக் குறிப்பதாயினும், சங்கராசார்ய சுவாமிகள் சர்வசங்க பரித்தியாகி யாகையால் மோக்ஷ லக்ஷ்மி யையே விரும்பி யிருக்கக்கூடும. அன்றியும் பிரமவிஷ்ணு வாதிகளாலும் வழிபடக்கூடிய விநாயகக கடவுளிடம் அற்ப ஐஸ்வரியங்களை அபேக்ஷிப்பது அநுசிதமுமாம்.

न जानामि पद्यं न जानामि गद्यम् ।
न जानामि शब्दं न जानामि चार्थम् ॥
चिदेका षडास्या हृदि द्योतते मे ।
मुखान्निःसरन्ते गिरश्चापि चित्रम् ॥

நஜாநாமி பத்யம் நஜாநாமி கத்யம்
நஜாநாமி ஸப்தம் நஜாநாமி சார்த்தம் ।
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருத்த்யோததேமே
முகாந்நி: ஸரந்தே கிரஸ்சாபி சித்ரம் ॥ (2)

## அவதாரிகை.

இச் சுலோகத்தில் முற்றறிவும் முழுவல்லமையு முடைய குமாரக் கடவுளின் கருணையின்றி அற்ப அறிவுடைய ஜீவனால் எக் காரியமும் நடவாதென்னு முண்மையைக் கூறுகின்றார்.

## பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பத்யம் | - செய்யுளை. | ஷடாஸ்யா | - ஆறுமுகங்களை யுடைய |
| நஜாநாமி | - அறியேன். | ஏகசித் | - ஒரு சித்தானது; (சித்து:- ஞான ஸ்வரூபம்) |
| கத்யம் | - வசனத்தையும். | த்யோததே | - பிரகாசிக்கின்றன |
| நஜாநாமி | - அறியேன் | முகாத் | - முகத்தினின்றும் |
| சப்தம் | - சொல்லையும் | கிர :சஅபி | - வாக்குகளும் (சுலோகங்களும்) |
| நஜாநாமி | - அறியேன் | நி:ஸரந்தே | - வெளிப்படுகின்றன |
| அர்த்தம் | - பொருளையும் | சித்ரம் | - ஆச்சரியம் |
| நஜாநாமி | - அறியேன் | | |
| கிந்து | - ஆனால் | | |
| மே | - எனது | | |
| ஹ்ருதி | - உள்ளத்தில் | | |

## பொழிப்புரை.

நான் செய்யுள், வசனம், சொல், பொருள் இவை ஒன்றும் அறியேன். ஆனால் எனது உள்ளத்தில் ஆறுமுகங்களையுடைய ஒரு ஞானஸ்வரூபம் விளங்கிக்கொண்டிருக்கின்றது. ஆகையால் வாயினின்றும் ஆச்சரியகரங்களான சொற்களும் வெளிவருகின்றன. (நான் சுவாமியைத் துதிக்கப் புகுந்தது அவரின் அருளினாலேயே யன்றி எனது வல்லமையினாலன்று என்பது கருத்து).

---

(1) க (k), ச (ch), ட (t), த (t), ப (p)
(2) க (kh), ச (chh), ட (th), த (th), ப (ph)
(3) க் (g), ச (j), ட (d), த் (d), ப (b)
(4) க (gh), ச (jh), ட (dh), த (dh), ப (bh)

---

ஓம் ஸ்கந்தாய நம :

# கந்தர் திருவிளையாடல்.

## தோற்றுவாய்.

அறிவைத்தருகின்ற நூலுக்கு வித்தை யென்று பேர். வித் அறிவு ; அவ்வித்தை பதினானகென்பார் ஆன்ரேர்.

" வித்யாஸ்யே தாச்சதுர்த்தச "

—மஹாபாரதம.

அவ்வித்தை பதினான்காவன :—இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய வேதங்கள நான்கு ; சிக்ஷை, கற்பம், வியாகரணம, நிருத்தம், சந்தஸ், ஜோதிடம் என்னும் அங்கங்கள் ஆறு ; புராணம, நியாயம், மீமாஞ்சை, ஸ்மிருதி (தருமசாததிரம்) என்பவை நான்கு ஆக வித்தை பதினான்கு. இவற்ரேடு ஆயுள் வேதம், வில்வேதம், காந்தர்வவேதம், அருத்தவேதம் என்னும் உபவேதம் நான்கனையுங் கூட்டி வித்தை பதினெட்டென சைவபுராணத்து வாயுசங்கிதை தெரிவிக்கிறது.

" அஷ்டா தசாநாம் வித்யாநாம் ".

இவ்விருதிற நூல்களும் புராணத்தைப் பிரமாண வித்தையில் வைத்துக் கூறுவவாயின. இப்புராணம் பதினெட்டு வகைத்தாம் அவை :—சைவம், பௌஷியம், ஸ்காந்தம், மார்க்கண்டேயம், இலிங்கம், வாராகம், வாமனம், மச்சம், கூர்மம், பிரமாண்டம், காருடம், நாரதீயம், வைணவம், பாகவதம், பிரமம், பதுமம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம் என்பன. இவற்றுள் முறையே சிவபுராணம் 10, விஷ்ணுபுராணம் 4, பிரமபுராணம் 2, அக்கினிபுராணம் 1, சூரிய புராணம் 1, ஆக 18. புராணம் என்ருல் பழைமை என்று பொருள். பதினெட்டுப் புராணங்களின் கிரந்த எண் 4 இலட்சம். (32 எழுத்துக்களைக் கொண்டது ஒரு கிரந்தம்) அவற்றுள் 17, புராணங்களின் எண் 3, இலட்சம். கந்தபுராணம் ஒரு இலட்சம் கிரந்த முடையது ஏனையபுராணங்களை எண்ணுல் இளமை படுத்தும் சிரேட்டமுடையது. இம்மகா புராணமாகிய காந்தபுராணம்,

இக்கந்தபுராணம் வேதவேதாந்தங்களின் சாரத்தையும் தன்ன கத்தே கொண்டதும், புராணங்களின நாயகமும், விசாலமுடையது மாகும். இத்தகைய மகாபுராணமானது சனற்குமாரசங்கிதை, சூத சங்கிதை, பிரமசங்கிதை, விட்டுணு சங்கிதை, சங்கர சங்கிதை, சூரசங்கிதை என ஆறு சங்கிதைகளை யுடையது. இவற்றுள் சங்கர சங்கிதையென்பது முற்றும் வேத சம்மதமாயுளளது என்பதை சம் பவகாண்டம் தெரிவிக்குமாறு காண்க.

" தத்ரயா ஸம்ஹிதாப் ப்ரோக்தா
சாங்கரீ வேத ஸம்மதா ".

இத்தகைய சங்காசங்கிதை பன்னிரண்டு கண்டங்களை யுடையது. அவற்றுள் முற்பட்டது சிவாகசிய கண்டம். அச்சிவாகசிய கண்டம் சம்பவகாணடம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்த காண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம், உபதேசகாண்டம என்னும் ஏழுகாண்டங்களை யுடையதாம் இவற்றுள் முதலாறு காண் டங்களையும் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் செந்தமிழில் பார காவியமாக இயற்றினர். எழாவதாகிய உபதேச காண்டத்தை குகனேரியப்ப நாவலர் இனிது தமிழில் இயற்றினர்.

எண்ணுதற்கரிய புண்ணிய புராணமாகிய இக்கந்தபுராணம் இவ் வகையாகப் பல பிரிவுகளாக ஒப்பற்று விளங்குவதாம். எந்த வர லாற்றினையும் கந்தபுராணத்திற் காணலாம் என்ற முதுமொழியே அப்புராணத்தின் பெருமையை விளக்கப் போதிய சான்றாம். இத் தகைய அரிய பெரிய புராணத்தின் சங்கர சங்கிதை கந்தப்பெரு மானுடைய திருவிளையாடல்களை விரித்துரைக்கிறது.

கந்தவேளுடைய புனிதமாகிய சரித்திரத்தை அன்போடு பாரா யணம் புரிவோர்க்கும், சிரவணம் புரிவோர்க்கும் இகபரசித்தி எளிதி லுண்டாகும்.

சீருணுத்வம் நுஷயஸ்ஸர்வே கததோமத் கதாம் சுபாம்
ஸ்கந்தஸ்ய கீர்த்தி மதுலாம் கலிகல்மஷ நாஸிநீம்.

(வாலாற்றோடுங் கூடிய கந்தன் புகழ்மையை முனிச்சிரேட்டர் காள்! கேண்மின்! இது கலியுகத்திலுண்டாம் பாவத்தைப் படிக்கக் கேட்டவிறுலேயே பாற்றிட வல்லது)

—சம்பவகாண்டம்.

ஆக்யானநற் பஹுபிர்யுக்த மபீஷ்டபல ஸாதநம் !
ஆதரேண முநிச்ரேஷ்டாச் சீருணுத்வம் கதயாமிவ !!

(வேட்ட பலனை நல்கத்தக்க கந்தனது சரித்திரத்தை நுங்கட்கு கூறுவல்; பிரியத்தோடு கேண்மின்)

—சமபவகாண்டம்.

இத்தகைய பாமபவித்ரமான கந்தப்பெருமானுடைய இனிய திருவிளையாடலை சுருக்கமாக வரைகுதும். அன்பர்கள் படித்து இக பா நலன்களை எய்துவாராக.

## சம்பவகாண்டம்

காப்பு.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுரை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

### பார்வதி ஜனனம்.

திருக்கைலாய மென்னுந் திருமலை ஆயிரங்கோடி சந்திரர்கள் ஒருங்கு சேர்ந்து உதயமானால் எவ்வண்ணம் ஒளி செய்யுமோ அவ் வண்ணம் ஒளி செய்துக்கொண்டு விளங்கும் சிவபெருமான் தன்னை யடுத்த அடியார்களது பாசத்தை நீக்கி தமது திருவருளைத்தருமாறு போல் அவ்வெள்ளியங்குன்றம் தன்னைச் சார்ந்தோருடைய ஒளியை மாற்றி தனது நல்லொளியை வீசிக்கொண்டிருக்கும். கொன்றை, வில்வம் முதலிய தருக்களின் சோலைகளால் அம்மலை இயற்கையழகுக் கிருப்பிடமானது முக்கண்ணும், நாற்புயமும், பொன் மேனியு முடைய நந்தியெம்பெருமான் பொற்பிரம்பைக் கரத்திலேந்தி காவல் புரிந்துகொண்டிருப்பர். இந்திரன் முதலிய இமயவர், ஈறில்லாத மாதவமுடைய இருடிகள், சிவனடியார்கள், சிவகணங்கள் முதலி யோர் எப்போதும் அமமகா மலையில் வாழ்ந்துகொண்டிருப்பர். அரம்பையர்களின் ஆடலும், கந்தருவர்களின் பாடலும், வீணை முத லிய இனிய வாத்தியங்களும், தேவர்களின் வாழ்த்தும், எக்காலத்தும் அம்மலையில் ஒலித்துக்கொண்டிருக்கும்,

ஊழிகாலத்து மழியாத அவ்வெள்ளியங்கிரியின் மத்தியில் நவ மணிகளின் நல்லொளி வீசிக்கொண்டு பொன்னெடுங்கோயில் ஒன்று பொலிவுற்றிருந்தது. அத்திருக்கோயிலின நடுவில் வனப்புகளுக்

குறைவிடமாக விளங்கும் மணிமண்டபத்தில் நவமணியிழைத்த அரியணைமேல் அம்பிகையுடன் சிவபெருமான் எழுந்தருளியிருந்தனர். தும்புருநாரதர், கந்தருவர், செந்திருமுனிவர் முதலியோர் இனிய கானம் புரிந்துகொண்டிருந்தனர்.

அத்தருவாயில் அம்பிகை மனத்தில் ஒன்றை நினைத்து துணுக்குற்று விரைந்தெழுந்து, சிவபெருமானைத் தொழுது, "கற்பனை கடந்த கண்ணுதலே! சிவ அபராதியாகிய தக்ஷனுடைய மகள் என்னும் பொருள்படும் தாக்ஷாயணி என்ற பெயரை யான் பூண்டிருத்தல் தகுதியன்று. அவனால் வளர்த்த இவ்வுடலையும அவனுடைய மகளென்னும் பெயரையும் இனி தரித்திரேன்; அவை நீங்குமாறு திருவருள் புரிதல் வேண்டுமென" வேண்டினர். சிவபெருமான் "ஒப்பற்ற அன்புடைய ஒண்டொடி! உலகத்தில் ஆன்மாக்கள் உய்யும்வண்ணம் இங்ஙனம் நினைத்தனை; நினது எண்ணம் நன்மையுடைத்தே; மலையரசனாகிய இமவான் நின்னை மகளாகப்பெற்று எமக்குத் தருமாறு விழைந்து பெருந்தவம் புரிகின்றனன். அவன் விருப்பம் நிறைவேறுமாறு நீ அவனுக்கு மகளாகச் சென்று வளர்குதி. ஐந்தாவது ஆண்டில் நம்மை நோக்கி நற்றவம் புரிதி; அக்கால் கணங்களோடு நாம் வந்து நின்னை மணங்கொண்டு திருவருள் புரிவோம்; செல்லுதி" என்று அருளிச்செய்தனர். விடையவன்பால் விடைபெற்ற உமாதேவியார் வெள்ளி வெற்பைவிட்டு இமயமலையை எய்தினர்.

கீழ்த்திசைக்கடலும் மேற்றிசைக்கடலும் ஒன்றுகூடாவண்ணம் தடைசெய்ய நிற்பதுபோன்று விண்ணளாவிய இமயமலை எழில் செய்து விளங்கும். அம்மலையின்மேல் தேவாமிர்தமொத்த தெண்ணீருடைய பத்மை என்னும் தடாகமொன்று திகழும் அத்தடாகத்தில் இமவான் கௌரியம்மை தனக்கு மகளாகத்தோன்றவும், அவரை அரனார்க்கு நல்கவும் விழைந்து பெருந்தவமாற்றி நின்றனன்.

எல்லா வுலகங்களையுமீன்ற எம்பிராட்டி அத்தடாகத்தில் அழகிய தாமரை மலரின்மேல் கண்களைக்கவரும் கட்டழகுடைய இளங் குழந்தை வடிவத்துடன் வீற்றிருந்தனள். அத்தெய்வக்குழந்தையை இமவான் கண்டு அடியேனை ஆட்கொள்ளும்பொருட்டு அகிலாண்டகோடி யீன்ற அன்னை குழந்தையாகவந்து அமர்ந்தனள் என்று ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, உரோமஞ் சிலிர்க்க பெருங்களிப்புற்று

"அடியனேன் தவம் பலித்தது" என்று ஆனந்தக்கூத்தாடி அம்பிகையைத் தொழுது குழந்தையைக் கரத்திலெடுத்து சென்னிமேற்றூங்கிக்கொண்டு, தனது பொன்மாளிகை புக்கு தனது தரும பத்தினியாகிய மேனையின் கரத்திலே மகவை நல்கினன்.

பருவதராஜனாற் கொடுக்கப்பெற்ற தெய்வக் குழவியை மேனை தொழுது வாங்கி, குழந்தை கிடைத்த வரலாற்றைக்கேட்டு ஈசனாது இன்னருளால் இம்மகவு கிடைத்தது என்று மனமிகமகிழ்ந்து மார் போடணைத்தனள கொங்கைகள் பால் சுரந்தன பரிபுரம், தண்டை, சங்குவளை, ரத்தினச்சுட்டி, மதாணி, பொற்றோடு, அங்கதம் முதலிய பொன்னாபரணங்களை குழந்தைக்குத்தரித்து பொனனாலாகிய தொட்டி லில் தாலாட்டி, உலகங்களையெல்லாம் ஈன்று வளர்த்த உலகமாதாவை மகளாகப் பெற்றுவளர்த்தனள். பருவதராஜனுக்கு மகளாக வந்தத னால் பார்வதி என்னுந் திருப்பெயரைப பெற்றனர்.

பார்வதியாருக்கு வயது ஐந்து ஆயிற்று அத்தருணத்தில் அம் பிகை ஆலமுண்ட அண்ணலில் ஆணையை நினைத்து இமவானைநோக்கி, "ஐய! மணிகண்டப் பெருமானை மணம் புரிந்துகொள்ளுமாறு அப்பெருமானைக் குறித்துத் தவம்புரிவேன் அதற்கு இம்மலையிலோர் பால் தவச்சாலையொன்றை நியமித்தருவீர்" என்று கூறினார. அத னைக்கேட்ட மலையரையன் "அம்மா! தவம என்பது சாமானியமன்று; உடல் வருந்தித் திடஞானத்துடன் செய்தல்வேண்டும்; அதறகு இது பருவமன்று; உனக்கு வயது ஐந்தே நிறைந்துளது; நின் உடல் தவம் புரிதற்கு வலிபெறவில்லை; ஆதலால் தவம் புரியும் எண்ணத்தைத் தவிர்தி" என்றனன். அங்ஙனமே தாயுந் தடுத்தனள். உமாதேவி "எந்தாய்! எவ்வுயிரையுங் காக்கவல்ல ஈசன் ஒருவனுண்டு; அவனரு ளின்றி யாரும் தம்மைத் தாமே காத்துக்கொள்ள இயலாது; இப் போது யான் கூறுவதும் அவன் திருவருளே; தடை செய்யாது விடை தாரும" என, மன்னன் இசைந்து தவச்சாலை செய்து மகளை அதி விருத்தி, அநேக கன்னியரைக் காவலாகச் செய்து வேண்டுவ செய் தான். பார்வதியார் தவச்சாலை சென்று கன்னியர் பலர்சூழ கண்ணு தற் பரமனை மன மொழி மெய்களால் வழிபாடு செய்து அருந்தவத் திருந்தனர். மலையரசனும் மேனையும், தினந்தோறும் மகளைப்போய்ப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

(தொடரும்)

---

# கற்பு.

(369-ம் பக்கத் தொடர்ச்சி)

## சுகன்னி.

பெண்களுக்குக் கணவனே தெய்வம்; கணவனுடன் வசித்தலே சுவர்க்கலோகவாசம். நாயகன் வயோதிகனாக இருக்கினும் அவனையே நன்கு வழிபாடு செய்தல்வேண்டும் இத்தகைய அசைவற்ற கற்புடைய பதிநினியை உடையவனுக்கு அடையத்தகாத பொருள் மூவுலகிலுமில்லை. இதனை விளக்கும் சுகன்யோபாக்யானத்தை ஈண்டு வரைகுதும; பெண்மக்கள் படித்துப் பயன்பெறுவார்களாக

பிருகு முனிவருக்கு புலோமை என்னும் தருமபத்தினியிடம் சியவனர் என்னும் புதல்வர் தோன்றினர். அவர் தவத்தையே தனமாகக்கொண்டவர். பொறிகளையும் புலன்களையும் வென்றவர், அவர் ஒரு கானகத்தில் கடுந்தவம் புரிந்திருந்தனர். மிகுந்த ஒளியையுடைய அவர் வீராசனத்துடன் சித்திரதீபம்போல் அசைவற்ற மனத்துடன் ஒரேயிடத்தில் கம்பம்போல் நெடுங்காலமிருந்தனர். அதனால் அவரைக் கொடிகள் சூழ்ந்தன; புற்று மூடியது; புத்திமானான அவர் மண்முட்டுப்போல எல்லாப் பக்கங்களிலும் சூழப்பட்டவரானார். புற்றினால் சூழப்பெற்று பயங்காமான தவத்தைப் புரிந்துகொண்டிருந்தனர்.

நெடுங்காலத்திற்குப்பின் சந்திரகுலத் திறைவனாகிய சர்யாதி விளையாடுவதற்காக பரிவாரங்களுடன் தனது மகள் சுகன்னியுடனும் அக்கானகத்திற்கு வந்தனன். நதிகளாலும், நறுமலர்ச் சோலைகளாலும், அழகிய சிறு குன்றுகளாலும் அவ்வனம் மிக்க இயற்கை வனப்புடன் இலங்கியது. சர்யாதிக்கு நாலாயிரம் பத்தினிகள் இருந்தனர். அழகிய புருவங்களுள்ள சுகன்னி ஆடையாபரணங்களால் அலங்கரித்து தோழிகளுடன் உலாவிக்கொண்டு சியவனர் தவம்புரிகின்ற புற்றை அடைந்தனள். தோழிகளால் சூழப்பட்ட அம்மாதரசி அங்கே மனத்தை மகிழ்விப்பதான பூமியைப் பார்த்துக்கொண்டும் மலர்களைப் பறித்துக்கொண்டும் விளையாடினாள். தோழிகளைப் பிரிந்து தனியாக

மலர்மிசைவாழும் திருமகளைப்போல மெல்ல உலாவிக்கொண்டிருந்த னள். அறிவிற் சிறந்த அருந்தவராகிய சியவனர் தனித்திருப்பவளும் ஒற்றையாடை யுடுத்தவளும அலங்கரிக்கப்பட்டவளும் ஆகிய அப் பெண்மணியை அசைந்து கொண்டிருக்கிற மின்னலைப்போலக் கண் டார். மிகுந்த ஒளியுடைய அவர் ஜனங்களில்லாத இடத்தில் அவளைக் கண்டுகளித்தனர். குரல் மெலிந்தவரும் தபோபலத்துடன் சேர்ந்தவரு மாகிய சியவனர் சுகன்னியை அழைத்தனர். அவளுக்கு இவருடைய சொல் கேட்கவில்லை பிறகு சுகன்னி புறறில் சியவனருடைய கண்க ளைப்பார்த்து அறிவுமயக்கத்தால் வலிமைசெய்யப்பட்டவளாகி மகிழ்ச் சியால் 'இது என்ன?' என்று கூறி முள்ளினால் அவருடைய கண் களைக்குத்தினாள். உடனே சியவனர் சினமடைந்து சர்யாதி யினது சேனைகளின் மலஜலங்களைப் கட்டிவிட்டார். மலஜலங்கள் தடுக்கப்பட்டவுடன் சேனையானது மிக்கத் துன்புறுவதாயிற்று. அதனைக்கண்ட அரசன் தன் பரிசனங்களை நோக்கி, 'தவத் தில் எப்பொழுதும் நிலைபெற்றவரும், வயது முதிர்ந்தவரும், மிகுந்த கோபமுடையவருமாகிய சியவனருக்கு இப்போது இங்கே தெரிந்தோ தெரியாமலோ தீமை செய்ததுயார்? அதனை விரைவில் கூறுங்கள்; தாமதித்தல்கூடாது" என்று வினவினன். அது கேட்ட அனைவரும் "மநுநெறிநின்ற மன்ன! நாங்கள்யாரும் சியவனருக்குத் தீமை புரிந்தோமில்லை. எல்லா உபாயங்களாலும் அதனை அறிந்து கொள்ளும்" என்றனர். பின்னர் மனனன் தானே நண்பர் கூட்டத்தை நயமாகவும் பயமாகவும் கேட்டான். மலஜலபந்தத்தால் துன்புற்று வருந்துகிற சைன்யத்தையும் அதுகண்டு கவலையுற்ற பிதாவையும் கண்டு சுகன்னி, சர்யாதியை நோக்கி, "அப்பா! நான் இங்கு உலவிக்கொண்டிருந்தபோது புற்றுக்குள் ஒளி செய்கின்ற ஒரு பிராணியைக் கண்டேன். நான் அதனை மின்மினிப்பூச்சிபோன்ற தென்றெண்ணி அருகில்சென்று குத்திவிட்டேன்" என்றனள். மன்னன் கேட்டு திடுக்கிட்டு விரைவாகப் புற்றை நோக்கிச் சென் றனன் அதில் சந்திர சூரியர் போல் ஒளியுள்ளவரான தவ முதியவரைக் கண்டான். அரசன் கைகூப்பிக்கொண்டு "அருந்தவப் பெரியீர்! என்னுடைய சிறுமி அறியாமையால் உமக்குச்செய்த அபராதத்தை மன்னிக்க வேண்டும்" என்று வேண்டினன்.

பிருகு புத்திரரான சியவனர் மன்னனை நோக்கி, "அகங்காரத் தால் நிறைந்த இப்பெண்ணால் நான் அவமதிப்பினால் குத்தப்பட்டேன்.

கொற்றவ! இணையற்ற எழிலும் கம்பீரமும் உடையவளும் லோபத்தாலும் மோகத்தாலும் வசப்படுத்தப்பட்டவளுமான உன்னுடைய அந்தப்பெண்ணையே நான மணம்புரிந்தால் மன்னிப்பேன்; இதனை உண்மையாக உணாவாயாக" என்றுகூறினர். முனிவருடைய மொழிகளைக்கேட்ட முடி மன்னன் ஆராயாமலே அருந்தவமுனிவருக்குத் தனது பெருந்தவப் புதல்வியைக் கொடுத்தான். முனிவர் கன்னிகையைப்பெற்று அருளபுரிந்தனா. அருளைப்பெற்ற அரசன் சேனைகளுடன நகரஞ்சென்றனன். கற்பிற் சிறந்தவளாகிய சுகன்னி வயது முதிர்ந்த மாதவரை மணாளனாக அடைந்து, அன்புடனும் தவத்துடனும் அடக்கத்துடனும் அவருக்குத் தினந்தொறும் ஏவல்புரிந்துவந்தாள். அரச செல்வத்தை அனுபவித்த அம்மாதரசி அரண்யத்தில் கிழவராகிய முனிவரை சிறிதும் அவமதியாது அவருடன் வசிப்பதையே இந்திரலோக வாழ்வாகவும், அவருக்குப் பணிவிடை புரிவதையே பெறத்தக்க பேரெனவும், அவருடைய வாக்கே வேதவசனமெனவும் எண்ணி மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்தனள். அசூயை இல்லாதவளும் அழகிய முகமுள்ளவளுமான அவள் அக்கினிகளுக்கும் அதிதிகளுக்கும் விரைந்து பணிசெய்து சியவனரை ஆராதித்து வந்தாள்.

சிலகாலம் சென்றபின் அசுவினி தேவர்கள், நீராடிக்கொண்டு ஆடையால் மறைக்கப்படாதவளான அந்த சுகன்னியைக் கண்டார்கள். பார்த்தற்கு இனிய அங்கங்களுள்ளவளும் தேவராஜனுடைய புதல்வியைப் போன்றவளுமான அவளைப்பார்த்து அசுவினிதேவர்கள் எதிரில் ஓடிவந்து, " அழகிற் சிறந்தவளே! நீ யாருக்கு உரியவள்? இந்தக்காட்டில் என்னசெய்கிராய் ' கல்யாணி! உன்னை அறிய விரும்புகிறோம், உண்மையைக்கூறுதி" என்றனர். சுகன்னி ஆடையைச் சுற்றிக்கொண்டு அந்தத் தேவச்சிரேஷ்டர்களை நோக்கி, "என்னை நீங்கள் சர்யாதியின்புதல்வி யென்றும் சியவனருடைய மனைவியென்றும் தெரிந்து கொள்ளுங்கள்; என்பெயர் சுகன்னி. நான் எல்லா விதங்களாலும் எப்பொழுதும் கணவனையே அனுசரித்தவள்" என்று சொன்னாள். அசுவினிதேவர்கள் நகைத்து மீண்டும் அம்மடவாலைப் பார்த்து, '"மாதரசே! நீ எப்படி பிதாவினால் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறாய்? இந்த வனத்தில் நீ பிரகாசிக்கின்ற மின்னலைப்போல் விளங்குகிறாய். பயந்தவளே! தேவர்களுள்ளும் உனக்கு நிகராக இருப்பவளை நாங்கள் பார்கவில்லை. அழகிய ஆரணங்கே! ஆபரணங்

களில்லாதவளும் சிறந்த ஆடைதரியாதவளுமான நீ அலங்கரிக்கப் படாதவளாக இருந்தும் கானகத்தை அதிகமாகப் பிரகாசிக்கச் செய் கிருய். கல்யாணி! எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுச் சிறந்த ஆடையை உடுத்தால் நீ நன்ருகப் பிரகாசிப்பாய். இவ்வண் ணம் அழுக்கும் சேறுமுள்ளவளாயிருந்தால் பிரகாசிக்கமாட்டாய். இத்தகையளாயிருந்தும் யாது காரணம்பற்றி மூப்பினுல் தளர்ந்தவரும் காமபோகங்களுக்கு விலக்கானவருமான பதியை அடைந்திருக் கிருய்? குற்றமற்றவளே! இணையற்ற எழிலுடைய நீ இரட்சிப்பதி லும் மகிழ்ச்சியைத் தருவதிலும் திறமையில்லாத சியவனரை விட்டு விடு. எங்கள் இருவருள் ஒருவரை வரிப்பாயாக. தேவகன்னி கையைப்போன்ற காந்தியுடையவளே! இந்தப் பதிக்காக உன் யௌவனதலை வீணுக்காதே'' என்று மொழிந்தார்கள்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட சுகன்னி ஒரு சிறிதும் மனம் மாறினுளில்லை. கலங்காத சித்தத்தையுடைய அக்கற்பரசி அசுவனி தேவர்களைப்பார்த்து, "நான் பர்த்தாவாகிய சியவனரிடத்தில் பற்றுள் ளவள். என்னைப்பற்றி நீங்கள் சந்தேகிக்கவேண்டாம்'' என்றனள். அவ்விருவரும் மீளவும் அவளை நோக்கி, பெண்ணரசே! நாங்கள் தேவ வைத்தியர்கள ; உன்னுடைய பதியை யௌவனமுள்ளவரும் அழகுபொருந்தியவருமாகச் செய்வோம். பிறகு அவரும் நாங்களு மாகிய எங்களுக்குள். ஒருவரைப் பதியாக வரிப்பாயாக. பெண் மணியே! இந்த உடன்பாட்டினுல் பதியை ஆராய்ந்துகொள்'' என்று சொன்னுர்கள் சுகன்னி அந்த வசனத்தை கேட்டு சியவனரிடம் சென்று நிகழ்ந்ததைக் கூறினுள். அது கேட்ட சியவனர் மனைவியை நோக்கி, 'செய்யலாம்' என்றனர். கணவனுல் அனுமதிக்கப்பெற்ற அவள் அசுவினி தேவர்களை நோக்கி 'செய்யலாம்' என்றனள். அசுவினி தேவர்கள் மாதரசியே! உன்னுடைய பதி நீரில் மூழ்கக் கடவர்'' என்று கூறினுர்கள். அதன்பின் சியவனர் ரூபத்தை விரும்பினவராகச் சீக்கிரம் நீரில் மூழ்கினர். ஆதித்தன் புதல்வர்களா கிய அசுவினி தேவர்களும் அப்பொழுது அந்தத் தடாகத்தில் மூழ் கினுர்கள். பிறகு ஒரு முகூர்த்த காலத்திற்குப்பின் அம்மூவரும் திவ்ய ரூபத்தைத் தரித்தவர்களும், யௌவனமுள்ளவர்களும், ஒரே விதமானஉருவத்தைப் பூண்டவர்களும், மனத்திற்கு அன்பைப் பெருக்குகின்றவர்களுமாகி அத்தடாகத்தினின்றுங் கரையேறினுர் கள். அம்மூவர்களும் ஒருவரைப்போன்ற ஒருவராக இருந்தார்கள்.

அடையாளங்கண்டுபிடிக்க முடியாத நிலையில் வித்யாசமின்றி இருந்தார்கள்.

மூவர்களும் ஒன்று சேர்ந்தவர்களாக, "கல்யாணி! மங்களத்தை உண்டுபண்ணுகிறவளே! சிறந்த நிறமுள்ளவளே! எங்களுள் இஷ்டமான ஒருவரைப் பதியாக வரிப்பாயாக. புகழுள்ளவளே! நீ அசுவினிதேவர்களையாவது சியவனரையாவது யாரிடத்தில் விருப்பமுள்ளவளாக இருக்கிறாயோ அவரை வரிப்பாயாக" என்று சொன்னார்கள். அந்தத் தேவி ஒத்த ரூபத்தைத் தரித்து நிற்கின்ற மூவர்களையும் பார்த்து கற்பின் பெருமையால் மனத்தாலும் புத்தியாலும் நிச்சயித்துத் தன் பர்த்தாவாகிய சியவனரையே வரித்தாள். சியவனர் மனைவியையும் விரும்பப்பட்ட வயதையும் அழகையும் மிக்க ஒளியையும் அடைந்து கரையற்ற களிப்புற்று அசுவினிதேவர்களை நோக்கி, "வயது முதிர்ந்தவனாக இருந்த நான் உங்களால் நல்ல ரூபம் பொருந்தியவனாகவும் இளமையுடையவனாகவும் செய்யப்பட்டு கற்பரசியாகிய இவளையும் மனைவியாக அடைந்தேனாதலால், நான் அன்பினால் தேவர்கோமான் பார்த்துக்கொண்டிருக்கும்போதே யாகத்தில் சோமரசத்தைப் பருகுகிறவர்களாகச் செய்வேன். இது உண்மை" என்றனர். அவர்கள் கேட்டு மனமகிழ்ந்து வானுடு சேர்ந்தார்கள். கற்பின் மிக்க சுகன்னியும் சியவனரும் இனிது வாழ்ந்தார்கள். உத்தம மனைவியால் அடைதற்கரிய நலனை சியவனர் பெற்றனர்.

(தொடரும்)

---

## உபதேசம்.

தண்ணீரும், நீர்க்குமிழியும், வாஸ்தவத்தில் ஒன்றேயாகும். புற்புதம் நீரில் பிறந்து, நீரில் மிதந்து, நீரிலேயே மறைகின்றது. அதுபோல ஜீவாத்மாவும், பரமாத்மாவும், யதார்த்தமாக சுவரூபத்தில் ஒன்றேயாகும். பரஸ்பரம் காணப்படும் பேதங்களெல்லாம் அளவிலேயே ஒழிய இனத்தில் கிடையாது. ஜீவன் ஓர் அளவுக்குட்பட்ட சிறியவனும், பரமாத்மாவைப் பற்றி இருப்பவனுமாம். பரமாத்மாவோ எல்லையில்லா அகண்டரும், தன்னிகரில்லா சுதந்திரருமாக இருக்கிறார்.

இராமகிருஷ்ணர்.

ஓம் குஹாய நம :

# பிரமசரியம்

மெய்யன்புடையீர் !

மனிதனுடைய உயிர்வாழ்க்கை நான்கு பிரிவுகளாக அமைந்திருக்கிறது. அவை :—பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாஸம் என்பன. அவற்றுள் பிரமசரியம் என்பது உபநயனத்திற்குமேல் விவாகம் வரை நியமந்தவறாது இருக்கும் ஒரு சிறந்த நிலை. அந்த பிரமசரிய விரதத்தை விதிப்படி அனுஷ்டித்தல் வேண்டும், உலகில் பிரமசரிய நிலையை அநுஷ்டித்த பிறகே கிருகஸ்தாச்சிரமத்தையடையவேண்டும். எல்லோரும் கல்யாணத்திற்குமுன் இந்தப் பிரமசரிய நிலையில் இருக்கின்றனர். ஆனால் விதிப்படி இருக்கின்றனரா ? பிரமசரியம் என்ற நிலையை எவ்வாறு கழித்தல் வேண்டும் ? என்பது பற்றிச் சிறிது வரைகுதும்.

ஐந்தாவது ஆண்டில் சற்குருவையடுத்து அறிவைத் தருகின்ற அறநூல்களை ஓதுதல் வேண்டும். அங்ஙனம் வேதம் ஆகமம் வேதாங்கம் தருமநூல் முதலியவைகளைக் கற்குங்கால் குருபக்தி விநயம் என்ற இரு குணங்களை முக்கியமாக மேற்கொள்ளல்வேண்டும். ஆசாரியனைக் கடவுளாக நினைத்தல்வேண்டும்; "எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" என்ற அறமொழியை நோக்குக. கற்கத்தொடங்குமுன் ஒவ்வொரு நாளும் குருநாதனை வணங்கி வடக்கேனும் கிழக்கேனும் திரும்பி கைகளைக் கட்டிக்கொண்டு ஓதல்வேண்டும். அமாவாசை, பௌர்ணமி, பிரதமை, சதுர்த்தசி, அட்டமி முதலிய விலக்கப்பட்ட நாள்களில் வேதமோதுதல் கூடாது. வேதம் ஆகமம் என்ற இரு நூல்களைத் தவிர ஏனைய புராணம் வேதாங்கம் முதலிய நூல்களை அமாவாசை பௌர்ணமி என்ற நாள்களைத்தவிர மற்ற நாள்களில் ஓதலாம். பாராயண நூல்களை எந்நாளும் ஓதலாம். பழைய காலத்தில் மாணவர்கள் குருவினது இருக்கையிலேயே வசித்து வந்தார்கள். அதற்கு 'குருகுல வாசம்' என்று பெயர். அப்படி

குருவின் இருக்கையிலிருக்குங்கால் பிட்சையெடுத்து குருவின் அனுமதிபெற்று உண்ணவேண்டும். இது நெடுங்காலத்திற்கு முன் அனுசரித்த தருமம். தற்காலம் வீட்டிலிருந்து கலை கற்கிறார்கள். முக்கியமான அடியில் வரும் விதிகளைத் தவறாமல் அனுஷ்டித்தல் வேண்டும். குருநாதன் கட்டளையிடுகின்ற ஏவலை சென்னிமேற்றாங்கி சிரத்தையுடன் செய்யவேண்டும். குருவினது கட்டளையைச் செய்துவிட்டு குருவினருகிற்சென்று வணங்கி 'செய்துவிட்டேன்' என்று சொல்லி பக்கத்தில் நிற்கவேண்டும். எல்லாக் காரியங்களிலும சமர்த்தனயிருந்து 'செய்வன திருந்தச் செய்' என்றபடி ஒழுங்காகத் தொழில்களைச் செய்யவேணடும. முன்னேற்ற மடையவேண்டுமென்ற விருப்பமுடைய ஒவ்வொரு பிரமசாரியும் குருவை அலட்சியம் செய்யக்கூடாது. குருவின் வலப்பக்கமாக இருக்கவேண்டும்; குரு அழைத்தால் உடனே போகவேண்டும். நீராடி பரிசுத்தமான ஆடையை அணிந்து கடவுளை வழிபட்டு படிக்கவேண்டும். குருநாதன் ஒரு சமயம் கோபித்தாலும் அடித்தாலும் அன்பாகவும் அடக்கமாகவும் இருந்து கற்றல்வேண்டும். குருவின சமீபத்தில் இருக்கும்போது கொட்டாவி விடுதலும் தும்முதலும் கால்நீட்டியிருத்தலும் கால்மேல் கால்வைத்து அமருதலுங்கூடாது. சமயம்பார்த்து தனக்கு ஏற்பட்ட சந்தேகங்களைக் கேட்டுத் தெளிதல்வேணடும். குருநாதன் நிற்கும் போது தானும் நிற்கவேண்டும்; அவர் உட்காராமலிருக்கும்போது தான் உட்காரக்கூடாது. அவர் நித்திரை புரியாதிருக்கும்போது தான் நித்திரை செய்யப்படாது. *நிமிர்ந்த கரங்களால் அவருடைய பாதங்களை மெல்லப்பிடிக்கவேண்டும். இடப்பாதத்தை இடக்காத்தாலும் வலப்பாதத்தை வலக்கரத்தாலும் பிடித்தல்வேண்டும். "குருநாதா! இந்தக் காரியத்தைச் செய்துவிட்டேன்; இதைச் செய்யப் போகிறேன்; இன்னும் நீங்கள் எதை ஏவுகின்றீர்களோ அதையுஞ் செய்வேன்; என்று எல்லாவற்றையுந் தெரிவித்து குருவின் அனுமதி பெற்றுக்கொண்டு விதிப்படி செய்யவேண்டும். செய்துவிட்டு மீளவும் அவற்றையெல்லாம் குருவினிடம் சொல்லவேண்டும்.

பிரமசாரி பழைய சோற்றையும் தேனையும் உண்ணப்படாது. சூரியனை வீணே பார்க்கப்படாது; உறவினரிடமிருந்து உண்ணுதலும்

* உள்ளங்கை.

அறிவினர் கூட்டத்திற் சேர்தலும் கூடாது; சந்தனம், புஷ்பம், தாம்பூலம் ஆகியவற்றைத் தரிக்கப்படாது; எந்த வுயிரையும் இம் சிக்கப்படாது.

" நென்னல் லமைத்த செழுந் சோறு பைந்தேனு நீப்பர்
கொன்னே யிரவி தனை நோக்குதல் கொள்கை யன்றே "

" காழ் கொண்ட சந்தங் கமழ்தா ரடைக்காயோ டாகா
வாழ்கின்ற ஆவி யெவையேனும் வதைத்த லாகா "

—காசிகாண்டம்.

பெண்கள் சமீபத்தில் இருத்தலும், அவர்களோடு கலந்து பேசுத லும், கீதங்கேட்டலும், கூத்துப்பார்த்தலும் ஆகாவாம். காமவுணர்ச் சியை வளர்க்கின்ற கதைகளைப் (நாவல்ஸ்) படிக்கவே கூடாது. ஆடும் படங்களைப் (சினிமா) பார்க்கப்படாது; சீட்டு முதலிய தீய ஆட்டங் களை ஆடப்படாது; கிடைத்தற் கரிய நேரத்தை கமரில் காமதேனு வின்பாலைக் கவிழ்த்ததுபோல் வறிதே கழிக்கப்படாது. பெண்களைக் குறிப்புப் பார்வையாக நோக்குதல் தகாது; பயனற்ற வார்த்தைகளைப் பேசப்படாது.

அறிவு என்கின்ற பயிரை நூல்கள் என்ற நீர்விட்டு பயிர்புரிந்த நல்லாசிரியனை நிந்திக்கப்படாது; ஒரு எழுத்தையோ ? ஒரு பொரு ளையோ ? கற்றுக்கொடுத்த ஆசாரியனுடைய மனம் வருந்துமாறு நிந்தித்தோர், ஊருக்கு மத்தியில் நாயாய்ப்பிறந்து ஒரு யுகம் வரை புழுவாகப் பிறந்து துன்புறுவர்.

ஒரெழுத் தொரு பொரு ளுணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே.

—திருமந்திரம்.

வேதங்களையும், வேதங்களின் நுண்மாண் பொருள்களையும் நன் றாக எடுத்துப் போதித்தவர் ஆசாரியரென்றும், பொன் பெற்றுச் சொல்லிவைப்பவர் உபாத்தியரென்றும், எல்லா வினைகளும் ஒழியும்படி உபதேசித்தருளுகின்றவர் குருவென்றும் பெயர் பெறுவர்.

நல்வேதப் பொருள் யாவு நவின்று ளோர்கள்
தொல்லா சிரியர் பொருள்கொண் டவை சொல்லுகிற்போர்

ஒல்லாத தீங்குத் தபநாறு முபாதகி யாயர்
எல்லா வினையு முடிப்போர் தருவேன்ப ரன்றே,

—காசிகாண்டம்.

பிதா மாதா குரு இம்மூவரும் வழிபடத்தக்க தெய்வங்களாம்; பிதாவைக் காட்டிலும் மாதா உயர்வாகும்; தெளிவு உண்டாக்கிய ஆசாரியரை நிந்திப்போருடன் கூடப்படாது. தாய் தந்தை குரு ஆகிய குரவர் மூவரையும் புறங்கூறுவோர், கூர்மையான முட்கள் நிறைந்ததும் இருள மிக்கதுமாகிய நாகத்தில் அநேக காலமிருந்து வருந்துவர்.

அருண் மேவுந் தந்தைதன்னி லன்னை யதிகமாதம்
தெருள் சேர் குரவற் பழிப் போரிடை சேர்தலாகா
மருளோடு மன்னோர் புறங்கூறுநர் வைமுள் ளேற்ற
இருண் மாநிரயந் தனிற் பற்பகலெய்து வாரே.

—காசிகாண்டம்.

தாய், சகோதரி முதலியவர்களானாலும் அவர்களுடன் பிரமசாரி தனித்த இடத்தில் வசிக்கப்படாது அரசன், குரு, தமையன், மாமன் இவர்களது மனைவியரும், தன்னைப் பெற்றவளும் ஆகிய ஐவரும் தாய் மாராவர். சூரியன் உதிப்பதற்குமுன் எழுந்திருந்து நீராடி தெய்வத்தை வணங்கி நூல்களைக் கற்றல்வேண்டும்; சூரியன் உதிக்குமளவும் துயில் நீங்கி யெழாத பிரமசாரி அன்று முழுதும் புசியாமல் விரதமிருக்கக்கடவன்.

இத்தகை பிரமசரியம், பௌதிக பிரமசரியம், நைட்டிக பிரமசரியம் என இருவகைப்படும். இளமை தொடங்கி கல்யாணகாலம் வரை மேற்கூறிய ஒழுக்கத்தினின்று வழுவாதிருந்து விரதங்காப்பது பௌதிக பிரமசரியம்; மரணாந்தம்வரை விரதம் நியமித்துத் துறவியாயிருப்பது நைட்டிக பிரமசரியம்,

பௌதிக பிரமசரியத்தை அனுஷ்டிப்பவன், ஆசாரியனிடத்தில் ஓதற்பாலனவாகிய வேதமுதலிய அறிவு நூல்களை ஓதியுணர்ந்து, அவருக்கு வேண்டிய தக்ஷிணைகளைத்தந்து அவரனுமதிபெற்று, தனது ஆயுளில் நாலிலொரு பாகத்தை பிரமசரிய விரதத்திற்கழித்து (அதாவது இருபத்தைந்து ஆண்டுகளுக்குமேல்) விதிப்படி சமாவர்த்தன

மென்னும் விரதமுடிவைச்செய்து, நற்குடிப் பிறந்த நங்கையை விதிப்படி மணஞ்செய்துக்கொள்ளவேண்டும்.

நைட்டிக பிரமசரியத்தை அனுஷ்டிப்பவன், பெண்களுடைய பெயரையுஞ் சொல்லாமல், அவர்களுடைய வடிவத்தையும் நினையாமல் புலன்களை அடக்கினவனாய் ஆசையைவென்று,ஈசுரபக்தியுடன் மரண பரியந்தம் நெறிதவறாது இருத்தல்வேண்டும் ஒரு சமயம் இந்த நைட்டிக பிரமசாரி போகத்தின்கண் விருப்பமேற்பட்டால், ஆசாரியனிடஞ் சென்று உண்மையை யுரைத்து, ஆகமத்திற்கூறிய விதிப்படியே அவர் சந்நிதியில் நைட்டிக பிரமசரிய விரதத்தை இறக்கி நீராடி, அவரிடத்தில் வெள்ளை வஸ்திரம் இரண்டுபெற்று, பிராயச்சித்தஞ் செய்து முடித்து, அவரனுமதி பெற்றுக்கொண்டு விவாகஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

இவ்வாறு செய்யில் குற்றமில்லை, இப்படி விரதத்தை இறக்காது நைட்டிக பிரமசாரியாகவே இருந்துகொண்டு பெண்களுடன் சேருவானாயின், தன் உடலில் வளர்ந்த உரோமம் எத்தனை உண்டோ அத்தனை வருடம் மிகக் கொடிய ரௌரவமுதலிய நரகங்களிற் கிடந்துழலுவன். சுகசன்னி, நீரிழிவு, க்ஷயம், குஷ்டம் முதலிய நோய்களால் வருந்துவன. இவனுக்குக் கழுவாய் (பிராயச்சித்தம்) எந்த நூல்களிலும் இல்லை.

---

## யட்சப்பிரச்னை.

வினா :—பிராமணர்களுககு தேவதன்மை எது ?

விடை :—இவர்களுககு வேதாததியயனமானது தேவதன்மை.

வினா :—ஸாதுககளுக்கிருப்பதுபோல, அவர்களுக்கு தர்மம் எது ?

விடை :—ஸாதுககளுக்குபோல இவர்களுக்குத தவமானது தர்மம்.

வினா :—அவர்களுக்கு மனுஷ்யததன்மை எது ?

விடை :—மரணம் இவர்களுககுமனுஷ்யத்தன்மை.

வினா :—அஸத்துகளுக்குபோல அவர்களுக்கு அதர்மம் எது ?

விடை :—அஸததுகளுககுபோல, இவர்களுககு பரநிந்தை,

ஓம் குஹாய நம :

# ஸ்ரீ பஞ்சாக்ஷரம்.

" வேணுகோபால் "

சகோதர சகோதரிகாள் !

பஞ்சாக்ஷரம் என்பது ஐந்தெழுத்தாலாகிய திருமந்திரம். மந்திரம் என்றால் :—மந் நினைப்பவன் ; திரம்-இரக்ஷித்தல், காத்தல் ; அதாவது நினைப்பவனை இரட்சிப்பது என்று பொருள்.

யாவனொருவன் யாதொரு மந்திரத்தை முறையாக நினைப்பானாயின், அம்மந்திரம் அவனைத் துன்பத்தினின்றுங் காப்பாற்றி நன்மை யடையுமாறு அனுக்கிரகம்பண்ணு நிற்கும்.

"மகாரம் மநநஞ்சை வத்ரகாரம் த்ராணமுச்யதே
மநநத்ராணமித்யா ஹுர்மந்ரமித்ய பிதீயதே "

என்பது பிரமாணம்.

மேல்காட்டிய பஞ்சாக்ஷர மென்பது நமசிவாய என்னும் ஐந்தெழுத்துக்களாகும். இதனை உச்சரிக்குங்கால் ' சிவாய நம ' என்றமையும் இதற்குச் சூக்கும பஞ்சாக்ஷரம் என்றும் பெயர். இதன் பொருள். சி-சிவம், வ-அருள், ய-ஆன்மா, ந-திரோதம், ம-மலம். " சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் அவனெழுத் தஞ்சினடைவாம்," என்பதறிக.

அவற்றில் முன் இரண்டெழுத்துக்களும் பதியும், பின் இரண்டெழுத்துக்களும் பாசமும், நடு எழுத்தொன்றும் பசுவுமாகும். பதிக்கும் பாசத்துக்கும் இடைப்பட்டதாய் பாசத்தோடு சேர்ந்து பாசமாயும், பதியோடு சேர்ந்து பதியாயும; பாசமும் பதியும் அல்லாமல் தயங்கும் தன்மையை யுடையது பசு என்னுமுண்மை இதனால் நிலைக்கும். பதியோடு கூடிய சம்பந்தத்தை ஞான நடனம் எனவும், பசுவோடு கூடிய சம்பந்தத்தை ஊன நடனம் எனவும் பெரியோர் கூறுவர். ஊன நடனமொழிந்து ஞானநடனம் தானே ஆதரிக்கற்பாலதென வேதாகமங்கள் முழங்கும். ஆதலால் நகார மகாரங்க

ளாகிய மலங்களைப் பின்றள்ளி யகாரமாகிய ஆன்மா வகாரமாகிய அருள்கூட்டச் சிகாரமாகிய சிவத்தில் அதீதப்படும்.

இதற்குப் பிரமாணம் : விருத்தாசல புராணம்.

"மகா வக்காரம் வல்லினந்துறந்திடை யினத்தில்
இகலறுத்தின மாக்கியே நகாரமதீறய்
வகரவக்காத் தடங்கிட வொடுக்கமற்றவைபோற்
றுகளிலாவினஞ் சேர்ந்துறந் துறவர் பானின்றன்."

(பொருள்) மகார அக்ஷரமாகிய திரோதாயியை வல்லினமாகிய சிகாரவக்ஷரத்தை விடுத்து இடையினமாகிய நகார அக்ஷரமாகிய மலத்தை வகார அக்ஷரமாகிய அருளிலொடுக்கி, அவைகளை ஒடுக்கினதுபோல், குற்றமற்ற இனங்களென்னும் யகார அக்ஷரமாகிய ஆன்மாவை வகார அக்ஷரமாகிய அருளிலொடுக்கி அவ்வருளும் சிகாரவக்ஷரமாகிய சிவமும் பேதமற்று அபேதமான அத்து விதானந்த நிலையில் விளங்குகின்ற மூர்த்திகளான பெரியோர்களிடத்தில் அனுசரித்திருந்தான் சுவேதராசன் இதனைப்பிரகாராந்தமாகவும் காட்டி விவகரிப்பாம், எங்ஙனமெனின் :

நம=சீவான்மா, சிவ=பரமான்மா, ஆய=ஐக்கியம். (சிவ) பரமான்வாகிய பதிக்கும், (நம) சீவான்மாவாகிய பசுவுக்கும், (ஆய) அருட்பாசத்தி வாயிலாக ஐக்கியமுண்டாமென்பது.

இந்த பஞ்சாக்ஷரம் பிரணவத்தின் பொருளாயிருப்பதாலும் அதைப்போன்ற பிரசுக் மந்திரமாதலாலும், பரம பாவநகாமான மோக்ஷமந்திரமாகும். ஐந்தெழுத்துங்கூடிய இம் மகாமந்திரத்தின் முதலில் பிரணவமில்லை.

"வித்தியா ஸ்ருதிருத்ருநி ருத்க்ருஷ்டா ருத்ரைகாதசி நீச்ருதௌ
தத்ர பஞ்சாக்ஷரீதஸ்யாம் சிவ இத்யக்ஷா த்ராயம்"

என்பதினால் வித்தைகளெல்லாவற்றுள்ளும் சுருதியே உத்கிருஷ்டமானதென்றும், அதனுள்ளும்; உருத்திரைகாதசினியே உத்கிருஷ்டமானதென்றும், அதனுள்ளும் ஸ்ரீ பஞ்சாக்ஷரமே உத்கிருஷ்டமானதென்றும், அதனுள்ளும் சிவ என்னும் த்வயாக்ஷரங்களே உத்கிருஷ்டமானவையென்றும் தெரியவருகிறது. பிரணவம் வேறுதுணை வேண்டாது உச்சரிக்கப்படுவதேபோல் ஸ்ரீ பஞ்சாக்ஷரமும் வேறொன்றின் ஆஸ்ரயமில்லாமல் ஜபிக்கப்படுவதால் இரண்டும் தம்மில் வேறுபடாத ஓரே மந்திரமாகும். இதன் மகிமையோவெனின்:

"ஐந்து பூதமைம் பொறிகளோ டைம்புல னமர்ந்த
வைந் தெனுங் கருமேந்திய மைவர் காரணரா
மைந் தெனுந் தொழி லைம்பெரும் பிரமங்க ளனைத்து
மைந் தெழுத்தினி லுணர்த்துவ ரறிவறிந் தவரே"

"அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாகிய வக்கர சக்கரம்
அஞ்செழுத் துள்ளே யமர்ந் திருந்தானே"

அதாவது பஞ்சாக்ஷரமாவது, நகார மகார சிகார வகார யகாரங்களாகிய ஐந்தெழுத்துக்களும் முறையே, பஞ்ச பூதங்களையும், பஞ்ச ஞானேந்திரியங்களையும், பஞ்ச கன்மேந்திரியங்களையும், பஞ்ச தன்மாத்திரைகளையும், பஞ்ச கலைகளையும், பஞ்ச சதாக்கியங்களையும், பஞ்ச சக்திகளையும், பஞ்சப் பிரமங்களையும், பஞ்ச கர்த்தாக்களையும், பஞ்ச கிருத்தியங்களையும், பஞ்ச வாணங்களையும், பஞ்ச பட்சிகளையும், தமதுள் அந்தர்ப்பாவமாய்க் குறிப்பித்து விளக்கிக்கொண்டு சத்தார்த்தப் பிரபஞ்சங்களுக்கெல்லாம் பிரேரக நிலயாதாரமாயிருக்கிறது.

## இம்மட்டோ?

'சிவ' என்னும் ஆணெழுத்தும் 'நம' என்னும் பெண்ணெழுத்தும், 'ய' என்னும் அலியெழுத்தும் சேர்ந்து பதி, பசு, பாசத்திலடங்கும். இது உச்சரிக்கப்படுகிற முறைமையினாலே ஸ்தூல பஞ்சாக்ஷரம், சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம், காரண பஞ்சாக்ஷரம், மகா காரண பஞ்சாக்ஷரம், அதி சூக்கும பஞ்சாக்ஷரம் அல்லது மநாமநு என ஐவகைப்படும். போகத்தைக்கொடுக்கக்கூடிய ஸ்தூல பஞ்சாக்ஷரம் "நமசிவாய" என்றும், மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் "சிவாயநம" என்றும் சொல்லப்படும்.

சூக்கும பஞ்சாக்ஷரத்திலுள்ள சிகாரம் சிவம், வகாரம் அருள், யகாரம் ஆன்மா, நகாரம் திரோதை, மகார மலம். ஆதலின், இந்த முறைமையை யுணர்ந்து ஊன நடனமாகிய நகார மகாரத்திலே சென்று ஜனன மரணப்பட்டுப்போகாமல், ஞான நடனமாகிய சிகார வகாரத்தைப் பொருந்திச் சிகார முதலாக உச்சரித்து, அப்படி உச்சரிக்கிற முறைமையையும் விட்டு, வகாரமாகிய ஞானம் தானாய் நிற்கவே, சிகாரமாகிய ஞேயத்திலே அழுத்துவிக்கும். அது

எப்படியெனில், சத்தியாகிய வகாரம் இடமாகச் சிவமாகிய சிகாரத்தின் இடையிலழுந்தலே அத்தன்மை யுண்டாக்கும். இந்த அனுபவ ரகசியத்தையும், பஞ்சாக்ஷரம் ஏகாக்ஷரமா மாறி வகாரத்தில் நகாரமும், யகாரத்தில் மகாரமும், சிகாரத்தில் வகாரமும், அதில் யகாரமும் ஒடுங்கும் முறைமையினையும், காரணபஞ்சாக்ஷரம், மகா காரணபஞ்சாக்ஷரம், மகாமநு, இந்தமூன்றையுல் குருபரன் திருத்தாளைச் சேர்ந்து வழிபட்டுத்தெரிந்துகொள்ளலாம். இதுவே பிரம்மாநுபவம் என்னும் சுவாநுபவமாம். முடிவாக ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தில் ஒருவன் உணர்ந்துகொள்ளவேண்டியது யாதனில் துக்கநிவர்த்தியும் சுகப்பேறுமேயாம். "பாசங்கழன்றால் பசுவுக்கிடம் பதியாம்" என்றும் அனுபவாளர் உரையே சான்றாம். ஆதலாலே

"மெய்த்த வோண்சிவ தத்துவ மதனினுமேலாந்
தத்துவாந்தா மின்மை போன்மறைகளின்றலையாய்
வைத்த வைந்தெழுத் தாகிய மந்திரமதனில்
உத்தரம்பெறு மந்திரமிலையென வுணர்வாய்"

இதனால் மூலமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்துக்கு மேற்பட்ட மந்திரங்கள் இல்லையென விளங்குகிறது.

"நமச்சிவாயவே ஞானமுங் கல்வியு
நமச்சிவாயவே நானறிவிச்சையு
நமச்சிவாயவே நாநவின் றேத்துமே
நமச்சிவாயவே நன்னெறிகாட்டுமே"

பிழையுளதேல் ஆன்றோர் பொறுக்க.

---

உ

ஓம் :

| "திருப்புகழமிர்தம்" வளர்க ! | "திருப்புகழமிர்தம்" சிறப்புரை. | "ஆனந்தாமிர்தம்" தருக !! |
|---|---|---|

| | | |
|---|---|---|
| "தி | ருப்புகழமிர்தம்" மிகமிகச் சிறந்த மாசிகை ! | "தி |
| ரு | ப்புகழமிர்தம்" நம்பார்வைக்கு அரிய சஞ்சிகை ! "தி | ரு |
| ப் | புகழமிர்தம்" அறிவைப் பெருக்கும் பத்திரிகை ! "திரு | ப் |
| பு | கழமிர்தம்" உலகில் ஆராய்ச்சிக்கரிய வெளியீடு ! "திருப் | பு |
| க | ழமிர்தம்" காண்போர் கருத்திற்கிசைந்த மதிஅமிர்தம் ! "திருப்பு | க |
| ழ | மிர்தம்" அதிமிக நற்றமிழ் அணிகலன் ! "திருப்புக | ழ |
| மி | ர்தம்" நல்லரு மருந்தாகிய கற்பகம் ! "திருப்புகழ | மி |
| ர் | தம்" படிப்போர்க் கினிமை நல்குதேன் ! "திருப்புகழமி | ர் |
| த | ம்" ஆனந்தானுபவப் போகக்ஷேம ! "திருப்புகழமிர் | த |
| ம் | பூசனை செயத்தகு நல்லமிர்த மாதப் பத்திரிகை !" திருப்புகழமிர்த | ம் |

| க. அ. க. தமிழறிஞர் } * | வாழ்க ! வாழ்க !! சிறப்புடன் வாழ்க !!! | * { காயல்பட்டணம், 21—3—37. |
|---|---|---|

---

உ

ஆதிசங்கரர்

# வினா விடை மணிகள்.

கே:—எந்த ஆயுதம் எல்லோருடைய கையிலுமுள்ளது ?

ப :— யுக்தி (நியாயபூர்வமாக நிரூபணம் செய்யக்கூடிய சக்தி.)

கே :—எல்லோருக்கும் தாயார் யார் ?

ப :— பசு. (தன் குழந்தைக்குப் பால்கொடுத்துவிட்டு ஊருக்கும் பால்கொடுக்கும் பசு. அதை நாம் ரக்ஷிக்கவேண்டும்).

கே :— எது சேனை ?

ப :— தைரியம்.

கே :—எது எமன் ?

ப :— கவனமில்லாதிருந்துவிடல்.

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.



" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

| | | |
|---|---|---|
| மலர். 2<br>Vol. 2 | ஈசுவர (வருஷ) வைகாசிமீ 1௳<br>மே—1937 | இதழ் 2<br>No. 2 |

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி
யுழலாதே

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு
முனைமீதே

திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு
நடமாடுஞ்

செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்க அநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது
வருவாயே

அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சோல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார
முடிமேலே

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார
எழிலான

சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார
எதிரான

செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தில்நகர் வாழு மாண்மைக் கார
பெருமாளே.

## பதவுரை.

*அந்தண்-அழகிய குளிர்ந்த சிந்தையுடையவர்களால், மறை வேள்வி - வேதவிதிப்படி செய்யும் யாகங்களுக்கு, காவல்கார -இடையூறு நேராவண்ணம காவல்புரியும் காவல்காரரே !, செந்தமிழ் - செவ்வையான தமிழ்மொழியாலாகிய, சொல்பாவின் - புகழ்ப் பாக்களாலாகிய பிரபந்தங்களை, மாலைக்கார - மாலையாகத் தரித்துக்கொள்பவரே ! அண்டர் உபகார - தேவர்களுக்கு (சூரபன்மனுலேற்பட்ட சிறையை நீக்கி) உபகரித்தவரே ! சேவல்கார - சேவற்கொடியைக் கரத்தில் தாங்கியவரே !, முடிமேல் அஞ்சலி செய்வோர்கள் - சென்னியின்மேல் செங்கரங்களைக் குவித்து வணங்குகிற அடியார்களுக்கு, நேயக்கார - சிநேகராக விளங்குபவரே !, குன்று உருவ ஏவும் . கிரௌஞ்ச மலையை ஊடுருவிச் சென்று பிளக்குமாறு செலுத்திய, வேலைக்கார - ஞானசக்தியாகிய வேலாயுதத்தையுடையவரே !, அந்தம் வெகுவான - மிகுந்த அழகுடைய, ரூபக்கார - திருமேனியைக் கொண்டவரே !, எழில் ஆன - அழகு மிகுந்த, சிந்துர மின் மேவு - தேவயானையின் மகளாகிய தேவகுஞ்சரியம்மையார் விரும்பு*

கின்ற, போகக்கார - சிவ போகத்தையுடையவரே!, விந்தை குற மாது - அற்புதமடையத்தக்க அரிய குணங்களையுடைய குறமகளாகிய வள்ளிநாயகியாருடன், வேளைக்கார - பொழுதைப் போக்குபவரே!, செஞ்சொல் - செவ்வையான சொற்களையுடைய, அடியார்கள் - அடியவர்களிடத்து, வாரக்கார - அன்புடையவரே!, எதிர் ஆன - போர்க்களத்தில் எதிர்த்துவந்த, செஞ்சமரை - உதிரப்பெருக்கத்தால் சிவந்த அசுரர்களின் யுத்தத்தை, மாயும் மாயக்கார - இமைப்பொழுதில் மாயக்காரன்போல் மாய்த்தவரே!, துங்க ரண சூர - பரிசுத்தமான போர்வீரனாகிய சூரபன்மனை, சூறைக்கார - சண்டமாருதம்போல் அழித்தவரே!, செந்தில் நகர் வாழும் - திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில் வசிக்கின்ற, ஆண்மைக்கார ஆண்மை (திடம்) யை உடையவரே!, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே!, முந்து தமிழ் மாலை - பழமையான தமிழ்மொழியால், கோடி கோடி - கோடிக்கணக்கான கவிகளை, சந்தமொடு - சந்தத்தோடு, நீடு பாடி பாடி - நீளமாகப் பாடிப்பாடி, முஞ்சர் - இறந்துபோகின்ற கீழ்மக்களுடைய, மனைவாசல் தேடி தேடி - வீட்டுவாசலைத் தேடித் தேடி, உழலாது -- (ஏ-அசை) பொருள் விருப்பத்தால் உழன்று அலையாவண்ணமும், முந்தைவினை (ஏ-பிரிநிலை) பிறவிகள்தோறும் புரிந்து பக்குவத்திற்கு வாராத சஞ்சித வினைகள், வாராமல் போக - அடியேனைத் தொடர்ந்துவந்து துன்புறுத்தாமல் விலகிப்போகவும், மங்கையர்கள் காதல் - பெண்கள்மீதுள்ள ஆசையானது, தூரத்து ஏக - அடியேனைவிட்டு மிகுந்த தூரத்தில் ஓடிப்போகவும், முந்து அடிமையேனை - வழிவழி அடிமைப்பட்ட பழமையான தொண்டனாகிய அடியேனை, ஆள (தான் உம்-அசைகள்) -ஆட்கொள்வதற்காக, முனைமீது (ஏ-அசை) - போர்க்களத்தினிடம், திந்திதிமி தோதி . . செஞ்செணகு சேகு - என்ற, தாளத்தோடு - தாளவரிசையுடன், நடமாடும் - நடனம் செய்கின்றதும், செம் சிறிய கால் - செவ்வையான சிறிய கால்களையுடையதும், விசாலதோகை - விசாலமான தோகையை யுடையதும், துங்க அநுகூல பார்வை - விக்கினமில்லாமையை யுண்டுபண்ணுகின்ற பரிசுத்தமான அருட்பார்வையையுடையதும், தீர - தைரியமுடையதும், செப்பொன் - சிவந்த பொன்னைப் போல் ஒளி செய்வதுமாகிய; மயில்மீதில் (ஏ-அசை) - மயில்வாகனத்தின்மீது ஊர்ந்து, எப்போது வருவாய் (ஏ-அசை) எந்தச் சமயத்தில் வந்தருள்வீர்?

## பொழிப்புரை.

அந்தணர்களால் வேதவிதிப்படி புரியும் வேள்விகளுக்கு இன்னல் நேராவண்ணம் காவல் புரிபவரே!, செந்தமிழாலாகிய புகழ்ப்பாவினங்களை மாலையாகத் தரித்துக்கொள்பவரே! தேவர்களுக்கு அசுரரா லேற்பட்ட சிறைத்துன்பத்தை நீக்கி உதவி செய்தவரே! சேவற் கொடியைக் கரத்திலேந்தியவரே! சென்னிமேற் கரங்களைக் கூப்பி அஞ்சலி அஸ்தராகநின்று அன்புடன் வந்தனஞ்செய்வோர்களது சிநேகிதரே! (தாரகனுக்குத்துணைசெய்து மாயைக்கிருப்பிடமாயிருந்த) கிரௌஞ்சமலையை ஊடுருவிச்சென்று பிளந்தழிக்குமாறு செலுத்திய வேற்படையை யுடையவரே! சிறந்தஎழி லுடைய இன்பவடிவினரே! அழகு மிகுந்த தேவயானையம்மையார் விரும்புகின்ற சிவபோகத்தை யுடையவரே! அதிசயமுறத்தக்க அருங்குணங்களையுடைய குறவர் குலக்கொழுந்தாகிய வள்ளிநாயகியாருடன் பொழுதுபோக்குபவரே! செவ்வையான சொற்களையுடைய அடியார்களிடத்தில் அன்புடையவரே! எதிர்த்துவந்த உதிரத்தால் சிவந்த அசுரர்களை ஒரு கணப் பொழுதிற்குள் மாயக்காரன்போல் மாய்த்தவரே! பரிசுத்தமான போர்வீரனாகிய சூரபன்மனை சுழல்மாருதம்போல் அழித்தவரே! திருச்செந்திலம்பதியில் வாழ்கின்ற ஆண்மையை யுடையவரே! பெருமையிற் சிறந்தவரே! பழமையான தமிழ்மொழியால் கவிமாலைகளை சந்தத்தோடு நீளமாகக் கோடிகோடியாக எந்நேரமும் பாடிக்கொண்டு, அழிந்துபோகின்ற மனிதர்களின் வீட்டுவாசல் தோறும் அவர்களைத் தேடிக்கொண்டு உழன்று அவமே அலையா வண்ணமும், பிறவிகள்தோறும் புரிந்த பழைய வினைகளாகிய சஞ்சித வினை என்னைவந்து தொடராமல் விலகிப்போகவும், பெண்கள்மீதுள்ள ஆசைப்பெருக்கமானது அடியேனைவிட்டு நெடுந்தூரத்தில் ஓடிப்போகவும், வழிவழியாக அடிமைப்பட்ட பழைய தொண்டனாகிய அடியேனை ஆட்கொள்ளுமாறு, போர்க்களத்தில் திந்திதிமிதோதி தீதித்திதி தந்தத்தன தான தானத் தான செஞ்செணகு சேகு என்ற தாளவரிசைகளுடன் நடனமிடுவதும், செவ்வையான சிறிய பாதமும் விசாலமான தோகையும், அநுகூலத்தைச் செய்யும் தூய்மையான பார்வையும் தைரியமும் உடையதும், செம்பொன்போன்ற பிரகாசத்தை யுடையதுமாகிய மயில்வாகனத்தின்மீது எக்காலத்தில் வந்து திருவருள் புரிவீர்?

## விரிவுரை.

முந்து தமிழ் :—

வடமொழிக்கும் தென்மொழிக்கும் ஆசிரியர் சிவபெருமானே யாவர். வடமொழியைப் பாணினிக்கும், தென்மொழியை அகத்தியருக்கும் சிவபெருமான் உபதேசித்தனர். சிவபெருமான் இந்த இரு மொழிகளின் வடிவமாக விளங்குகிறார்.

"ஆரியமுஞ் செந்தமிழும் ஆனான்காண்"

— தமிழ்மறை

இந்த இரு மொழிகளில் ஆரியம் உலகவழக்கினின்றும் ஒழிந்தது. செந்தமிழ்மொழி பல்லாயிரம் ஆண்டுகளாக இளமையாகவே செழித்தோங்கியுளது. முச்சங்கத்திலும் நின்று நிலவியது. சாக்ஷாத் சிவபெருமானே மதுரையில் புலவர் குழாங்களில் தாமும் ஒருவராக இருந்து ஆராய்ந்த தனிச்சிறப்புடைத்து. நேற்று தோன்றி இன்று மறையும் ஏனைய மொழிகள்போலல்லாது எக்காலத்தும் எழில் குன்றாமல் இனிமை பயப்பது இத்தமிழ்மொழியே யாகும். சிவபெருமானே இதற்கு ஆசிரியராதலால் தொன்மை யுடைத்து. எல்லா மொழிகளுக்கும் முதன்மையுடைத்து எனினும் அமையும்.

முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாதே :—

இத்தகைய அரிய தமிழைப்பயின்று அம்மொழிக்குத் தலைவனாகிய இறைவனைப்பாடி அதன் பயனைப்பெறாது, பொருள் விருப்பத்தால் இன்றிருந்து நாளையிறக்கும் மனிதர்கள் வீடுதோறும் சென்று கொடாதவனைப் பாரிகாரி என்றும், குணமில்லாத கீழ்மகனை தருமபுத்திரனுக்கு நிகரானவனென்றும், சிறிதும் வலியற்றவனை விஜயனென்றும் வறிதே புகழ்ந்து வாழ்நாளையும் கல்வியறிவையும் களரிற் கவிழ்த்த காமதேனுவின் பாலாக வீணாக்குகின்றனர்.

மிடுக்கிலா தானை வீமனே விறல் விசயனே
வில்லுக் கிவனென்று
கொடுக்கிலா தானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப்பாரிலை
பொடிக்கொள் மேனியெம் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவோர்காள்

அடுக்குமேல் அமருலகம் ஆள்வதற் கியாது
மையுற வில்லையே.

—சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

" வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரிகாரி எனறிசை வாது கூறி
வந்தியாபோல வீணி லழியாதே "

—திருப்புகழ்.

மூந்தை வினை:—

பிறவிகள்தோறும் மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் புரிந்த வினைகளானது மலைபோற் குவிந்து அனுபவித்தற்குரிய பக்குவப்படாது குவிந்துள. அவைகட்கு சஞ்சிதமெனப் பெயர். அவற்றை இறைவன் திருவருளாலேயே ஒழித்தல்வேண்டும். அந்த வினைகள் அழிந்துபோகும்வண்ணம் குமாரநாயகனை விரும்பி அழைக்கின்றார். வேலாயுதத்தையுடைய வீரன் அப்பெருமானே யாவர். வினைகளை அழிக்கவல்லது வேற்படை யொன்றேயாம். வினைகளழியவேண்டுமாயின் வேற்படையைத்தாங்கிய விமலனை வழிபடவேண்டும். வினைகளை அழிக்க வல்லது வேற்படையென்பதை அடியில் வரும் வாக்குகள் வலியுறுத்துமாறு காண்க.

" நீசர்கள்த மோடெனது தீவினையெலா மடிய
நீடுதனி வேல்விடு மடங்கல் வேலா "

—(ஆறுமுகம்) திருப்புகழ்.

" வினையோட விடுங்கதிர் வேல் "

—கந்தரனுபூதி.

மங்கையர்கள் காதல் தூரத்தேக :—

பொன்னாசையும் மண்ணாசையும் மனிதப்பிறவிக்கேயுள. பெண்ணாசை ஒன்றே எல்லாப் பிறவிகளுக்கும் உண்டு. எனவே பிறவிகள்தோறும் தொடர்ந்துவருவதாகிய பெண்ணாசையை இறைவன் திருவருளாலன்றி ஒழிக்கமுடியாது இதுவேயுமன்றி அவ்வாசை மிகவும் வலியுடையதாதலால் சிறிது அருகிலிருந்தாலும் உயிரைவந்து பற்றி மயக்கத்தைச் செய்யும ஆதலால் இம்மாதராசை மிகமிகத் தூரத்திலே யகலவேண்டும்.

கள்ளானது குடித்தாலன்றி மயக்கத்தை யுண்டுபண்ணுது. காமமோ கண்டாலும் நினைத்தாலும் மயக்கத்தை யுண்டுபண்ணும். ஆதலால் இப்பெண்ணாசையைப்போல் மயக்கத்தைத் தரும் வலியுடைய பொருள் வேறொன்றும் இல்லை. இதனை அடியில்வரும் வடமொழி தென்மொழி மறைகளாற் கண்டு தெளிக.

மாத்யதீ ப்ரமதாம் த்ருஷ்ட்வா ஸுராம் பீத்வாசமாத்யதீ!
தஸ்மாத் த்ருஷ்டி விஷாம்நாரீ தூரத: பரிவாஜயேத்||

—நாரதபரிவ்ராஜகம்.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

—பொதுமறை.

தீயைக்காட்டிலும் காமத் தீ கொடியது; தீயில் விழுந்தாலும் உய்வு பெறலாம்; காமத்தீயில் விழுந்தாக்கு உய்வு இல்லை; தீயானது உடம்பைமட்டும் சுடும்; காமத்தீ உடம்பையும் உயிரையும் உள்ளத்தையும் சுடும். அன்றியும் அணுகமுடியாத வெப்பமுடைய அக்கினிவந்து சூழ்ந்துகொண்டால் நீருள் மூழ்கி அத்தீயினுலுண்டாகும் துன்பத்தை நீக்கிக்கொள்ளலாம். காமத்தீயானது நீருள் மூழ்கினும் சுடும்; மலைமேல் ஏறி ஒளித்துக்கொண்டாலும் சுடும்.

ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும் — நீருள்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும்.

—நாலடியார்.

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற் சுட லாற்றுமோ தீ.

—திருக்குறள்.

தீயானது தொட்டால்தான் சுடும்; காமத்தீயானது நினைத்தாலும் சுடும்; கேட்டாலும் சுடும்; இது வேண்டாமென்று தள்ளினும் ஓடிவந்து சுடும்; இதுவேயுமன்றி நஞ்சை யருந்தினல்தான் கொல்லும்; இக்காமமாகிய விஷம பார்த்தாலும் நினைத்தாலும் கொல்லுந்தகையது. ஆதலால் காமமானது விஷத்தைக்காட்டிலும், கள்

லைக்காட்டிலும், தியைக்காட்டிலும், ஏனைய சொல்லும் பொருள்களைக்காட்டிலும் மிகவும் கொடியது.

உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே.

நெஞ்சினு நினைப்பரோ நினைந்து ளார்தமை
எஞ்சிய துயரிடை யீண்டை யுய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்து மாதலால்
நஞ்சினுந் தீயது நலமில் காமமே.

—கந்தபுராணம்.

முந்தடிமையேனை :—

அருணகிரிநாத சுவாமிகள் வழிவழியாக முருகனிடத்தில் அடிமைத்திறம் பூண்டவர். இதனை அடியில் வரும் திருப்புகழ் வாக்குகள் வலியுறுத்துமாறு காண்க.

" பழைய நினது வழியடிமையும் விளங்கும் படிக்கினி
துணாத்தி யருள்வாயே"

" விராலி மலையில் விளங்கிய கந்த என்றுனை
மகிழ் வொடு வந்திசெய் மைந்த னெனைறெனை
வழிவழி யன்புசெய் தொண்டு கொண்டருள்
பெருமாளே"

" தஞ்ச மாகியே வழிவழி யருள்பெறும்
அன்பினு லுன தடிபுக ழடிமை."

" திந்தி திமிதோதி . . . . நடமாடும் "

மயிலினது நடனத்தின் சிறப்பை வர்ணிக்கின்றனர். குமாரக் கடவுள் ஊர்ந்துவரும் பசும்பொன் மயில், சக்ரவாளகிரி கிழிபடவும், கிரௌஞ்சசைலம் பிளக்கவும், மகாமேருகிரியும் அஷ்டகுலாசலங்களும் உலகங்களும் குலுங்கவும், ஆதிசேடனது ஆயிரம்பணமகுடங்களும் அதிரவும், சூரபன்மன்முதலிய அவுணர்கள் திடுக்கிட்டு நடுநடுங்கவும், நடிக்கின்ற திறத்தை அருணகிரியாரேயன்றி மற்றுயாரே புகழவல்லார்.

" சக்ரப்ரசண்டகிரி முட்டக்கிழிந்துவெளி
பட்டுக்ரவுஞ்ச சயிலந்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
தனிவெற்பு மம்புவியுமெண்
டிக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு
சித்ரப்பதம் பெயரவே
சேடன்முடி திண்டாட ஆடல்புரிவெஞ்சூரர்
திடுக்கிடநடிக்கு மயிலாம்."

—மயில்விருத்தம்.

அந்தண்மறை வேள்வி காவற்கார :—

அந்தண் என்பதை யாகத்திற்கு அடைமொழியாகக்கொண்டு அழகியதும் குளிர்ந்ததுமாகிய யாகமென்பாரும் உளர்.

வேதவிதிப்படி அந்தணர்களால் நியமத்துடன் புரியும் யாகத்திற்கு முருகப்பெருமான் காவல்காரராகஇருந்து இடையூறுகளை நீக்கி இன்பத்தை நல்குகின்றனர்.

## யாக ரக்ஷக வரலாறு

காசிபமுனிவர்க்கு அதிதியென்னும் பத்தினியிடந் தோன்றியவர்கள் ஆதித்யர் என்னும் தேவர்கள். திதியென்னும் பத்தினியிடம் தோன்றியவர்கள் தைத்தியர்கள். திதி மைந்தர்களாகிய அசுரர்களுக்கும் சுரர்களுக்கும் போர்தொடங்கி இருதிறத்திலும், பலர் மடிந்தனர். தேவர் வேண்டுகோளுக்கிணங்கி திருமால் பாற்கடல் கடைந்து அமிர்தத்தைத் தேவர்களுக்கீந்து, அசுரகுலத்தை அடியோடு அழித்தனர். அஃதறிந்த திதியென்பாள் மிகவும் மனம்வருந்தி, காசிபரிடம்வந்து தன் குலநாசத்தைக்கூறி "நாயக! என் சந்ததி வளருமாறு ஓர் புதல்வனைத் தந்தருள்வீர்" என்று முறையிட்டனள். காசிபமுனிவர் "அன்புள்ளவளே! அஞ்சற்க; நின் அவாவின்படி குலவிருத்தி செய்ய ஓர் புதல்வனைத் தருகின்றேம்' என்று அருளுரைகூறி, குமாரக்கடவுள் வீற்றிருந்தருள்கின்ற திருத்தலங்கள் அறுபத்து நான்கனுள் ஒன்றாய புத்திரகாமம் என்னும் புனிதக்ஷேத்திரத்தையடைந்து, ஆங்கோர் தூய இடத்தில் சால்யோத்தாரணம், தாரை சுத்திமுதலியவைகளுஞ்செய்து யாகசாலை வகுக்கத் தொடங்கினர். மனுசூத்திரம், இரவி சூத்திரம், மூனி சூத்திரம், மானவ சூத்திரம்,

திரபாகமண்டபம் என்னும் ஐவகைப்படும் யாகசாலைகளுக்குள் தங் கருமத்திற்குரிய யாகசாலை மானவகுத்திரமாதலின் அதனைவகுத்து, வேதிகை, ஊர்த்வபட்டி, அதோபட்டி, துவாரம், குண்டலங்கள் இவை கற்பித்து, வேதியின் நடுவிலே பிரமபதமெனவும், நாற்புறத் திலும் தெய்வபதம், மானுடபதம், பைசாசபதம், இராக்கதபதம் என் னும் பதங்களும், அவைகளில் ஊர்த்துவமேகலை, அதோமேகலை, மத்திய மேகலை இவைகளும் கற்பித்துக் குண்டயோனி முதலியவை யும் வகுத்தார். மேலும் யாகசாலைக்குரியனவெல்லாம் செய்து, மறை முறைப்படி சிவாகம மந்திரங்களைக்கூறிச் செய்வாராயினர்.

"அந்த யாக முற்றுமேல் திதியென்பாள் வயிற்றில் கருப்ப முண்டாகும்; அங்ஙனமுண்டாயின் நமக்கும் நம் குலத்தார்க்கும் அழிவு நேரிடும்" என்று தேவர்கோமானும் திருமாலும் இடையூறு களை யியற்றத்தொடங்கினர்

காசிபர் அஃதுணர்ந்து வேள்விப்பதியாகிய வேற்கரத்தண்ணலை வேண்டுவாராயினர்.

யாவனங்கி வடிவானோன்
யாவனயத்தை யூர்ந்திடுவான்
யாவனங்கி பூவெனமஃ
மறைகளியம்பு மகபலத்தை
யாவன்கொடுக்கும் பொறியாகத்
தோன்று மெழிலோன்முக்கண்ணன்
யாவனவன்றன் பதமலர்க்கிங்
கடியேன் சரணம் புகநின்றேன்

யாவன் அக்கினிவடிவாயிருப்போன்; எவன் மேடவாகனத்தை யூர்வோன்; அம்மூர்த்தி அடியேனையும் யாகத்தையும் காத்தருள்க. 'சிவாக்கினிபூ' என்று வேதங்கள் முழங்கும் பொருளாயிருப்பவன் எவன்? யாகபலப்ரதான மூர்த்தி யாவன்? ஊர்த்வரேதசனும் அறு திசைகளைக் காப்பவனும் யாவன்? குமாரன் திரியம்பகன் யாவன்? அக்கடவுள் அடியேனையும் யாகத்தையும் காத்தருளும்படி அடைக் கலம் புகநின்றேன். யாகத்திலே மும்முறை "சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!! சுப்ரமண்யோம்!!! என்று வேதங்களால் அழைக் கப்பெறும் ஆறுமுகப்பரம்பொருளுக்கு அடைக்கலம் என்று இவ் வாறு துதித்தார்.

இவ்வொலிகேட்டதும் சேய்குரல்கேட்ட தாய்போல் தண்ணருள் சுரந்து தனிவேற்பரமன் பாலவடிவத்துடன் வேலாயுதமும் பல்லவமுந்தரித்த திருக்கரத்தினராய்த்தோன்றி, "அருந்தவத்தோய்! அஞ்சற்க, யாங்காத்தருள்புரிகின்றேம்; யாகத்தை முடிக்குதி" என்றருளினார். காசிபமுனிவர் கந்த சகத்திரநாமத்தால் அர்ச்சித்துச் சோடச ரூபதியானஞ்செய்து யாகம் புரிவாராயினர்.

தேவர்கள்புரியும் அபிசாரவேள்வியினின்றுந்தோன்றி, மலையன், மாரன் என்னும் அசுரர் இருவரனுப்பப்பட்டார். அவ்வசுரர்கள் முனிவரையும யாகப்பொருள்களையும் விழுங்கவேண்டுமென்று ஆரவாரித்து நெருங்கினர்கள். காசிபா பயந்து, ஞானசத்திதரா! பாலரூபா! பாஞ்சுடரே! ஓலம ஓலம்" என்று துதித்தனர். அதுகேட்ட என்றுமகலாத இளமைக்கார எந்தையார் தங்காததிருந்த பல்லவத்தால் அவ்வசுரர் இருவரையும் கொன்று யாகத்தைக் காத்தருளினர். முனிவர் யாகத்தை நிறைவேறறி, ஆங்கு முருகவேளை பிரதிட்டை செய்தனர். அதுவே புத்திரப்பேற்றை யளிததகால் புத்திரகாமம் என்னும் பெயர் பெற்றது.

வரனயன் சுதன்றன் மனையருட்டிதிதன்
வமிசத்தை யழித்தமாயவனை
எரிசதக் கிருதை யழிசுதற் றருகேன்
றிரக்கவோர் வேள்வியை யியற்ற
வரியிருவருஞ் செயல்வறை தீர
வந்தடர் மாரனோர் மலையார்
பரிவுற வழித்துக் காத்தனன் வேவிப்
பதிபுத்ர காமநற் றலமே

இன்னணம் எம்பெருமான் அந்தணர்கள் மறைமுறை வழாது புரியும் யாகங்களை காத்தருள் புரிவதை நக்கீரதேவரும் கூறுமாறு காண்க.

"மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்"
—திருமுருகாற்றுப்படை.

சேந்தமிழ் சோல்பாவின் மாலைக்கார:—

செந்தமிழ்ப் பாமாசிரியனும் செவ்வேட்பரமன் அடியர்களால் அணியப்படும் செந்தமிழ்ப் பாமாலைகளை அன்புடன் தரித்துக்கொள்ளுகிறார்.

" விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்த பலமுட னோதி மகிழ்வோனே"
—(வரிக்கலை) திருப்புகழ்.

அண்டருபகார :—

அண்டர் - தேவர், உபகாரன் - உபகரித்தவன். சூரபன்மனால் சிறைப்பட்டு நூற்றெட்டு யுகங்களாக மிகவும் வருந்தி இனி உய்வு பெறுவேமோ என்று ஏங்கியிருந்த தேவர்களுடைய சிறையைமீட்டு, பொன்னாடு தந்து இன்பவாழ்வில் இருக்கவைத்தவர் நம் குமார மூர்த்தியே யாதலால் தேவசகாயனானார்.

சேவற்கார :—

பக்தர்கள் இடையூறுற்று முறையிட்டகாலத்தில் முருகப்பெருமான் தான்வரும் குறிப்பை முன்னரே ஒலியால் புலப்படுத்தும் சேவற்கொடியைக் கரத்தில் தாங்கிக்கொண்டுவருவார். இதனை நம் அருணகிரியார் பிறிதோரிடத்தில் "முருகா! நான் கந்தா என்று அழைக்கும்போது தாங்கள் சிவந்த சேவற்கொடியைக் கரத்திலேந்தியவண்ணம் வரவேணும்" என்பதை உற்றுநோக்கி உள்ளம் மகிழ்க

" சென்றே யிடங்கோள் கந்தாயெனும்போ
செஞ் சேவல்கொண்டு வரவேணும்."
—(அன்பாக) திருப்புகழ்.

சிறைப்பட்டிருந்த இந்திர குமாரனாகிய சயந்தனுடைய கனவில் அறுமுகனார் அருள் புரிந்தபோது கோழிக்கொடியுடன் சென்றார் என்ற அச்சரிதையை விரித்தோதும் முதல்வன் புராணத்துள் கண்டு தெளிக.

ஆரணம் பயில் ஞான புங்கவ
சேவலங் கொடி யான பைங்கரா
ஆவினன்குடி வாழ்வுகொண்டருள் பெருமாளே.
—(மூலமந்) திருப்புகழ்.

முடிமேலே அஞ்சலிசெய்வோர்கள் நேயக்கார :—

இறைவனை வழிபாடு செய்யுங்கால் கரங்களை சிரங்களுக்குமேல் பன்னிரண்டங்குலம் உயரக்கூப்பி வணங்கவேண்டும். அங்ஙனம் அன்புடன் அஞ்சலியஸ்தராக நின்று வழிபாடு செய்வோர்களுக்கு தேவர்களுங் காணவொண்ணாத தேவ தேவனும் திருமுருகேசன் நேயக்காரனாக எளிதில் இரங்கி இன்னருள் புரிகிறான்.

குன்றுருவ ஏவும் வேலைக்கார :—

இதன் விரிவை திருப்புகழமிர்தம் முதலாவதாண்டு மலர் 1, 30-ம் பக்கத்திற் காண்க.

அந்தம் வெகுவான ரூபக்கார :—

முருகனே முழுதுமழகிய முதல்வன் என்பதை முருகன் பெருமை என்ற கட்டுரையில் விரித்து எழுதியுள்ளோம். திருப்புகழமிர்தம் மலர் 1, பக்கம் 208-ல் காண்க.

சிந்துரமின் மேவு போகக்கார :—

உயிர்களுக்கு இன்பத்தை நல்குவதற்காக இறைவன் கிரியா சக்தியாகிய தேவகுஞ்சரியுடன் போகமூர்த்தியாக விளங்குகின்றனன்.

குறமாது வேளைக்கார :—

வேளைக்காரன் வகுப்பைக் காண்க.

செஞ்சொலடியாாகள் வாரகார —

இனிய சொற்களையுடைய அடியார்களுக்கு அன்புடையவராக ஆண்டவன் விளங்குகின்றனர்.

" அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல
அடியாாக்கு நல்ல பெருமாளே."

—(குடிவாழ்கை) திருப்புகழ்.

துங்கரணசூர சூரைக்கார :—

" துரிதமிடு நிருதர்புர சூறைக்கார பெருமாளே."

—(ஒருபொழுது) திருப்புகழ்.

ஆண்மைக்கார :—

" ஆரியபரம ஞானமு மழகும்
ஆண்மையு முடைய பெருமாளே'

—(தோரண) திருப்புகழ்:

## கருத்துரை.

யாகரக்ஷகரே! தமிழ் மாலையை யணிபவரே! தேவசகாயரே! சேவற்கொடியுடையவரே! வணக்கம்புரிவாரது நேயரே! குன்றெறிந்த குமாரமூர்த்தியே! வல்லீதேவ சேனாசமேதரே! அடியார்க்கு அன்பரே! அசுரகுலகாரரே! செந்திலாதிப! தமிழ்ப்பாக்களைப் பாடி அழிகின்ற மனிதர்கள் வாசல்தோறும் அலையாமலும், பண்டை வினை நீங்கவும், பெண்ணாசையறவும், செம்பொன் மயில்மீது வந்தருள்வீர்.

---

உ

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது.)

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

मयूराधिरूढं महावाक्यगूढम्
मनोहारिदेहं महच्चित्तगेहम् ।
महादेवदेवं महावेदभावम्
महादेवबालं भजे लोकपालम् ॥

(3) மயூராதி4 ரூட4ம் மஹாவாக்ய கூ3ட4ம்
மனோஹாரி தே3ஹம் மஹச்சித்த கே3ஹம் ।
மஹாதே3வ தே3வம் மஹா வேத3 பா4வம்
மஹா தே3வபா3லம் ப4ஜே லோகபார்லம் ॥

## அவதாரிகை.

இந்த சுலோகத்தில் குமாரக்கடவுளது பெருமைகளை கூறித் துதிக்கின்றார்.

## பதவுரை.

மயூராதி ரூடம் — மயிலின்மீது ஏறிக்கொண்டிருப்பவரும்,
மஹாவாக்ய கூடம் — தத்வமஸி முதலிய மஹாவாக்கியங்களின் சூட்சுமமாக (பொருளாக) இருப்பவரும்,
மனோஹாரி தேஹம் — அழகிய சரீரத்தை யுடையவரும் (அருளுருவத்தை யுடையவரும்),
மஹச்சித்த தேஹம் — பெரியோர்களின் உள்ளமே திருக்கோயிலாகக்கொண்டவரும்,

மஹாதேவதேவம — பிரமன் விஷ்ணுமுதலிய தேவச்சிரேட்டர்களுக்கும் தேவனும், (அல்லது பிரணவார்த்தத்தை உபதேசித்த குருவாகையால் பரமசிவனுக்கும் தேவனும்),

மஹாவேத பாவம் — வேதங்களின உட்கருத்தாக இருப்பவரும்,

மஹாதேவ பாலம் — சிவபெருமானுடைய குமாரரும,

லோக பாலம் — உலகத்தைக காப்பவருமான குமாரக்கடவுளை,

பஜே — வழிபடுகிறேன்.

## பொழிப்புரை.

மயிலை வாகனமாக வுடையவரும், தத்துவமஸி முதலிய மஹா வாக்கியங்களுக்குள் சூட்சுமார்த்தமாக விளங்குபவரும், பெரியோர்களின் உள்ளத்தை ஆலயமாகக்கொண்டவரும், அழகிய அருட்டிருமேனியையுடையவரும், பிரமவிஷ்ணுவாதி தேவச்சிரேட்டர்களுக்கெல்லாம் வழிபடுகடவுளும், பெருமைபொருந்திய வேதங்களின் தாத்பரியரும், பரமசிவனுக்குப் புத்திரரும், உலகத்தை இரட்சிப்பவருமாகிய குமாரக்கடவுளை நான் வழிபடுகிறேன்.

**यदा संन्निधानं गता मानवामे**
**भवाम्भोधि पारं गतास्तेन दैव ।**
**इति व्यञ्जयन् चिन्दुतीरेय आस्ते**
**तमीडे पवित्रं पराशक्ति पुत्रम् ॥**

(4) யதா[3] ஸந்நி[4]தாநம் கதா[3] மாநவாமே
பவாம்[4] போ[4]தி[3]பாரம் க[4]தாஸ்தேத தைவ ।
இதிவ்ய ஞ்ஜயன் ஸிந்து[4] தீரேய ஆஸ்தே
தமீடே[3] பவித்ரம் பராசக்தி புத்ரம் ॥

## அவதாரிகை.

இந்த சுலோகத்தில் சுவாமிநாதன் சமுத்திரக்கரையில் எழுந்தருளியிருக்கும் காரணத்தை விளக்குகிறார்.

## பதவுரை.

மாநவா: — மனிதர்கள்,
யதா — எப்பொழுது,
மே — எனது,
ஸந்நிதானம் — சந்நிதானத்தை,
சதா. — அடைகிறார்களோ,
ததாஏவ — அப்போதே,
தே — அவர்களை
பவாம் போதி பாரம்—பிறவிக்கடலின் மறுகரையை (முத்தியை),
கதா — அடைகிறார்கள்,
இதி — என்று

வ்யஞ்ஜயன் — (குறிப்பாக; உணர்த்தும்பொருட்டு.
ய: — யாதொரு சுவாமியானவர்,
ஸிந்துதீரே — சமுத்திரக்கரையில்,
ஆஸ்தே — எழுந்தருளியிருக்கிறாரோ,
தம் — அந்த
பவித்ரம் — பரிசுத்தமான,
பராசக்தி புத்ரம—பராசக்தியின் புத்திரரை,
ஈடே — துதிக்கின்றேன்.

## பொழிப்புரை.

மக்கள் எனது சந்நிதியை அடைந்தமாத்திரத்திலேயே அபாரமாகிய சமுசாரசமுத்திரத்தின் மறுகரையை யடைந்து முத்தியின் பத்தை நுகர்கின்றனர் என்னும் உண்மையை உணர்த்தும்பொருட்டு கருணைக்கடலாகிய யாதொரு கடவுள் கடற்கரையில் வசிக்கின்றாரோ? பரிசுத்தரும் பராசக்தியின் புதல்வருமாகிய அவரைத்துதிக்கின்றேன்.

यथाब्धेस्तरङ्गा लयं यान्ति तुङ्गा
स्तथैवापदःसन्निधिं सेवमाने ।
इतीवोर्मीपङ्क्तीर् नृणां दर्शयन्तम्
सदा भावये हृद्सरोजे गुहन्तम् ॥

2 3 4 3 3
(5) யதாப்தே ஸ்தரங்கா லயம்யாந்தி துங்கா

3 3 4
ஸ்ததைவாபத: ஸந்நிதிம் ஸேவமானே ।

3
இதீ ஓர்மிபங்த்தீர் ந்ருணும் தர்சயந்தம்

3 4 3
ஸதா பாவயே ஹ்ருத் ஸரோஜே குஹந்தம் ॥

## அவதாரிகை.

இச்சுலோகத்தில் குகப்பெருமானுடைய சந்நிதியை அடைந்தவர்களுக்குத் துன்பமுண்டாகாது என்று விளக்குகிறார்.

## பதவுரை.

யதா — எவ்வாறு,
அப்தே: — சமுத்திரத்தின்,
துங்கா: — பெரிய
தரங்கா: — அலைகள்,
லயம் யாந்தி — நாசத்தை யடைகின்றனவோ,
ததா — அவ்வாறே,
ஸந்நிதிம் — ஸந்நிதானத்தை,
ஸேவமானே — அடைந்தபோதே,
ஆபத: — ஆபத்துகளும் (பக்தர்களின் துன்பங்களும்),
லயம் யாந்தி — நாசத்தையடைகின்றன.
இதிவ — என்று,
ந்ருணாம் — மக்களுக்கு,
ஊர்மி பங்க்தீ — அலைகளின் கூட்டங்களை,
தர்சயந்தம் — காட்டுகின்ற,
தம் குஹம் — பிரசித்தரான குஹப்பெருமானை,
ஹ்ருத்ஸரோஜே — எனது மனதாகிய தாமரைப்பூவினகண்,
ஸதா — எக்காலத்தும்,
பாவயே — எண்ணி வழிபடுகிறேன்.

## பொழிப்புரை.

எங்ஙனம் அலைகள் மிகப்பெரியவையாயினும் கரையில் அடையுங்கால் ஒடுங்கிப்போகின்றனவோ அங்ஙனமே அன்பர்களின் துன்பங்களும் எனது சந்நிதியை யடைந்தவளவிலேயே ஒழிந்துவிடுகின்றன என்று அலைகளின் வரிசையை மக்களுக்கு உதாரணமாகக் காட்டுகின்ற குஹப்பெருமானை எனது மனதின்கண் எப்போதும் தியானித்து வணங்குகின்றேன்.

ஓம் குஹாய நம

# கந்தர் திருவிளையாடல்.

(17-வது பக்கத் தொடர்ச்சி.)

'பன்னருஞ் சிறப்பின் மிக்க பனிவரை யரசன் றன்பால் கன்னியம் புதல்வியாகிக் கௌரி' தவம்புரிந்திருந்தகாலே, அசுரர் குலத் தலைவனும் சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசு செலுத்தி ஒப்பாருமிக்காருமின்றி தருக்குற்றிருந்தனன். அந்தக் காலத்தில் சனகாதியர் நால்வரும் சிவபெருமானை நோக்கி பன்னெடுங் காலம் தவம்புரிந்து இறைவனருளால் கைலைமலையை யடைந்து, நந்தி தேவர் காவல் புரிகின்ற முதல்வாயிலையணுகி நந்தியெம்பெருமானை வணங்கி அவரருளால் சிவசந்நிதியுட்சென்று நான்முகன் முதலோர் காணு ஞானநாயகனைக் கண்டார்கள். தேவதேவனைக் கண்டவுடனே மொழிகுழற, முழுதுடல் புளகிக்க, விழிபுனல்பெருக, தீ சேர் மெழு கென உள்ளம் உருக, கரமலர் குவிய, இருதயமலர் மலர, ஹரஹர என்று தொழுது, வானோர்க்கரியமருந்தே போற்றி, ஏனோர்க்கெளிய இறைவா போற்றி என்று துதித்து, "அருட்பெருங் கடலே! பொருட்பெருங் கடலாம வேதமென்னும் புணரியில் மூழ்கி, புந்தி தெளியாது மயங்கியுள்ளோம்; மனம் சாந்தியை யடையவில்லை; அறியாமை நீங்கி மெய்யுணர்வு பெற்றோமில்லை; எமது மனம் அமைதியையடையும் வழியைக்காட்டி நல்லருள் புரிந்தருளவேண்டும்" என்று விண்ணப்பம் புரிந்தனர். அடியார்க்கருளும் அருட் பெரும் வள்ளல் அகமகிழ்ந்து "நமது மனமடங்கி மெய்யுணர்வு தலைப்படுமாறு கூறுதும்; இருங்கள்" என்று கூற சால்பெருந் தகைமை நால்வரும் பரமேசுவரனை வணங்கி அருகில் கைகுவித்த வண்ணமாக வீற்றிருந்தனர்.

சிவபெருமான் நந்தியங்கடவுளை நோக்கி "மலர்க்கணைக் கிழவனும் மன்மதன் தவிர வேறு யார்வந்தாலும் உள்ளே விடவேண்டா மென்று கட்டளையிட, நந்தீசர் "அங்ஙனமே" என்று கோபுரவாசலில் காவல்புரிந்திருந்தனர். கல்லாலின்கீழ் வீற்றிருந்த கண்ணுதற்

கடவுள் சனகாதியர்க்கு சிவாகமங்களின் நுட்பங்களாகிய சரியை கிரியை யோகமென்ற முப்பாதங்களையும் கூற, சனகாதியர் "எந்தையே! எமக்கு மனமொடுங்குமாறு ஞானபாதத்தைப் போதிக்கவேண்டும" என்று வேண்ட, புரமெரித்த புரிசடைக்கடவுள் புன்முறுவல்கொண்டு முனிவர்களை நோக்கி, அது வாக்கினால் கூறுவதன்று; இப்படி சும்மாயிருப்பதேயாகுமென்று தமது திருமார்பிலமைத்த சின்முத்திரைக் கரத்தோடு, ஒரு கணப்போது யோகஞ் செய்வார்போல் மௌன நிலையைக்காட்டி வீற்றிருந்தனர்.

இருவரு முணராவண்ணலேனவேள் ளெயிறி யாமை
சிரநிரை யநந்த கோடி திளைந்திடு மாந்திப் சீர்கொள்
கரதல மொன்று சேர்த்தி மோன முத்திரையைக் காட்டி
யோருகணஞ் செயலோன் றின்றி யோகசெய்வாரி னுற்றன்.

அந்த யோகநிலையைக்கண்ட சனகாதியர் "சிவஞானமானது நூலறிவினால் கிடைப்பதன்று. அநுபவ அறிவாற்கிடைப்பது" என்று முதல்வனருளால் தெரிந்து மனமொடுங்கி சித்திரப்பதுமைபோல் செயலறறு சிவஞானமுற்றிருந்தனர் சிவபெருமான் நால்வருக்கும் ஞானநிலையைக்காட்ட மோனநிலையில் இருந்த ஒரு கணப்பொழுதானது பிரமன்முதலிய தேவர்களுக்கெல்லாம் அநேக யுகங்களாயிருந்தது தேவர்களுக்கே இவ்வாறாயின் ஏனையோர்க்கு இத்துணைக் காலமாயிற்றென்று கூறவல்லார் யாவர்? காஞ்சிமாநகரில் கம்பாநதியின் பெருக்கைக்கண்டஞ்சி இறைவனைத் தழுவிக்கொண்ட இமயவல்லி எமபிரானது கண்புதைத்த காலம்போல், சிவமூர்த்தி ஒரு கணப்பொழுது யோகத்திலமர்ந்தது தேவர்களுக்குப் பற்பல யுகங்கள் கடந்தன. சிவமூர்த்தி மோனநிலையுற்றதனால் விண்ணுறையமரர்களும் மண்ணுறை மனிதர்களும் மாதர் கலவியின்றி காம இச்சை யறவேநீங்கி முற்றத்துறந்த முனிவர்போல் இருந்தனர். அதனால் உலகில் ஆண்பெண் சேர்க்கையின்றி சிருட்டித்தொழிலும் நடவாமற்போயிற்று. உலகிற்கு காரணக்கடவுள் கண்ணுதற்கடவுளே என்பது இதனால் குன்றின்மேல்வைத்த விளக்கேபோல் வெளியாகிறதென்பதை யாரே மறுக்கவல்லார்.

இவ்வாறு உலகமெல்லாம் இடர்பட்டுநின்றகாலை, சூரபன்மனுடைய கொடுஞ்செயலுக்கஞ்சி தேவேந்திரன் தேவர்களுடன் பொனனுலகைவிட்டு இந்திராணியோடு மண்ணுலகஞ் சேர்ந்து, கைலை

மலையையடைந்து பரமேசுரனைக் காணாகி மேருமலையடைந்து, சூர பன்மனுடைய மகனாகிய பானுகோபன் பொன்னாட்டையழித்து தனது (இந்திர) குமாரனாகிய சயந்தனைச் சிறைபுரிந்த தன்மையைக் கேட்டு மனம் வருந்தி, மேருகிரியில் ஓர் புறத்தில் நீலகண்டப்பெரு மானை நோக்கி நெடுங்காலம் தவம்புரிந்தனன். அவனுடைய தவத் திற்கிரங்கி ஆலமுண்ட அண்ணல் விடைமேலூர்ந்துவந்து தெரிசனம் தர, இந்திரன் பன்முறையும் இறைஞ்சி நிற்க, சிவமூர்த்தி "ஆகண் டல! அளப்பருங்காலம் உடல்வருநதி தவமிருந்தனை; நினக்குவேண் டிய வரம் யாது? கூறுதி" என்று அறியாதவர்போல் வினவ, அமரர் கோமான், "எந்நாட்டவாக்கும இறைவா! சூரபன்மன் எம்மைத் துன்பக்கடலிலாழ்த்தி எனது மகனையும் இமையவரையும் சிறையிட்டு எமது நகராகிய அமராவதியைக்கொளுத்தி இடர்ப்பல செய்கின்ற னன். எம்பெருமானே! சூராதியரை யழித்து எம்மைக் காத்தருள வேண்டும்" என்றனன். சிவபெருமான் "புரந்தர! எமமையிகழ்ந்த தக்கன் வேள்வியில் நீவிர் இருந்தபாவத்தால் இந்தத்துன்பம் உமக்கு நேர்ந்தது; இனி எமக்கு ஒரு புதல்வன் தோன்றுவன். அப்புதல் வன் சூராதிகளையழித்து உமக்கு விணணுலக இனபவாழ்வை நல்கு வன்" என்று கூறி மறைந்தருளினர்

பின்னர் இந்திரன், "கண்ணுதற்கடவுள் கல்லாலின்கீழ் யோகம் புரிவார்போல் அமர்ந்திருக்கின்றனர். உமாதேவி மலையரையன் மக ளாய்த் தவஞ்செய்வாளாயினள். இங்ஙனமிருக்கின் அன்னார்க்குப் புதல்வன் எவ்வாறு தோன்றும்? புதல்வன் தோன்றினல் தானே நங்குறை நீங்கும்" என்று பலவாறு சிந்தித்து, மனோவதியென்னும் மாநகரடைந்து வியாழபகவானது மனைவியிடம் தன் மனைவியை இருத்தி, தேவர்குழாங்களுடன் அம்புயத்தவிசில் வைகும் அயனு டைய இருக்கை சென்று, முக்கட்பரமன் மோனநிலையிலிருப்பதால் படைப்புத்தொழிலின்றி மனவருத்தத்துடனிருக்கும் மலரவனைக் கண்டு அன்னனது அருணசரணாரவிந்தங்களை வணங்கி வழுத்திநின்ற னன். பிரமன் திருவருள்புரிநது "புருகூத! வானவருடன் வந்த காரணம் யாது?" என்று வினவ, இந்திரன் சூரபனமனால் நேர்ந்த துனபங்களையும், சிவபெருமான் கல்லாலின்கீழ் மௌனவிரதத்துட னிருத்தலையும், தன்னுடைய தவத்திற்கிரங்கி சிவமூர்த்தி அருளிய திறத்தையும் கூறி, மேல் உய்யும்வகையை உரைத்தருளவேண்டு மென்று குறையிரந்து நின்றனன். பிரமன் "தேவேந்திர! அருள்

வடிவினரும், உற்றவர்க்குதவும் நற்கருணை நாயகனும், யானும் மாலும் தேடிக் காணமுடியாத அண்ணலுமாகிய சிவபெருமான் வெள்ளியங்குன்றில் முனிவர் நால்வருக்கும மோனமுத்திரையைக் காட்டி தவநிலையில் வீற்றிருப்பது நமது துன்பத்தை நீக்கி இன்பத்தை நல்குவதற்கே யாகும். சந்திரமௌலியாகிய தனிப்பெருந் தலைவன் ஆருயிர்களை யெல்லாம் சங்கரிப்பதும், அவ்வுயிர்களின் துன்ப நீக்கத்தின்பொருட்டே யாதல்போல கொடிய வெஞ்சூரனைக் கொண்டு நமக்கு இடர்புரிவதும நமது பாவத்தைநீக்கி நல்லருள புரிவதன்பொருட்டேயாம். மக்களைப்பெற்ற தாய்தந்தைகள் மக்களுக்கு நோய்வந்தகாலத்துப் பிறரைக்கொண்டு துன்புறுத்தியும நோயை நீக்குவர், அது மக்களமீதுள்ள கருணையேதவிர சினததாலன்று. அதுபோல நம்முடைய தீவினைகளை நீக்குவதற்காகவே நமக்குத் தந்தையுந்தாயுமாகிய கறைமிடற்றணணல் இச்செய்கையைப் புரிந்துளார் மேகவாகன! அசுரர்களாகிய சண்டமாருதத்தால் அலைகின்ற நமது வினைகள ஒருசிறிது விலகும் சமயம நெருங்கியிருப்பதால கருணைக்கடலாகிய கண்ணுதல் அன்புடன் நின்பால்வந்து உய்யும்வகையை உணர்த்திப் போந்தனர். ஆதலால் நம்மையாளுடைப் பரமனே மேலும் அருள்புரிவன். அத்திருவருள கைகூடுவதற்கு வேண்டிய முயற்சியையும் நாம் சிறிது செய்தல் அவசியமாகும். இவற்றையெல்லாம் நாராயணமூர்த்தியிடம் அறிவித்து மேல் நடக்கவேண்டியதற்கு எது செய்யத்தக்கதோ அதை விரைவிற்புரிவோம்; வருவாயாக" என்று இந்திரன் முதலிய இமயவருடனும் படைத்தற்றொழிலை நடத்தும் பங்கயாசனன் நாராயணர் உறையும வைகுந்தம் செல்வதற்குப் புறப்பட்டனன்.

---

ஓம் குஹாயநம:

# கற்பு

(22-ம் பக்கத் தொடர்ச்சி.)

கற்புடைய பெண்மணிகளுக்கு நிகரான பொருள் மூவுலகங்களிலுமில்லை கற்புடையமாதர்களை அருந்தவராலும் அழிக்கமுடியாது. கற்புடையோர்களுக்கு இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்ற முக்கால ஞானமும் உண்டாகும். இவற்றை விளக்கும் அடியில்வரும் புனித சரிதையைப் பெண்மக்கள்படித்துப் பயன் பெறுவார்களாக.

அந்தணர்களுக்குள் சிறந்தவனும் வேதங்களை அத்யயனம் செய்தவனும் தவத்தையே தனமாகக் கொண்டவனும் தருமசீலனுமாகிய கௌசிகனென்கிற ஒரு வேதியன் இருந்தான். அந்த மறையவன் அங்கங்களுடனும் உபநிடதங்களுடனும் கூடிய வேதங்களை நன்றாகக்கற்றுணர்ந்தவன் அவன் ஒருமரத்தினடியில் வேதங்களை உச்சரித்துக்கொண்டு அமர்ந்திருந்தான். அந்தமரத்தின் மீது ஒரு கொக்கு உட்கார்ந்திருந்தது. அப்பொழுது அந்த கொக்கு பிராம்மணன் மீது எச்சமிட்டது. உடனே அவனுக்குச் சினமூண்டது. மரத்தின் உச்சியிலுள்ள கொக்கை நன்றாக விழித்துப்பார்த்து தீங்கு செய்யநினைத்தான். கௌசிகன கோபத்தால் பார்த்த உடனே அவன் பார்வையாகிற வெப்பத்தால் தகிக்கப்பட்டு கொக்கு கீழே விழுந்து மாண்டது. அதைக்கண்ட கௌசிகன் "அந்தோ! நான் ஒரு உயிருக்குத் தீங்கு செய்துவிட்டேன். கோபத்திற்கு அடிமைப்பட்டு தீயகாரியத்தைப் புரிந்துவிட்டேன்" என்று வருந்தினான். கற்றறிந்தவராகிய அவன் இவ்வண்ணம் பலவாறுகூறி பிக்ஷைக்காக ஓர் கிராமத்தையடைந்தான். பிக்ஷையெடுத்துக் கொண்டே சென்று ஒரு வீட்டில் நுழைந்து 'பிக்ஷை கொடு' என்று கேட்டான். அந்த வீட்டிலிருந்த பெண்ணரசி பிக்ஷைகொடுக்க எழுந்த அதே சமயத்தில் அவளுடைய கணவன் மிகவும் பசியினால் வாடி திடீரென்று வீட்டினுள் நுழைந்தான். அந்தமாது கௌசிகனைச் 'சற்று இரும்' என்று

சொல்லிவிட்டு நாயகனுக்குக்காலலம்ப நீரையும் ஆசமன தீர்த்தத்தை யும் ஆசனத்தையும் கொடுத்து இருக்கவைத்து, இனிய மொழிகளைக் கூறி நல்ல சுவையுள்ள உணவுகளைத்தந்து உபசரித்தாள். கணவனையே கடவுளாகநினைக்கின்ற அக்காரிகை கணவனுண்டபின் உண்பவள். மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் பதியையே வழிபடுபவள். பதி உணவு கொள்ளாமுன் தண்ணீரும் குடிக்கமாட்டாள். ஆசார முள்ளவளும் பதிபணிவிடையில் பற்றுள்ளவளும் குடும்பத்திற்கும் கொழுநனுக்கும் இதத்தைச் செய்பவளும் அருந்ததிக்கு நிகரானவளுமாகிய அவள் எப்பொழுதும் எது நன்மையோ அதையே செய்து கொண்டுவந்தாள். தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் அப்படியே மாமியார் மாமனார்களுக்கும் தினமும் பணிவிடைபுரிவதில் ஊக்கமுள்ளவள். எப்பொழுதும் இந்திரியங்களை படக்கினவள். இனியபார்வையும் இனிய மொழியுமுள்ளவள். நற்குணங்களுக்கெல்லாம உறைவிடமாகிய அப்பெண்ணரசி நாயகனுக்கு வேண்டிய உபசாரங்களையெல்லாம் வழுவறப்புரிந்து பிறகு பிராம்மணனுக்குப் பிக்ஷையிட நினைந்தாள கீர்த்தியுளளவளான அம் மங்கை வெட்கத்துடன இதுகாறும் நின்றுகொண்டிருந்த அதிதியாகிய கௌசிகனுக்குப் பிக்ஷை யெடுத்துக்கொண்டு வெளியேவந்தாள்.

கௌசிகன் "அம்மா! நீ என்னை நில் என்று சொல்லி பிக்ஷாடனத்திற்குத் தடைசெய்தாய். என்னை இது காறும் தாமதிக்கச் செய்தனை. இது தருமமோ? என்றனன். கோபத்தால் மிக்க தாபத்தையடைந்தவனும் ஒளியினால் பிரகாசிப்பவனுமாகிய கௌசிகனை நோக்கி அந்த உத்தமி, "பிராம்மணோத்தமரே! பொறுத்துக்கொள்ளும். என்னிடத்தில் கருணைபுரிவீராக. கற்றறிந்தவரே! என் குற்றத்தை மன்னிக்கவேண்டும். எனக்குக் கணவன் பெரியதெய்வம். பசித்துக்களைத்துவந்த எனது பதிக்குப்பணிவிடை செய்தேன். அதனால் தாமதமாயிற்று" என்றனள கௌசிகன் "கர்வங்கொண்டவளே! உனக்குப் பிராம்மணர்கள் கௌரவமுள்ளவர்களல்லர். உன் கணவனே உன்னால் கௌரவமுள்ளவனாகச் செய்யப்பட்டான். இல்லறத்திலிருக்கிற நீ பிராம்மணர்களை அவமதிக்கிறாய்: இந்திரன்கூட இவர்களை வணங்குகிறான்; அவ்வாறிருக்க பூமியிலுள்ள மனிதன் இவர்களை வணங்குவதில் ஐயமென்ன? நீ இதனை அறியவில்லை. நீ அறிவிற் சிறந்த அருந்தவருடைய பெருமையைக் கேட்டதில்லை;

அக்கினிக்கு ஒப்பாயிருக்கிற பிராம்மணர்கள் அவமதிக்கப்பட்டால் மலைகளோடும் வனங்களோடும் தீவுகளோடும் கூடின பூமியைக்கூட விரைவாக எரித்துவிடுவார்கள்" என்று சொன்னான்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட அம்மாதரசி "தபோதனரே! நான் கொக்கல்லேன்; கோபத்தை விட்டுவிடும்; கோபமுள்ளவரான நீர் கோபமுள்ள பார்வையினால் என்னை என்னசெய்துவிடுவீர்? நான் தேவர்களுக்கு நிகரானவர்களும் பெரிய மனமுள்ளவர்களுமான பிராம்மணர்களை அவமதிக்கிறதில்லை. பிராமணரே! நீர் இந்த அபராதத்தைப் பொறுக்கவேண்டும். நான் சிறந்த புத்தியுடையவர்களான பிராம்மணர்களுடைய சக்தியையும் மகிமையையும் அறிவேன்; தவத்திற் சிறந்த அந்தணருடைய கோபத்தால் கடலானது உவர்நீருள்ளதும் பானஞ் செய்வதற்குத் தகாததுமாகச் செய்யப்பட்டதன்றோ. அப்படியே ஒளிசெய்கின்ற தவமுடையவர்களும பரம்பொருளைத் தியானிப்பவர்களுமான முனிவர்களுடைய கோபத்தீயானது இன்றுங்கூட சமுத்திரத்தினுள் தணியாமலிருக்கிறது; அளவுகடந்த ஆற்றலுள்ள அந்த அந்தணர்களை எந்த அறிவிலிதான் அவமதிப்பான்? மிக்க கெட்ட எண்ணமுள்ளவனும் கொடுந்தொழிலுடையவனுமாகிய வாதாபி என்கிற அரக்கன் அந்தண சிரேட்டர்களை அவமதித்ததனால் அகத்தியமுனிவரையடைந்து ஜீரணமானான். மகாத்மாக்களான அந்தணர்களுடைய அநேகபெருமைகள் கேட்கப்படுகின்றன. மறையவரே! மகாத்மாக்களுக்குக் கோபமும் அதிகம்; அனுக்ரகமும் அதிகம்; இந்தக்குற்றத்தை நீர் பொறுக்கக்கடவீர்; பதியினுடைய பணிவிடையால் உண்டாகும் தருமமே எனக்கு இனிக்கிறது; எல்லாத் தேவதைகளுள்ளும் எனக்குக் கணவனே பரதேவதை; கணவனைக் காட்டிலும் சிறந்த தெய்வம் எனக்கு மூன்று உலகங்களிலுமில்லை; எனது தெய்வமாகிய கணவனுக்கு என் கடமையைச் செய்வேன்; பதிக்குப்புரியும் பணிவிடையின் பயன் எவ்விதமென்பதைப்பாரும்; கொக்கானது உம்மால் கோபத்தால் எரிக்கப்பட்டதன்றோ? அது என்னால் அறியப்பட்டது. பதிபக்திபுரிவோர்க்கு தவமும் ஞானமும மோக்ஷமும் தானேவரும்; மனிதர்களுக்கு கோபமானது உடலிலுள்ள பகைவன்; நீர் கோபித்துக்கொள்ளவேண்டாம; பதிவிரதையான நான கொக்கைப்போல் உம்மால் கொல்லத்தக்கவளாகமாட்டேன்; எவன் கோபத்தையும் மோகத்தையும் விடுகிறானோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறி

கிறார்கள்; எவன் இவ்வுலகத்தில் சத்தியவாக்கியங்களை உரைப்பனோ? எவன் குருவை மகிழ்விப்பனோ? பிறரால் தான் துன்பஞ்செய்யப் பட்டாலும் பிறனைத் துன்பஞ்செய்யாமலிருப்பவன் எவனோ? அவனைத் தேவர்கள் பிராமமணனாக அறிகிறார்கள். எவன் இந்திரியங்களை வென்றவனாகவும் தருமத்தில் முக்கிய நோக்கமுள்ளவனாகவும் வேதாத்யாயனத்தில் பற்றுதலுள்ளவனாகவும சுத்தனாகவுமிருப்பானோ? காமம் கோபமிரண்டும் எவனுக்கு வசப்பட்டிருக்குமோ? அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். தருமங்களை அறிந்தவனும் சிறந்த மனமுடையவனும் எல்லாத் தருமங்களையுஞ் செய்பவனுமான எந்த மனிதனால் உலகம் தனக்குச்சமமாக எண்ணப் படுகிறதோ? அவனைத் தேவர்கள பிராமமணனாக அறிகிறார்கள். எவன் வேதங்களை அத்யபனஞ்செய்விப்பனோ, தானும் அத்யயனம் செய்வனோ, எவன் யாகம் செய்வனோ, பிறர்களுக்கும யாகத்தைச் செய்விப்பனோ, எவன் சக்திக்குத்தக்கபடி தானம் செய்வனோ, அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள் பிரமசரியத்தையும் சொல்வன்மையுள்ளவனும, மதமில்லாதவனும், சிறந்த வேதங்களை ஓதினவனும், வேதங்களை அத்யயனம் செய்துகொண்டே இருப்பவனுமான உத்தமனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். பிராம்மணர்களுக்கு எது மகிமையோ அதை இவர்களுக்கு இருப்பதாகச் சொல்லவேண்டும். அப்படிச் சத்தியத்தைப் பேசுகிறவர்களுக்கு பொய்யில் மனமானது மகிழ்ச்சி யடையாது. பிராம்மணனுக்கு வேதத்தையும், மனத்தின் அடக்கத்தையும், மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினுடைய ஒற்றுமையையும், இந்திரிய நிக்ரஹத்தையும் சாசுவதமான பொருளாகச் சொல்லுகிறார்கள். தருமத்தையறிந்த ஜனங்கள் சத்தியத்தையும் மனோ வாக்கு காயங்களுடைய ஒற்றுமையையும் சிறந்த தருமமாகச் சொல்லுகிறார்கள். சாசுவதமான தருமமானது எவ்விதத்தாலும் அறியமுடியாதது. அந்தத் தருமமானது சத்தியத்தில் நிலைபெற்றிருக்கிறது. தருமமானது சுருதியைப் பிரமாணமாகக்கொண்டிருக்குமென்பது பெரியோர்களுடைய உபதேசம்.

வேதியரே! சூட்சுமமான தருமமே பலவாராகக்காணப்படுகிறது. தேவரீரும் தருமத்தை அறிந்தவர்; வேதாத்யயனத்தில் பற்றுள்ளவர்; சுத்தர். தருமத்தை நீர் உள்ளபடி அறியவில்லையென்பது என்று

டைய எண்ணம். உத்தம தருமத்தை நீர் அறியாமலிருந்தால் மிதுலாபுரிக்குப்போய் தருமவியாதரைக் கேளும். பிதாமாதாக்களுக்குப் பணிவிடைசெய்பவரும், உண்மையையுரைப்பவரும், ஜிதேந்திரியருமான வியாதர் மிதிலேயில் வசிக்கிறார். அவர் உமக்குத் தருமங்களைச் சொல்லுவார். உமதிஷ்டப்படி அவ்விடம் செல்லுவீராக. உமக்கு மங்களம். பரமதார்மிகரான அந்த வியாதர் உம்முடைய ஐயத்தை அகற்றுவார். அதிகமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் பொறுத்தருள்வீர். எவர்கள் தருமத்தை அறிகிறார்களோ அவர்களனைவருக்கும் பெண்கள் வதம்செய்யத் தகாதவர்களல்லரோ ? என்று சொன்னாள்.

கௌசிகன் " கல்யாணி ! உனக்கு மங்களம் ; கோபம்போய் விட்டது ; நான் அன்புள்ளவனாக இருக்கிறேன் ; நின்னால் சொல்லப்பட்ட நிந்தையானது எனக்குச் சிறந்த நன்மையே ஆயிற்று. உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். அம்மா ! மிதிலைக்குச் செல்வேன். என்காரியத்தை நிறைவேற்றிக்கொள்வேன். இப்படிப்பட்ட நடையுள்ள நீ பாக்கியவதியாக இருக்கிறாய் " என்று இன்னுரைகூறி விடைபெற்றுச் சென்றான்.

---

ஓம் குருப்யோ நம :

# குரு சிஷ்ய லக்ஷணம்

சச்சிதாநந்தன்.

## முன்னுரை.

அறிவிற் சிறந்த பெரியீர்!

ஒருவன் துன்பத்தை விடுத்து இன்பத்தைப் பெறவேண்டு மானால் மறச்செய்கையை யொழித்து அறச்செய்கையைக் கடைப் பிடித்து குருவருளை அவசியம் பெறவேண்டும். குருவருள்பெற்ற வன் சகலவித துக்கங்களும் நீங்கிப்பரமானந்த வாழ்வைப் பெறு வான் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை; ஆதலால் ஒவ்வொருவரும் சற்குருவையடைந்து வழிபட வேண்டியது அவஸ்யம். ஆகவே யானிப்போது கூறப்புகுந்த விஷயம் குரு சிஷ்ய லக்ஷணம் என்ப தாம். ஆனால் ஸ்ரீ சற்குருலக்ஷணத்தையும் சீடனுடைய லக்ஷணத் தையும் சாங்கோபமாக எழுதிமுடிக்க முடியாது; ஏனெனில்? சாஸ் திரங்களில் மிகவும் தேர்ச்சியுள்ளவர்களால் விவரிக்கத்தக்கது. ஆயி னும் இவ்வரிய விஷயத்தை இச்சிறுவனால் எழுதத் தொடங்குவது திருப்பாற்கடலை சிற்றெறும்பு பருகநினைப்பதுபோலவும், சந்திரனைக் கரத்தால் பிடிக்கத தாவுவதுபோலவும், கடலைக் கடக்கக் கரத்தால் நீந்துவதுபோலவும் ஒக்கும். ஆயினும் என் விசாரணைக்கும் கேள் விக்கும் எட்டினமட்டிற் சுருங்கக்கூறுவதை அன்பு பாலித்து ஏற்றுக் கொள்வீரெனத் தோற்றங்கொண்டே இங்ஙனம் இறகுகோலை ஏவ லானேன். இதில் நேரிடுந்தவறுகளை நீக்கிக் குணப்பொருளைச் சீர் தூக்கி ஆதரிக்க நமது பக்தசீலராகிய பத்திராதிபரையும் அவர் கல்விக் கடலிற்றிளைந்து விளையாடும் உத்தமர்களையும் வேண்டுகிறேன்.

(ஸ்ரீகுரு: ஸர்வகாரண பூதா ஸக்தி)

—பாவனோபநிஷத்.

மெய்யன்பர்களே!

கு—ரு—என்னும் இந்த இரண்டு அக்ஷரமே சப்தகோடி மஹா மந்திரங்களிலும் மிகவும் சிரேஷ்ட்டமானது. குரு கீதையில்

"ஸப்த கோடி மஹா மந்த்ரா: சித்தவிப் ப்ரமகா நரக:
ஏகமேவ பரோ மந்த்ர: குருரித் த்யக்ஷரத்வயம்"

என்று சொல்லப்படுகிறது.

குகாரம் அந்தகாரம்; ருகாரம் (அதனை விழுங்கும்) தேஜஸெனப் படுகின்றது. அஞ்ஞானத்தை விழுங்கும் ப்ரஹ்மம் "குருவே"; சம்சயமில்லை என்றும், கு-என்றால் காடாந்தகாரம்; ரு-என்றால் காடாந்தகாரத்தை நாசம் செய்யப்பட்டவன்; ஆதலால் குரு என்றால் அஞ்ஞானமாகிய காடாந்தகாரத்தை நாசம் செய்யப்பட்டவன் என்றும், குகாரம்-குணாதீதமாம்; ரூபாதீதம் ருகாரமாம். குணரூபங்களில்லாததாயிருத்தலால் குருவென்று சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

குரு—அதாவது ஆசிரியன்

"ஆசிநோதிஹி ஸாஸ்த்ராதா நாசா ரேஸ்தா பயத்யபி
ஸ்வயமா சரதே யஸ்மாத்-தஸ்மாதா சார்ய உச்யதே,"

என்கிறபடி சாஸ்திரார்த்தங்களைக்கூட்டிப் போதித்துச் சீடனை நல்லொழுக்கத்தில் நிலை நிறுத்துகிறவனும், அதுபோலவே தானும் நன்மார்க்கத்தைக் கடைப்பிடித் தொழுகுபவனு யிருத்தலால் ஆசாரியனெனப்படுகிறான்.

"குரு லக்ஷணம்"

ஆசாரியனானவன், "ஆசார்யோ வேத ஸம்பந்நோ . . . . . . மந்த்ரஜ்ஞோ மந்த்ரபக்தஸ்சஸதா மந்த்ராஸ் ரயஸ்ஸூசி—குருபக்தி ஸமாயுக்த: புராணஜ்ஞோ விசேஷத:—ஏவம் லக்ஷண ஸம்பந்நோ குருரித்யபி தீயதே" என்கிறபடி வேதாத்யயனம் செய்தவனும், த்வேஷமில்லாதவனும், மந்திரமறிந்தவனும், ஆசாரிய பக்தியுடையவனும், விசேஷமாய்ப் புராணங்களைப் படித்தவனும், ஆத்மஞான நிஷ்டையுடையவனும், ஒருவித பயனையும் கருதாமல் போதிப்பவனும், பணத்திற்காகவோ புகழுக்காகவோ, பெயருக்காகவோ, கற்பிக்காமல் சீடனிடம் கருணையினால் மட்டும் உபதேசிப்பவனாயிருத்தல்வேண்டும்.

ஆசிரியனுடைய இலக்கணத்தை ஆத்திரையன் பேராசிரியரும்,

"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான் யாறன்ன தூய்மையும் வான்யாறு
நிலம் படர்ந்தன்ன நலம்பட லொழுக்கமும்

திங்க ளன்ன கல்வியுந் திங்களோடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவது
மஃகா வன்பும் வெஃகா வுள்ளமும்
துலைநா வன்ன சமநிலை யுள்பட
வெண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும் தாளா அண்மையு
முலகிய லறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவு முருவு மாற்றலும் புகழுஞ்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல் வன்மையும்
கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலும்
மின்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பி னல்லா சிரியர் ''

எனும் தொல்காப்பிய பாயிர சூத்திரத்தாலறிக.

மேலே கூறின இலக்கணத்தை யுடையவனே குருவென்னும் பதவிக்கேற்றவன்.

'' ஆசார்யு ஏவ ஸம்ஸார மோசக ப்ரத உச்யதே:
ஆசார்யோ நாம வேதாந்த விசாரஞுத்த வேதன:

—காந்தம்.

சம்சாரமாகிற ஜநன மாண துக்கத்திலிருந்து விடுவிக்கிறவர் குருவேதான்; குரு யாரென்றால் வேதாந்த விசாரத்திலைடைந்த ஆத்துமக்ஞானமுடையவர் யாரோ அவரே குருவென்று சொல்லப் படுகிறது. சகல சமுசாரத்தையும் மித்தியவடிவமாக உபதேசிக்கும் குருநாதரானவர் பிராஹ்மணனாயினும், அல்லது வைசியனாயினும், அல்லது சூத்திரனாயினும், ஸ்திரீயேயாயினும், அல்லது நபும்சகனே யாயினும், அல்லது வயதில் சிறியவனாயினும் அவரேதான் குருவாகப் பாவித்தல்வேண்டும்.

ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளும்

, , , , . . த்ருட்ப்ரஜ்ஞாஹி யஸ்யாஸ்தீசேத்
சண்டாளோஸ் துத்விஜோஸ்து குருரித்யேஷா மனீஷமம்

—மனீஷாபஞ்சகம்,

த்ருட்ப்ராஜ்ஞாஹி - திடமான ஞானம், யஸ்ய - எவனுக்கு, அஸ்திசேத் - இருக்கின்றதோ, (ஸது-அப்படிப்பட்டவன்) சண்டா

ளோஸ்து - சண்டாளனுனபோதிலும், த்விஜோஸ்து - பிராம்மணனுனபோதிலும், குருரிதி - குரு என்பது, மம - என்னுடைய, ஏஷா மனீஷா - என்னுடைய அபிப்ராயம் என்றார்.

நாம் ஆற்றைக்கடக்கவேண்டுமென்றால் படகுவோட்டுபவனைக் கொண்டு கடக்கின்றோம். படகு வோட்டுபவன் ஈனஜாதியாகயிருந்தாலும் அவனைத்தவிர்த்து ஆற்றைக் கடக்கமுடியாது ; அதுபோல் கற்றவன் ஈனஜாதிப் பிறப்பினனாயினும் அவனைக்கொண்டேதான் கற்கவேண்டும்

நாலடியாரிலும்,

தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்—காணாய்
அவன்றுணை யாவாறு போயற்றே நூல்கற்ற
மகன்றுணையா நல்ல கொளல்.

என்றார்

இதற்குச் சான்றாக பிரமவிருடிகளாகிய துருவாசர் முதலாயினோர் நானகாம்வருணத்தாராகிய விதுரனிடத்திலே ஞானோபதேசம் பெற்றார்களென்றும், திருத்துறையூரிலிருந்த சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவாசாரியா திருவெண்ணெய்நல்லூரிலிருந்த நான்காம் வருணத்தாராகிய மெய்கண்ட தேவரிடத்திலே ஞானோபதேசம் பெற்றாரென்றும, பாரத, பாகவதங்களிலும், சைவபுராணங்களிலும் கூறப்பட்டுள்ளது..

(தொடரும்.)

சிவமயம்.

# திருவிளக்குப்பூசை

## சிவசுப்பிரமணியன்.

நாம் தீபத்தையும் அக்கினியையும் வணங்குகிறோமென்று சிலர் நம்மை ஏளனமாகக் கருதுகின்றார்கள். அது கடவுள் இலட்சணம் பூரணமாக அறியாத்தன்மையாகும் நமது முன்னோர்பயனற்றகாரியத்தையேனும் குற்றமுடையவற்றையேனும் செய்யும்படி நமக்குக் கட்டளையிட்டிருக்கவில்லை. அவர்கள் அனுபவமாக யாவுமறிந்தே கூறியிருக்கிறார்கள்.

இப்போது தீபம் அல்லது அக்னி என்பதை நாம் வணங்குவதற்குக் காரணம் யாதென்று நோக்கின், அக்னியினிடத்தில் கடவுளின் முக்கிய இலக்ஷணங்களில் சில பொருந்தியிருக்கின்றன என்பதால்தான் என்று அறியலாம்.

அதோடு கடவுளும் அடியார்களுக்கு அருள்செய்ய அதன்வழியாய் வெளிப்படுகிறார் என்பது நம்முன்னோர் கண்டது. நெருப்பினிடத்தில் காணப்படும் குணங்களும் கடவுளிடத்துள்ள குணங்களும் ஒற்றுமையாயிருப்பதைச் சிறிது சிந்திப்போம். முதலாவது கடவுள் பேரொளியுடையவர், அதாவது மிகுந்த பிரகாசமுடையவர். மாமணிச்சோதியான் என்றும், சோதியே, சுடரே, சூழொளி விளக்கே என்றும் பெறியோர் கூறியிருக்கின்றார்கள். விளக்குக்கும் அதாவது நெருப்புக்கும் வெளிச்சம் இருக்கின்றது. இரண்டாவது, கடவுள் எங்கும் எப்பொருள்களிலும் இருப்பதுபோலவே நெருப்பும் அதாவது சூடு இல்லாத பொருள் உலகில் இல்லை. சூடு குறைவுற்றால் அப்பொருள் அழிவுறும். மனிதரும் சூடு குறைந்தபின்னரே சாகின்றனர். மூன்றாவது, கடவுள் எல்லாவற்றையும் அறிந்து மற்றோரையும் அறிவிப்பர். அதுபோலவே விளக்கும் எல்லாவற்றையும் காட்டித் தன்னையுங்காட்டிக்கொள்ளும். நான்காவது, கடவுள் தூய உடம்பும் தூய்மையும் உடையவர். தன்னிடம் சேர்ந்தாரையும் தூய்மை செய்

வர். நெருப்பும் தான் தூய்மையாயிருந்துகொண்டு தன்னிடம்சேரும் பொருள்களையும தூயமைசெய்யும். அதாவது நெருப்பிலிட்ட எப் பொருள்களும் நீறாகித் தூய்மையாகும். ஐந்தாவது, கடவுள் தன்னைச் சேர்ந்தார்க்கு இன்பமும் சேராதார்க்குத துன்பமும் கொடுப்பது போன்றே நெருப்பும் தன்னைச்சேர்ந்த மனிதர் குளிர்விட்டு சுகமும், உண்டிமுதலியவை அடைநது இன்பமும், அடையச்செய்து சோரர்க் குக் குளிரும் மந்தமும் கொடுத்துத் துன்பமும அடையச்செய்கிறது.

இதுவரை கூறிவந்த குணங்கள் எல்லாம் எல்லா மதத்திற்கும் பொதுவானது. இனி நம் சைவ சித்தாந்த மதத்திற்குரிய சில குறிப்புக்குணங்களும் விளக்கினிடம் காணக்கூடும். நம் சைவசமயக் கொள்கைப்படி கடவுள் பாதிஉடலை அம்மையாம் உமாதேவியாருக் குக்கொடுத்து மங்கைபங்காளன் எனப் பெயர்பெற்றனர். அதுபோல் விளக்கிலும் தீ எரிகிற இடததில் ஒரு நிறமும், வெளியில் ஒரு நிறமு மாக இரண்டுபாகங்கள் தோன்றும். இனி அம்மையின் நிறம பச்சை கலந்த கருப்பு என்பர். அதுபோல் விளக்கிலுள்ள இரண்டுபாகங் களில் உள்பாகம் சிறு ஊதாநிறமுள்ளது. அம்மையே கடவுளின் சக்தி அல்லது வல்லமை யாவர்? அதுபோல் விளக்கு எரிவதற்கு நீலநிறமான அந்தப்பாகமே முக்கியமானது அங்குதான் எண்ணெய் ஆவியாகி எரியத்தயாராகிறது சிவபெருமான் நிறம் பொன்னிறம் என்பர். அதுபோல் மற்றப்பாகம் பொன்னிறங்கொண்டுவிளங்கும்.

ஆகையால், எவ்விதத்திலும் சிவபெருமானை ஒத்துள்ள குணங் களில் சில தனக்குச் சொந்தமாகக்கொண்ட விளக்கை நாம் எல்லோ ரும் பூசித்துச் செலவமும் முத்தியும் பெறவேண்டுமென்பது நமமுன் னோர் கட்டளையாகும்.

அவ்வாறு நடந்து நலமடைய இறைவன் இன்னருள் செய்ய அவனடி வணங்குவாம். பிழையுள வேல் ஆன்றோர் பொறுக்க.

---

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.



" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

| மலர். 2<br>Vol. 2 | ஈஸ்வர௵ ஆனிமீ 1உ<br>ஜூன்—1937 | இதழ் 3<br>No. 3 |
|---|---|---|

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில் காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற

குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ

மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த அதி தீரா

அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சும்
அடியா ரிடைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே.

## பதவுரை.

மறிமான் உகந்த - மான்குட்டியைக் கருணையுடன் காத்திலேந்தியுள்ள, இறையோன் - எப்பொருட்கும் இறைவராகிய சிவபெருமான், மகிழ்ந்து - பிரணவோபதேசம் பெறுவதற்காக மனமகிழ்ச்சியுடன், வழிபாடு தந்த - சிஷ்யபாவ மூர்த்தியாக நின்று வழிபட்ட, மதியாளா - ஞானவடிவினரே!, மலை - கிரவுஞ்ச மலையும், மாவு சிந்த - மா மாமாக நின்ற சூரபன்மனும் அழியுமாறும், அலை வேலை அஞ்ச - அலைகளையுடைய கடல் அஞ்சவும், வடிவேல் எறிந்த - கூர்மை பொருந்திய வேலாயுதத்தைப் பிரயோகம் புரிந்த, அதி தீரா - மிகவுந் தைரியத்தை யுடையவரே!, அறிவாலறிந்து - பாச அறிவும் பசு அறிவும் நீங்கிய மெய்யறிவினுல் உணர்ந்து, உன் இருதாள் இறைஞ்சும் - தேவரீரது திருவடித் தாமரைகள் இரண்டையும் வணங்குகின்ற, அடியார் இடைஞ்சல் - அடியார்களது இடையூறுகளை, களைவோனே - நீக்குபவரே!, அழகான செம்பொன் மயில்மேல் - அழகியதும செம்பொற் சாயலை யுடையதுமாகிய மயிலின்மிசை, அமர்ந்து - ஏறிக்கொண்டு, அலைவாய் உகந்த - திருச்சீரலைவாய் என்னும் புனிதக்ஷேத்திரத்தில் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே!, விறல் மாரன - யாவரையும் மயக்குகின்ற சக்தியுடைய மன்மதன், மலர்வாளி சிந்த - மலர்க்கணைகளை வீசவும், வானில் - ஆகாயத்தில், மிக இந்து வெயில் காய - சந்திரன் மிகவும் குளிர்ந்த கிரணங்களைப் பொழியவும், மிதவாடை வந்து - மெல்லிய தென்றல் காறறு வந்து, தழல்போல ஒன்ற - அக்கினிபோல் நெருங்கவும், வினை மாதர் தம் தம - வினைவசப்பட்ட மாதர்கள் தங்கள் தங்கள் மனமபோன வண்ணம், வசை கூற - வசைமொழிகளைக் கூறவும், குறவாணர் குன்றில் உறை - ஐம்புலன்களாகிய குறவர்களுடைய மலையில் வசிக்கின்ற, பேதைகொண்ட - அறியாமையையுடைய பெண்ணாகிய ஜீவான்மாவடைந்த, கொடிது ஆன துன்ப - கொடிய துன்பத்தைப் புரியும், மயல்தீர - மயக்கம் நீங்க, குளிர் மாலையின்கண் - குளிர்ச்சி பொருந்திய மாலைநேரத்தில அணிமாலை தந்து - தேவரீரது திருமார்பிலணிந்துள்ள மாலையைத் தந்து, குறைதீரவந்து - இந்த ஜீவான்மாவினது குறை நீங்குமாறு வந்து, குறுகாயோ - அணுக மாட்டீரோ?

## பொழிப்புரை.

தாருகவனத்திருடிகளா லனுப்பப்பட்ட மான் குட்டியைக் கருணையினால் காத்திலேந்தியுள்ள, எவ்வுயிர்க்கும் எப்பொருட்கும் இறைவராகிய சிவபெருமான், குடிலை மந்திரோபதேசம் பெறும் பொருட்டு மகிழ்ச்சியுடன் வழிபாடுசெய்த ஞான சொரூபியே! கிரவுஞ்ச மலையும், மா மரமாகிநின்ற சூரபன்மனையும் அழியும்படியும்; அலைகளையுடைத்தான சமுத்திரம் அஞ்சவும், வடிவேலாயுதத்தை எறிந்த மிகுந்த தைரியத்தை யுடையவரே!, பதிஞானததால் மெய்ப் பொருளையறிந்து தேவரீரது அருணசரணாரவிந்தங்கள் இரண்டையும் வணங்குகின்ற அடியார்களது இன்னல்களை யகற்றுகின்றவரே! அழகிய செம்பொன்னனைய மயில்மேல் அமர்ந்து திருச்சீரலைவாய் என்னுந் திருத்தலத்தில் மகிழ்ச்சியுடன் உறைகின்ற பெருமையிற் சிறந்தவரே! (எத்திறப்பட்டாரையும் மயக்குகிற) சக்தியையுடைய மன்மதன ஐந்து மலர்க்கணைகளைச் சிந்தவும, ஆகாயத்தில் சந்திரன் மிகவும்குளிர்ந்த கிரணங்களைப்பொழியவும், மெல்லியதென்றற்காற்று அக்கினிபோல் வந்து வெப்பத்தைச் செய்யவும், வினைகளைப்புரியுப பெண்கள் தங்கள் தங்களுக்குத் தோன்றியவண்ணமெல்லாம் நிந்தை மொழிகளைச் சொல்லவும், ஐம்புலன்களாகிய வேடுவர்களது கன்மங்களாகிய மலைமேலுறைகின்ற ஜீவான்மாவாகிய பெண்மங்கைகொண்ட கொடிய துன்பத்தை விளைக்கின்ற மயக்கம் நீங்குமாறு, குளிர்ந்த மாலை நேரத்தில் தேவரீர் அணிந்துகொண்டுள்ள மலர்மாலையைத்தந்து இந்த ஜீவான்மாவினது குறைதீருமாறு வந்து அணுகாயோ?

## விரிவுரை.

விறல்மாரன் :—

யயாதி, நகுஷன், புரூரவன், சர்யாதி முதலிய ராஜரிஷிகளையும், காசிபர், சியவனர், கௌதமர், பாராசர், விசுவாமித்திரர் முதலிய பிரம்ம ரிஷிகளையும்; இந்திரன், அக்கினி, பிரமன், திருமால் முதலிய இமையவர்களையும்; தனது மலர்க்கணைகளால் மயக்கி வாகைசூடி யோன் ஆதலால் மதனனை விறல்மாரன் என்றனர்.

ஐந்து மலர்வாளி :—

*மன்மதன் கணைகள் ஐந்து. அவையாவன: தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன. இவற்றின் பெயர் முறையே :— உன்மத்தம், மதனம், சம்யோகம், சந்தாபம், வசீகரணம் என்பனவாம். இவை செய்யும் அவத்தை :—சுப்ரயோகம், விப்ரயோகம், சோகம், மோகம், மரணம். இதன் விவரம : சுப்ரயோகம் :—சொல்லும் நினைவும்; விப்ரயோகம் :—வெய்துயிர்த்திரங்கல்; சோகம்:— வெதுப்புந் துய்யன தெவிட்டலும்; மோகம்:—அழுங்கலும் மொழி பல பிதற்றலும்; மரணம் :—அயர்ப்பும் மயக்கமுமாம்.*

பேதைகொண்ட கொடிதான துன்பமயல் :—

*தலைவன்மீது காதல்கொண்ட தலைவிக்கு குளிர்ந்த சந்திரனது தண்ணொளி வெப்பத்தையும், தென்றல் காற்று அனல்போன்ற வெம்மையையும் செய்யும். ஈண்டு ஜீவான்மா நாயகியாகவும், பரமான்மா நாயகனாகவும் வைத்து; பரமான்மாவாகிய நாயகன்மீது காதல் கொண்ட நாயகியாகிய ஜீவான்மா மிகுந்த தாபத்தையடைந்து வருந்துகின்றது. இங்ஙனம் நாயகி நாயகபாவத்தில் எழுந்த திருப்புகழ் பல.*

" துள்ளுமத வேள் கைக் கணையாலே
தொல்லை நெடுநீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே "

*—திருப்புகழ்,*

தென்றலையம்பு புனைவார் குமார திமிரமுந்நீர்த்
தென்றலையம்புய மின்கோ மருக செழுமறைதேர்
தென்றலையம்பு சகபூ தரவெரி சிந்திமன்றல்
தென்றலையம்பு படுநெறி போயுயிா தீர்கின்றதே.

*இங்ஙனம் பரமான்மாவின்மீது வேட்கைகொண்ட ஜீவான்மா அவ்வேட்கைதீர மலர்மாலையை விரும்புகிறது.*

" நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே "

*—திருப்புகழ்.*

மறிமான் . . . . . வழிபாடுதந்த மதியாளா:—

## ஆறுமுகச் சிவனாரை ஐம்முகச் சிவனார் வழிபட்ட வரலாறு.

கயிலைமலையின்கண் குமாரக்கடவுள் வீற்றிருந்த ஞான்று சிவ வழிபாட்டின்பொருட்டு வந்த அமரர்கள் அனைவரும் குகக்கடவுளை வணங்கிச்சென்றனர். அங்ஙனம் வணங்காது சென்ற பிரமனை யழைத்து பிரவணப்பொருளை வினவி, அதனையுரைக்காது விழித்த அம்புயனை அறுமுகனார் சிறைப்படுத்தி, முத்தொழிலும் புரிந்து தாமே மூவர்க்கும் முதல்வன் என்பதை மலையிடை வைத்த மணிவிளக்கென வெளிப்படுத்தினர்.

பின்னர் ஒருகால் கந்தாசலத் திருக்கோயிலின்கணிருந்த கந்தக் கடவுள் தந்தையாராகிய தழல்மேனியாரைத் தெரிசிக்கச் சென்றனர். பொன்னார் மேனிப்புரிசடை யண்ணல் ' புதல்வ! இங்ஙனம் வருக'' என்று எடுத்து அணைத்து உச்சி மோந்து முதுகுதைவந்து ''குமார! நின் பெருமையை உலகமெவ்வாறு தெறியும்: மறைகளால் மனத்தால் வாக்கால் அளக்கவொண்ணாத மாப்பெருந்தகைமையுடைய நின்னை உள்ளபடி உணரவல்லார் யாவர்?'' என்று புகழ்ந்து அதனை விளக்குவான் உன்னி எத்திறப்பட்டோர்க்கும் குருநாதனின்றி மெய்ப் பொருளை யுணரமுடியா தென்பதையும், குருஅவசியம் இருத்தல் வேண்டுமென்பதையும் உலகிற்கு உணர்த்துமாறுந் திருவுளங்கொண்டு, புன்முறுவல்பூத்த முகத்தினராய் வரைபகவெறிந்த வள்ளலை நோக்கி,

அமரர்வணங்குங் குமாரநாயக! அறியாமையானாதல், உரிமை குறித்தாதல் நட்பினர் மாட்டும் பிழைகள் தோன்றல் இயற்கை. அறிவின்மிக்க ஆன்றோர் அறிந்து ஒரு பிழையும் செய்கிலார். அறிவிற குறைந்த சிறியோர் அறிந்தும், அறியாமையானும் பெரும் பிழைகளையுஞ் செய்வர். அவ்வத்திறங்களின் உண்மைகளை யறிந்த பெரியோர் அதுபற்றிச் சினந்து வைரங்கொள்ளார். ஆதலால் அயபுயனும் அறிவின்மையால் நின்னைக்கண்டு வணக்கம் புரியாது சென்றனன். அவனை விளித்து அவன் மூக்கிலும் செவிகளிலும் வாயிலும் கண்களிலும் உதிரஞ் சொரியுமாறு குட்டி, கணங்களால் அடிப்பித்து, பல நாளாகச் சிறையிலிருத்தி, எல்லார் தொழிலையும் நீயே யியற்றினை. எல்லார்க்குச்செய்யும் வணக்கமும் நினக்கே யெய்துந்தகையது; அறு

சமயத்தார்க்கும் நீயே தலைவன்" என்று எம்பிரானார் இனிதுகூறினர். எந்தை கந்தவேள் இளநகைகொண்டு "தந்தையே! ஓமெழுத்தின் உட்பொருளை யுணராப் பிரமன் உலகங்களைச் சிருட்டி செய்யும் வல்லவனாதல் எவ்வாறு? அங்ஙன மறியாதவனுக்குச் சிருட்டித் தொழிலை யெவ்வாறு கொடுக்கலாம்?" என்றனர்.

சிவபெருமான் "மைந்த! நீ அதன் பொருளைத் தெரிக்குதி" என்ன, குன்றெறிந்த குமாரக்கடவுள் "அண்ணலே! எந்தப்பொருள்களும் உபதேசமுறையினாலன்றி உரைத்தல் தகாது. காலம் இடம் என்பன அறிந்து, முறையினாற் கழறவல்லேம்" என்றனர். அரனார் கேட்டு "செல்வக்குமர! உண்மையே உரைத்தனை; ஞானபோத உபதேசப்பொருள் கேட்டதற்கு சிறந்ததென்னும மாசிமாதத்து மக நாள் இதோ வருகிறது; நீ எஞ்ஞான்றும நீங்காது விருப்புடனமருந் தணிகைவெற்பை யடைகின்றாம்" என்று கணங்களுடன் புறப்பட்டு ஏறூர்ந்து தணிகைமாமலையைச் சார்ந்தனர். குமாரக்கடவுள் தோன்றாமை கண்டு, பிரணவப்பொருள் முதலிய உணமையுபதேசமெல்லாம் தவத்தானும் வழிபாட்டானுமே கிடைக்கறபாலனவென்று உலகங் கண்டு தெளிந்துய்வான றவம்புரிய ஆரம்பித்தனா. ஞானசத்திதாக் கடவுளாரின் அத்தாணி மண்டபம எனப்படூஉம் திருத்தணிமலைச் சாரலின் வடகீழ்ப்பாற் சென்று, தம்புரிசடை தூங்க, வேற்படை விமலனை உளநிறுவி ஓர் கணப்பொழுது தவம்புரிந்தனர். எல்லாம் வல்ல இறைவன் அங்ஙனம ஒரு கணப்பொழுது தவமுஞற்றலானன்றே அத்தணிகைமலை கணிக வெற்புஎனப் பெயர்பெற்றதென்ப.

கண்ணுதற்கடவுள இங்ஙனம் ஒரு கணம் தவமியற்றக் கதிர் வேலண்ணல் தோன்றலும், ஆலமுண்ட அண்ணல் எழுந்து குமரனை வணங்கி வடதிசை நோக்கி நினறு பிரணவ உபதேசம் பெறும் பொருட்டு சீடனது இலக்கணத்தை உலகிறகு உணர்த்தும்பொருட்டு சிஷ்யபாவகமாக நின்று வந்தனை வழிபாடுசெய்து பிரணவோபதேசம் பெற்றனர்.

எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை யதனொடுந் தாழ்வயிற்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலா மொழிதரக் கேட்டனன்.

—தணிகை புராணம்.

ளால் வழிபாடுசெய்து, முருகவேள் சரித்திரத்தை பக்தியுடன்கேட்டு உபவாசமிருந்து பகல் முழுவதும் குகசிந்தையுடன் இருந்து, இரவில் தருப்பையைப் பரப்பி அதன்மீதிருந்து அரிவையரை அணுவளவும் நினையாது அறுமுகவள்ளலின் அடிமலரையுன்னி, துயில்புரியாது தியானம்புரிந்த நிலையில் இருந்து விடிந்த உரோகணி நட்சத்திரத்தில் விடியற்காலத்தில் நீராடி நித்தியகரும முடித்து, கந்தவேளை முன் போல் வழிபட்டு, அடியார்களுடனிருந்து பாரணைபண்ணி அப்பகல் உறங்காது வைகி மாலைக்கடன் முடித்து அன்றிரா உறங்கவேண்டும இவ்வித கந்த விரதத்தை விநாயகமூர்த்தி பணித்தவாறு, நான்முகன் மகனாகிய நாரதமுனிவர், பன்னிரண்டாண்டு ஆற்றிக் கந்தவேளைத் தரிசித்துத் தேவ இருடிகளில் முதன்மைப்பேறு பெற்றனர். இவர் வள்ளிநாயகியை மணமபுணருமாறு விண்ணப்பம்புரிய, அவரை வழி காட்டுமாறு செய்து வள்ளிநாயகியை வரைபகவெறிந்த வடிவேலண் ணல் மணம்புரிந்துகொணடனர்

இதன தத்துவம் :—

வள்ளி யென்பது ஜீவான்மா ; முருகன் பரமான்மா ; நாரதர் வள்ளியினது தபோ சக்தி , தபோ சக்திதான் ஆண்டவனை அருள் புரிய அழைத்துவரும். வள்ளிநாயகியார் திருமண தத்துவத்தைப் பின்னர் விரிவாக விளக்குவாம்.

சேலோடு . . . . சீரலைவாய :—

திருச்செந்தூரில் நீர்வள மிகுந்திருப்பதால் வயல்களில் வாழும் வாளை முதலிய மீனினங்கள் துள்ளிக்குதித்து கமுகுகளில் தாவி விளையாடுகின்றன.

## கருத்துரை.

நான்முகனைத் தண்டனை புரிந்தவரே ! இராவண சம்மாரம்புரிந்த இரகுவீரரது மருகரே ! நாரதனாபுகல் வள்ளிபிராட்டியை மணந்த வரே ! செந்திமாநகரதனில வாழும கந்தமூர்த்தியே ! பெருமையின் மிக்கவரே ! தோலால் மூடிய சிறுகுடிலை நம்பி, மாதர் மயலுற்று, பொருள்தேடுமாறு நாதுதிசெய்து அலையும் தீயவனாகிய அடியேன் விரும்பினால் உலக துன்பமற மெய்ஞானதவத்தைத் தமது திருவருள் சிறிது உணடாக்கச் செய்யாதோ ?

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(110-ம் பக்கத் தொடர்ச்சி.)

विधौक्लृप्तदण्डान् स्वलीलाधृताण्डा-
न्निरस्तेभशुण्डान् द्विषां कालदण्डान् ।
हतेन्द्रारिषण्डान् जगत्त्राणशौण्डा-
न्सदा ते प्रचण्डान् श्रये बाहुदण्डान् ॥

(12) விதௌ4 க்லுப்த த3ண்டா3ஸ்வலீலாத்4ருண்டான்
நிரஸ்தே4ப சுண்டா3ன் த்4விஷாம காலத3ண்டான் |
ஹதேந்த்ராரி ஷண்டான் ஜக3த்த்ராண சௌண்டா3ன்
ஸ2தாதே ப்ரசண்டான் ஸ்ரயே பா3ஹு த3ண்டான் ||

## பதவுரை.

ஹேஸ்கந்த! - ஓ ஸ்கந்தமூர்த்தியே!
விதௌ - பிரமதேவன் விஷயத்தில் (பிரமதேவனை),
கலுப்ததண்டான் - செய்யப்பட்ட தண்டனையை யுடையதும (தண்டித்தவைகளும),
ஸவலீலாதருதண்டான் - விளையாட்டாகவே அண்டங்களைத் தாங்குகின்றவைகளும்,
நிரஸ்ததேபசுண்டான் - அழகினால் திரஸ்கரிக்கப்பட்ட யானைத் துதிக்கைகளையுடையவைகளும் அல்லது யுத்த காலத்தில் அசுரர்களின் யானைகளின் துதிக்கைகளை வெட்டி எறிந்தவைகளும்,

| | |
|---|---|
| த்விஷாம் காலதண்டான் | - பகைவர்களுக்குக காலனின் தண்டாயுதம் போன்றவைகளும, |
| ஹதேந்த்ராதிஷண்டான் | - கொலலப்பட்ட அசுரர்களை யுடையவைகளும (அசுரர்களை அழித்தவைகளும), |
| ஜகத்ராண சௌண்டான் | - உலகத்தை யிரட்சிப்பதில சமாத்தங்களும, |
| ப்ரசண்டான் | - பெரியவைகளுமான, |
| தேபாஹூ-தண்டான் | - தேவரீருடைய கைகளை, |
| ஸதா | - எப்போதும, |
| ஸ்ரயே | - ஆஸ்ரயிக்கின்றேன. |

## பொழிப்புரை.

பிரமதேவனைச் சிறையிலடைத்தவைகளும் விளையாட்டாகவே அண்டங்களனைத்தையும் தாங்குகின்றவைகளும யானைகளின் துதிக்கைகளுக்கொப்ப அழகுவாய்ந்தவைகளும அல்லது அசுரர்களால் ஏவப்பட்ட மதயானைகளின் துதிக்கைகளை அறுத்தெறிந்தவைகளும் அசுரர்களை அழித்தவைகளும உலகத்தைக் காக்க வல்லவைகளும பெரியவைகளும் ஆன தேவரீரது திருக்கரங்களை எபபோதும ஆஸ்ரயிக்கின்றேன. இதனால் இத்தகைய திருக்கரங்களைத் தியானிக்கும் அடியவர்களுக்கு திவ்யஞானமும சத்ருஞானமும அபீஷ்ட்ட சித்தியும் உண்டாகும் என்னும உண்மையை உணர்த்தப்பட்டதோடு பிரணவத்தின பொருள் தெரியாவிடினும வீணே செருக்குபடைத்த பிரமனைப்போல் அகங்காரத்தையுடைய ஜீவர்கள் துன்பப்பட நேரும் என்பதும் அறிவுறுத்தப்பட்டது,

सदाशारदाः षण्मृगाङ्का यदिस्युः
समुद्यन्त एव स्थिता श्चेत् समन्तात् ।
सदा पूर्णबिम्बाः कळङ्कैश्चहीना
स्तदात्वन्मुखानां ब्रुवेस्कन्द साम्यम् ॥

(13) ஸதா சாரதா: ஷண்ம்ருகாங்கா யதிஸ்யு:
ஸமுத்யந்த ஏவஸ்திதாஸ்சேத் ஸமந்தாத் ।
ஸதாபூர்ண பிம்பா: கலங்கைஸ்ச ஹீநா
ஸ்ததா த்வன்முகாநாம் ப்ருவேஸ்கந்த ஸாம்யம் ॥

## பதவுரை.

ஹே ஸ்கந்த ! - ஓ கந்தமூர்த்தியே!
ஸதா - எக்காலத்தும்,
பூர்ண பிம்பா: - பூர்ணபிம்பங்களை யுடையவைகளும்,
கலங்கை:ஸஹீநா: - கலங்கமின்றியவைகளும்,
ஸாரதா: - சரத்காலத்தியவைகளும் ஆன,
ஷட்ம்ருகாங்கா: - ஆறு சந்திர பிம்பங்கள்,
ஸமந்தாத் - நான்கு பக்கமும்,
ஸமுத்யந்த ஏவ ஸ்திதாஸ்சேத் - உதித்துக்கொண்டிருப்பவைகளாக இருக்குமேயானால்,
ததா - அப்போது,
தவ முகானாம் - தேவரீரின் திருமுகங்களுக்கு,
ஸாம்யம் - ஸமானத்தன்மையை (ஒப்பை),
ப்ருவே - கூறுவேன்.

## பொழிப்புரை.

ஓ கந்தப்பெருமானே! சரத்காலத்திய ஆறு பூர்ண சந்திரர்கள் களங்கமின்றியவைகளாய் நான்கு பக்கமும் உதித்துக்கொண்டிருக்குமேயானால் அப்போது தேவரீரது திருமுகங்களுக்கு ஒருவாறு ஒப்பிட்டுக் கூறுவேன். இதனால் சுவாமியின் திருமுகங்கள் ஒப்பற்றவைகளென்றும் தியானிப்பவர்களின் ஆத்யாத்மிகாதி தாபத்திரயங்களைக் கெடுத்து ஆனந்தத்தைக் கொடுக்கவல்லவைகளென்றும் பெறப்பட்டது.

**स्फुरन्मन्दहासैः सहंसानि चञ्च-**
**त्कटाक्षावलीभृङ्गसङ्घोज्ज्वलानि ।**
**सुधास्यन्ति बिम्बाः धराणीश सूनो**
**तवा लोकये षण्मुखाम्भोरुहाणि ॥**

(14) ஸ்புரன்மந்தஹாஸைஸ்ஸஹம்ஸானி சஞ்சத்
கடாக்ஷாவலீப்ருங்க ஸங்கோஜ்வலானி |
ஸுதாஸ்யந்தி பிம்பா தராணீச ஸூநோ
தவாலோகயே ஷண்முகாம் போருஹாணி ||

## பதவுரை.

ஹே ஸாம்பஸூநோ - பரமசிவனுடைய புத்திரனே :

ஸ்புரன் மந்தஹாஸை: - பிரகாசியாநின்ற புன்முறுவல்களாகிய அன்னப்பட்சிகளையுடையனவும்,

சஞ்சத் கடாக்ஷா வலீப்ருங்க ஸங்கோஜ்வலானி - அசைய நின்ற கடாக்ஷங்களாகிய வண்டுகளால் அழகியனவும்,

ஸுதாஸ்யந்தி பிம்பாதராணி - சந்திரபிம்பங்களைத் தாழ்மைப்படுத்துகின்றனவும் அல்லது அமிர்தம் சொட்டுகின்றனவும் கோவைப்பழம்போன்று சிவந்திருப்பனவுமாகிய இதழ்களையுடையனவும் ஆகிய,

தவ - தேவரீரது,

ஷட் - ஆறு,

முகாம்போருஹாணி - திருமுகங்களாகிய தாமரைப்பூக்களை,

ஆலோகயே - தரிசிக்கின்றேன்

## பொழிப்புரை.

புன்சிரிப்புடையவைகளும் அடியவர்களுக்கு ஏதேனும் ஆபத்துண்டாவென்று எப்போதும் கவனித்துக்கொண்டேயிருப்பதனால் அசைந்துகொண்டிராநின்ற கடாக்ஷத்தையுடையவைகளும் சந்திரபிம்பத்தையும் கோவைப்பழத்தையும் அழகினால் தோற்கடிப்பவைகளும் ஆகிய தேவரீரது முகாரவிந்தங்களை தரிசிக்கின்றேன். இதனால் இத்தகைய முகாரவிந்தங்களைத் தியானிக்கும் அன்பர்கள் நித்தியாநித்ய வஸ்துவிவேகம் வைராக்கியம் ஸாதுஸங்கம் முதலியவைகளையடைந்து மோட்சத்தையுமடைவார்கள் என்னும் உண்மையை உணர்த்தப்பட்டது.

(தொடரும்.)

ஓம் குஹாய நம:

# கந்தர் திருவிளையாடல்

(116-ம் பக்கத் தொடர்ச்சி)

## மோன நீவகுதல்.

திசைமுகனாதி தேவர்கள் மன்மதனை எரிந்து நீறாயினதையும், சிவமூர்த்தி முன்போலவே மௌனத்துடன் வீற்றிருந்ததையுங்கண்டு, உடல் வியர்த்து, உள்ளங்கலங்கி, விழிநீர் பெருக்கி, மெய் நடுங்கி, துன்பக்கடலில் அழுந்தி, அழுதார்கள். "நமது அல்லல் அகலும் பொருட்டு ஆவலுண்ட அண்ணலிடம் மன்மதனை யேவினேம். அரனார் அவனைப் பொடிபடுத்தினார், மோனநிலையினின்றும் நீங்கினாரில்லை. அந்தோ! இனி என் செய்வோம்?" என்று புலம்பினார்கள். "காமனை எரித்த கண்ணுதலுடைய மௌனநிலையை உபாயத்தினால் மாற்றுதல் முடியாது; அவர் நம்மைத் துன்பத்தினைத் துடைத்து இன்பத்தை நல்கிக் காத்தருளவேண்டுமாயின், நாம் அவரைத் துதிப்பதே கடன்" என்று எண்ணி அயன் முதலிய அமரர்கள், கயிலைமலையின்மேற் றிகழும் கோபுரத்தின் புறத்தே சென்று துதிக்கலானார்கள். மங்கை பாகா! சொற்பதங்கடந்த அற்புதா! மூவருமறியா முழுமுதலே! கடல்நஞ்சை யருந்தியும், கங்கையைச் சூடியும், நெற்றியில் கனல்விழியைப் படைத்தும், கொடிய அவுணர்களைக் கொன்றும், முன்னாளில் எளியேங்களைக் காத்தருளினீர் இத்தருணம் கைவிடுவீரேல் மைந்தர்களாகிய எமக்குத் தந்தையாகிய தேவரீரையன்றி புகலிடமாவார் யாவர்? அடியர்கள் குற்றமேசெய்யினுங் குணமெனக்கொள்ளும் குன்றவில்லியே! உமது பூங்கழலே சரணமென்றடைந்தேம். நாங்கள் நாடோறும் சூரபன்மனாலே துன்புற்று மாளலாமோ? எமது இடரைச் சிறிதேனும் நினைந்தருள்புரியீரா? எந்தையே! அம்பிகையைப்பிரிந்து யோகநெறியைக் காட்டியது உமக்கு ஓர் கணப்பொழுதேயாகும்; எமக்கு எண்ணிலா யுகங்கள் சென்றன; இன்னும் தாங்கள் புறக்கணித்திருக்கில் யாம் எவ்வாறு உய்வேம்? திருமால் முதலிய அனைவரும் உம்மை நோக்கி அருந்தவம்புரிந்து உமது அடிமலர்களை அர்ச்சிக்க, தேவரீரே இப்பதவி

களையும் ஏனைய நலன்களையும் தந்தருளினீர். தோற்றமின்றியே ஐந்தொழிலியற்றிய தொல்லோய! நீர் கொண்ட தவநிலை எம்பொருட்டேயன்றோ? அடியேங்கள் செய்த தீவினையால் தினந்தோறும் துன்பமாகிய வாளால் துணிக்கின்றீர்; இனி எங்களைக்காப்பாற்றுதல் அல்லது அழித்துவிடுதல்; இந்த இரண்டில் எது உமக்குத் திருவுளமோ அதைபுரியும் தேவ தேவ! உமாதேவியை மணந்து எமது இடரைக் களைவீரென்று அறிவிலிகளாகிய அடியேங்கள் மதனனை யனுப்பினேம். அவனை எரித்து முன்போலவே மோன நிலையில் எழுந்தருளியுள்ளீர், இங்கு யாம் இடர்ப்பட்டு அழிவது தக்கதோ? இனியேனும் சிறிது திருவுளமிரங்கிக் காத்தருளல்வேண்டும். நரசிங்க முதலிய விலங்குகளை உரித்து அவற்றின் தோல்களைத் தரித்தீர்; தக்கனது பெருமகத்தை வீரபத்திரரைக்கொண்டு தடிந்தீர்; அதுபோல் சூராதியவுணர்களைத்தொலைத்து எமது துன்பத்தை துடைத்தல்வேண்டும்" என்று முறையிட்டார்கள்.

பிரமாதி தேவர்கள் அழலிடைப்பட்ட மெழுகென உருகி அழுது தொழுது காமுற்று அரற்றித்துதித்தலும், அவர் பாவந் தொலையுஞ்சமையம் நெருங்கிவிட்டதால் திருவுளமிரங்கி, நந்தியை நினைந்தனர். அதனையுணர்ந்த நந்திதேவர் இறைவன்முன் சென்று இறைஞ்சி நிற்க, சிவமூர்த்தி "அம்புயனாதி அமரர்களை நம்முன் அழைத்து வருதி" என்றனர். நந்தியங்கடவுள் கோபுரவாயிலை யடைய பங்கயனாதியோர் பணிய" நந்திதேவர் "வருந்தன்மின், உம்மை யழைத்துவருமாறு கண்ணுதற்பெருமான் கட்டளையிட்டனர்; வாருங்கள்" என்றனர். அவ்வார்த்தை அமுதஞ்சொரிவது போல் செவியில் நுழைதலும் தேவர்கள் உளப்புறுமகிழ்வெய்தி, சிவமூர்த்தியைத்துதித்து ஆடினார்கள். நந்திதேவர் அவர்களை அழைத்து சிவசந்நிதியில் விடுத்தனர். தேவர்கள் மதிமுடிப்பரமனைப் பலகாலும் பணிந்து, பூதநாத! பொருவிடைப்பாக! சிவசிவ! ஹரஹர! என்று துதித்து நின்றனர்கள். புரமெரித்த புண்ணியன் "துன்பத்தையும் விண்ணப்பத்தையும் விளம்புமின்" என்றனர்.

தேவர்கள் "அருட்பெருங்கடலே! அநேக யுகங்களாக சூரனது ஆணையால் அலக்கணுற்று வருந்துகிறேம்; தங்களையன்றி எமது துன்பத்தை நீக்குவோர் யாவருளர்? சூராதியவுணரையழிக்க வல்ல ஓர் குமாரரைத் தந்தருளும் வண்ணம், இமயமால்வரையில் தவம் புரியும் மரகதவல்லியை மணமுடித்தருளல் வேண்டும்" என்றுகூறி

எம்பெருமான் இணையடிமேல் வீழ்ந்து வேண்டினார்கள். மதிமுடிப் பரமன் "அன்புடையீர்! வருந்தாதீர்; உங்கள் பொருட்டு மலை மங்கையை மணந்து உமது வருத்தத்தை மாற்றுதும். நீவிர் நுமது இருக்கை செல்லுமின்" எனஅருளபுரிந்தனர். தேவர்கள் மகிழ்ந்து வணங்கி மேருமலையைச் சேர்ந்தனர்கள்.

அதுகண்ட இரதிதேவி எம்பெருமான் திருமுன்னர் வந்து வணங்கி "முறையோ! முறையோ!" எப்பொருட்கும் இறைவ! பங்கயனாதி பணாவா ஏவலினாலே எனது நாயகன் தேவரீர்மீது மலர்க்கணைகளை ஏவி அழிந்தனன் அவன்புரிந்த குற்றத்தைத் திருவுளங்கொள்ளாது அருள்புரிதல்வேண்டும" என்று முறையிட்டனள். சிவபெருமான் கருணைகூர்ந்து "இரதியே! நீ புலம்பற்க; மலையரயன் தந்த மரகதவல்லியை யாம் மணம்புரியும்போது நினது பதியை உயிர்ப்பித்தருளுவேம்; சிந்தாகுலமற்று செல்லுதி" என்றனர். இரதிதேவி இறைவனை இறைஞ்சி இமையவரை சென்று ஒருபுறத்தே மேகத்தின் வரவை நோக்கும் மயிலேபோலிருந்தனள்.

சிவபெருமான் மலைவளர்காதலியை மணம்புரிவானுன்னி "சனகாதி நால்வரை நோக்கி "மைந்தர்களே! சிவஞானமென்பது வாய்விட்டு சொல்லுந் தகையதன்று; அது இவ்வாறு மௌனத்தோடிருந்து நம்மை அறிவதேயாம்" என்று கூற; முனிவர்கள் தெளிவடைந்து தேசிகேசனாந் தேவதேவனைப் பன்முறை வணங்கி "எந்தாய்! அடியேங்கள் மயக்கமற்று தெளிவடைந்தேம்; ஆவியீடேறும் வகைபெற்றுய்ந்தேம்" என்று புகழ்ந்து போற்றினர். கறைமிடற்றண்ணல் "இனி நீவிர் இவ்வாறு சிவயோகத்திருந்து எமது சிவகதி சேருமின்' என்று விடைதந்தனுப்பினா.

## அம்பிகையின் தவநிலையறிதல்.

தண்ணருள் நிறைந்த கண்ணுதறகடவுள், இமயவெற்பின்மீது மாதவம்புரியும் மலைமகள் தமதுமீதுள்ள தலையன்பையும் காதலையும் உலகிற்கு உணர்த்துமாறு திருவுளங்கொணடு, சிவந்தவுடையும், சிகையும், திருநீறுபூசிய திருமேனியும், பூணூலும், கையில் கமண்டலமும், மழையையும் பனியையும் வெய்யிலையும் காக்கும் ஓலையையும், தண்டும் உடைய முதிய அந்தணவடிவங்கொண்டு பார்வதியம்மையாரது தவச்சாலையை யடைந்தனர். வாயில்காக்கும் மகளிர்கள் பலர் "இவர்

தூய வயோதிகர்" என்று வந்து அவரை வணங்கிநின்று "தளர் நடையுடைய பெரியவரே! இப்பனிமலையின்மீது வருதல் எளிதன்று; தாங்கள் வந்த காரியம் யாது?" என்ன அந்தணர் "நேரிழையீர்! மலைவளர்காதலியாகிய பார்வதியின் தவத்தைக் காணும்பொருட்டு வந்தேன்" என்றனர். சில மாதர்கள் உடனே உமாதேவியிடஞ் சென்று கிழவேதியரது வரவை விண்ணப்பஞ்செய்ய; அம்பிகை "அவர் முதியவராயின் இங்கே அழைத்துவம்மின்" என்று கட்டளையிட, சேடியர் அவ்வந்தணரை அம்மையார்முன் விடுத்தனர். அவரைக்கண்டவுடனே அம்மையார் "இவர் எம்பிரானுடைய அடியவர்" என்று பத்தியுடன் வழிபாடுசெய்து பணிந்தனர். உமையம்மையாருக்கு மெய்த்துணையாயுள்ள விசயை என்பவர் ஓராசனமிட்டு அதில் பெரியவரை இருத்தினள். உமை ஒருபுறத்தில் ஒதுங்கி நின்றனர். அருந்தவக்கிழவர் அம்பிகையை அன்புடன் பார்த்து "பெண்மணியே! அளவிடற்கரிய நின் அழகு குன்றவும், உடல் தசை வாடவும், யாது குறித்துத் தவம்புரிகின்றனை? நின் விருப்பம் என்னை? கூறுதி" என்றனர். மலைமகள் விசையையின் முகத்தை நோக்கி, குறிப்பினால் "நீ இவருக்கு எதிர்மொழி இயம்பக்கடவாய்" என்று கண்காட்ட, விசையை அக்குறிப்பையுணர்ந்து, "அருந்தவ அடிகளே! கண்ணுதற்கடவுள் தன்னை மணந்து தன்னிடமிருத்திக் கொள்ளும்வண்ணம் இவ்வம்மையார் தவம்புரிகின்றனர்" என்றுரைக்க, முதியவர் முறுவல்செய்து மொழிந்தருளுவர்.

புலியரித்தருள் முதல்வரு நாடரும் புனிதனருன்
இவள தவத்தினுக் கெளியனோ எய்தினுமிவளையாளை
அவன்விருப்போடு வரையுமோ உமையவ ளறியாமே
தவமியற்றினள எளியனோ சங்கரன்தனக் கம்மா.

பொற்றொடி! மாலுமயனும் காண்டற்கரிய மறைமுதற்கடவுள் இவள் தவத்திற்கு இரங்கி வருவனோ? அங்ஙனம் வந்தாலும் இவளை விரும்பி திருமணங்கொள்வரோ? என்னே பேதைமை? உமையவள் இதனையறியாது தவமியற்றினள். சிவமூர்த்தி எளியனோ? அளக்கரிய துன்பத்துடன் இவள் செய்யுந்தவத்தினாலாகிய பயன் ஒன்றுமில்லை. ஒருவராலும் அடைதற்கரிய பரம்பொருள் இவளுக்கு எளிதாகுமோ! பன்னெடுநாள்களாக தவஞ்செய்து வீணே உடல் நலத்தையும் கட்டழகையும் பாழ்படுத்தினள். விரைவில் இத்தவத்தை விடுவதே நலம்" என்றார். இதனைக்கேட்ட இமயவல்லி "அந்தோ!

இவர் எம்பிரானுக்கு அன்பா; முதியவேதியர் என்று எண்ணினேன் இவர் இப்படிப்பட்ட கொடுஞ்சொற்களைக் கூறுவரென்றுணராமற் போனேனே'' என்று சினங்கொண்டு, பெருமூச்செறிந்து. நாணத்தை நீக்கி மனம்பொறுக்கமுடியாததால் கூறலாயினா. "ஐயா! ஆதியும் அந்தமு மில்லாத ஐம்முகச்சிவனர் எனது விருப்பத்தை நிறைவேற்றுது விடுவாராயினும யான் இத்தவத்தை விடுவனே? ஒருபோதும் விடேன். இன்னும அளவில்லாத கடுந தவததைச் செய்து உயிர் விடுவேன். நீ மிகவும் கிழத்தன்மையை யடைநததால் மயக்கமுற்றாய்; நீ என்ன பித்தனோ? எனறனள். எல்லாவுயிர்களையுமீன்ற இளமுலை நாயகி இவ்வாறுகூற, கிழவேதியா மீளவும் ஓர் தன்மையை உன்னி உமாதேவியை நோக்கி "பெண்ணே! நீ விரும்பிய விடையவனது வளங்களை நன்றாககக கேட்டிலாததில்லை போலும; யான் உணர்த்துவன்; கேள்

ஆடைதோல் விடை யேறுவ தணிகலம் அரவென்பு
கேடில வெண்டலை மாலிகை கேழலின மருப்பினன
ஓடு கோள்கலம் ஊண்பலி வெயநஞ் சுவப்புறரோ
காடதே நடம் புரிபிடங் கண்ணுதற் கடவுட்கே

பெண்மணியே! சிவனுக்கு ஆடை தோல்; வாகனம் எருது; ஆபரணம பாம்பு, எலும்பு தலைமாலை, பன்றிக் கொம்பு முதலியன; உண்ணுகின்ற பாத்திரம தலையோடு; உணவு பிச்சையும் விஷமும்? ஆடுகினற இடம் சுடுகாடு; தரித்துக்கொள்வன வெள்ளெருக்கு, அறுகு, கொன்றை, நொச்சி, ஊமத்தம், கங்கை, பாம்பு முதலியன பல; சந்தனம் சாம்பல்; கையிறபிடிததிருப்பன சூலம், மான், மழு, உடுக்கு, அக்கினி முதலியன; சூழ்ந்துளசேனை பூதங்கள; மேலும் அச்சிவனுக்கு தாயுமில்லை தநதையுமில்லை; தமருமில்லை; குணம் குறி செயல் குலம் என்பனவு மில்லை; அவனுக்குரிய பெருமைகள் இவைகளே. இவைகளெல்லாம் உன்னுடையனவாகும் பொருட்டோ நீ இவ்வாறு பெருந்தவம் புரிநது இளைத்தனை! மிகுந்த சிறப்புடைய மன்னர் மன்னனது மகளாகிய உனக்கு இது இயையுமோ? ஆதலால் தவத்தைவிரைவில் விடுப்பாயாக'' என்றனர். திரிபுரமெரித்த திங்கள் வேணியனது வசனங்களைக் கேட்டவுடனே அகிலாண்ட நாயகி கரங்களால இரு செவிகளையும் பொத்தி, "சிவ சிவ'' என்று கூறி துக்கமும் சினமுங் கொண்டு பார்ப்பனனே! கேள். எமது பிரானு

கிய என்போன்றவனிடம் நினக்கு சிறிதாவது அன்பில்லை, நீ இச் சிவவேடங்கொண்ட தன்மை வேடுவன் காட்டில் பறவைகளைப் பிடிக்கும் பொருட்டுப் பூசலை மேற்கொண்டமை போலும், முற்காலத்தில் சிவபக்தி யில்லாத தக்கன உன்னைப்போல, நெற்றிக்கண்ணுடைய சிவனை நிந்தித்துப் பேசியதும் அதனால் அவனடைந்த அலக்கணும் நீ கேட்டதில்லையோ? அந்தோ! எம்பிரானை இவ்வாறு என்முன் இகழ்ந்தாயே! நீ இந்நாள்வரை மாசறு மறைகளைச் சிறிதும் ஆராய்ந்திலைபோலும்? பசுபதி ஒருவரே பரம்பொருள் என்று வரையறுத்துக் கூறுகின்ற வேதங்களைப் பாராயணர்கள் ஓதினராயினும், அம்மறை நெறியில் நில்லாது, பொல்லா வொழுக்கத்தையே மேற்கொண்டு, முக்கண் மூர்த்தியை யிகழ்ந்து அத்தீவினையால் முத்தியடையாது பிறப்பிறப்பென்னும் பெருங்கடற்பட்டுழலும்வண்ணம், முன்னாளிலே முனிச்சிரேட்டர்களாலே மறையவர் பெற்ற சாபம் நினையும் மயக்காமல்விடுமோ? உலகங்களுக்கெல்லாம் தந்தையாய்த் தங்களைப் பெற்றுத் தங்கள் தொழிலுக்குத் தலைவனாய இன்றியமையாப்பெருமையையுடைய இறைவனாகிய சிவபெருமானை நீங்கி, தனது கணவனை விட்டு அயலானை மருவிக் கற்பினையிழந்த மாதரைப்போலும் வேதியரது முறையையே நீ செய்தாய்; உன்னை யான் வெறுப்பதில் என்ன பயன்? ஆயினும் வேதியர்கட்குள் வேதத்தில் விதித்தபடி விபூதி உருத்திராக்கமாதி சிவச்சின்னங்களைத் தரித்து சிவபெருமானுக்குத் தொண்டுசெய்வாரும் உண்டு; நீ அவர்களைப்போலச் சிவச்சின்னங்களைத்தரித்தும் சிவநிந்தை செய்தாயென்னின், அசுரர்களுள்ளும் நின்னைப்போல் தீயவரில்லை, வேண்டுதல் வேண்டாமையில்லாத விமலனை ஈண்டு நீ இகழ்ந்தனவெல்லாம் சர்வஜீவதயாபரனாகிய சங்கரன் ஆன்மாக்கள் உய்யும்வண்ணம் கருணைப்பெருக்கால் பூண்டருளுங் குறிகளென்று அறியக்கடவாய். இவையெலாம் எம்பிரானுக்குப் புகழேயாம். அப்பரமபதியினது இயல்பனைத்தும் அறியவல்லார் யாவர்? அறிவிலியே நீ இகழ்ச்சிபோல இயம்பியவனைத்தும் மாலயனாதிவானவர்கள் தம்மை வழிபட்டுத் துதிக்க அவர்களுக்கு ஆற்றலையும் அதிகாரத்தையும் நல்கிய முழுமுதற்கடவுள் விருப்பும் வெறுப்புமின்றி ஆன்மாக்களுக்கு அருள்புரியும நிலையே என்று நினை. ஆரணமாதி அறிவு நூல்களும் இவ்வாறே கூறுகின்றன. இவற்றையெலாம் தெளிந்த மெய்யறிவுடைய மேலோர்களுணர்வார்கள். சிவநிந்தை புரியும் மகாபாவியாகிய உனக்குச் சொல்லப்படாது; சொன்னாற்

பாவம் ; பொய்வேடங்கொண்டவனே ! நீ விரைவிற் புறத்தே போய் விடு" என்று கூறினர்.

அறம்வளர்த்த நாயகியை நோக்கி அரனார் "பெண்பாவாய்! உன்மீது காதல்கொண்டுவந்த என்செயலைக் கேளாது புறத்தே போ என்று கூறுதல் தருமமோ? நான் இங்கு வந்தது மறைமுறைப்படி உன்னை மணங்கொள்ளும்பொருட்டேயாம்" என்றனர். உள்ளங் கவர்கள்வனது வாசகத்தை மலைமங்கை இருசெவிபொத்தி விம்மி யழுது, மெய்பதைத்து, "இக்கிழவன் போகான்; நானே போவேன்" என்று பஞ்சினுமினிய பாதங்கள் சிவக்க ஆங்கு ஓர் புறத்திற் போதலுற்றனர். அம்மையாரது தவவுறுதியையும் தனிப் பெருங்காதலையுங் கண்ட சிவமூர்த்தி வரம்பிலாக் கருணைகூர்ந்து வேதியர் வடிவத்தை நீங்கி, சிவகணங்கள் சூழ்ந்து துதிக்க, விண்ணிடை விடைமேல் தோன்றினர். அம்மையார் ஆண்டவனைக்கண்டு திருமேனி நடுங்கி, நாணங்கொண்டு, பன்முறையும் பணிந்து எழுந்து கைகூப்பி நின்று, மட்டற்ற மகிழ்ச்சியுடன் போற்றி "அளவற்ற அறிவினாலும் எட்டாத ஆதியே! அருட்பெருஞ் சோதியே! தேவரீரது மாயையை யுணரேன், சிறிதும் அறிவில்லாப்பேதை உம்மை யிகழ்ந்தமையைப் பொறுத்தருளல்வேண்டும்" என்று குறையிரந்தனர். கயிலைக்கடவுள் "நற்றவ நங்காய்! நீ நம்மிடத்துள்ள அன்பின்பெருக்கால் முன்னே சொல்லியவெல்லாம் துதியாகவே கொண்டாம்; உன்னிடம் குற்றமுண்டாயினன்றோ நாம் பொறுத்தல்வேண்டும்; இனி கொடுந்தவத்தால் வருந்தவேண்டா; நாளை நின்னை மணஞ்செய்துகொள்ள வருவேம்" என்று புனித வாய் மலர்ந்து மறைந்தருளினர். அம்மையார் சிந்தை மிகமகிழ்ந்து சிவமூர்த்தியை நினைந்து துதித்துக்கொண்டிருந்தனர். சிலமகளிர் மலையரையனிடம் சென்று மழுவாளிவந்து திருவருள் செய்தமையைத் தெரிவிக்க, இமவான் கவலைநீங்கிக் களித்து தன்மனைவியாகிய மேனையோடு சென்று ஞானம்பிகையைத் தன்கோயிலுக்கு அழைத்துக்கொண்டு சென்றனன்.

(தொடரும்.)

---

ஓம் குஹாய நம :

# கற்பு

(58-வது பக்கம் தொடர்ச்சி)

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

பெண்மக்கள் தம்மையெய்திய கணவனை வழிபடுகின்ற செந்நெறியைக் கடைப்பிடித்து வாழ்வாரேயாமாயின் தேவர்கள் வாழுகின்ற தெய்வலோகத்தில் அத்தேவர்கள் பெருஞ்சிறப்பினைப் பெற்று இன்புற்று இனிது வாழுவார்கள். கணவனை வழிபடுகின்ற காரிகையர்களுக்கு இம்மையில் புகழும், மறுமையில் முத்திநலனும் உண்டாகும். கற்புடைய மனைவியை யுடையோனுக்கு கிடைக்கத்தகாத பொருள் மூவுலகிலு மில்லை. கற்புடையவள் வாழுகின்ற மனையே மனை; மற்றது புலிவாழுகின்ற புதர். நாயகனுக்குப் புகழ், அழகு, செல்வம், கல்வி, ஞானம், பாக்கி முதலிய எல்லா நலன்களும் கற்புடைய மனைவியினாலேயே உண்டாகும். கற்புடை மனைவியையுடையவனுக்குத் துன்பம் எக்காலத்தும் நேராது; நேர்ந்தாலும் விரைவில் நீங்கும். பெண்கள் கணவனைப் பிரிந்திருத்தல் கூடாது. ஒரு சமயம் தொழில்காரணமாக வெளியூர் செல்ல நேர்ந்தால் நாயகன் சென்ற இடத்தில் அவனுக்கு வழியில் இன்னல் நேராமலும் இன்பம் உண்டாகவும் இறைவனை வணங்குதல் வேண்டும். பெண்டிர்க்குத் தமது கணவனுடன் ஒருமித்து வாழும் இன்பத்தைக்காட்டிலும் உயர்ந்த இன்பம் சுவர்க்கலோகத்திலுமில்லை. நாயகனுடன் உறைவது வனவாசமேயாயினும் இந்திரலோகவாசமென எண்ணுவது உயர்குலப் பெண்டிரது இயல்பு.

ஸ்ரீராமர் தந்தைசொற்படி பதினான்குவருடம் அரண்யவாசத்திற்காக சடைமுடியுடன் சீதை வாழுகின்ற திருமாளிகையடைந்தனர். கணவனைக்கண்ட கட்டழகின் மிக்கசீதை எழுந்து தொழுது " நமது நாயகனுக்கு இன்று மகுடாபிஷேகமல்லவா ? அந்தக்காலமும் அகன்றுவிட்டதே ? மகுடாபிஷேககோலமின்றி மரவுரியுடன் சடா

மௌலியோடு விளங்குகின்றனரே? காரணம் யாது?" என்று ஐயுற்று ரகுநாதரை நோக்கி "ரவிகுல திலக! சிந்தை குடிகொண்ட செல்வ! மணிமகுடந்தாங்குதற்கென இருந்த நீர், சடைமுடியுடன் தோன்றிய காரணம் என்னை? என்ன துன்பம நேர்ந்தது? கூறியருளல்வேண்டும" என்றனள் மரகதவண்ணன் மனைவியைநோக்கி, "என் அருமைத்துணைவனாகிய இணையற்ற பரதன் ஆழிசூழ் அவனி முழுவதையும் அரியணை வைகி யரசாளுவன்; தாய்தந்தையராகிய இரு முதுகுரவர்ஆணை மேற்கொண்டு யான இன்று காடுசெல்வேன; மலைகள் அடர்ந்த கானகத்தில் தங்கியிருந்து திரும்பிவருவேன்! நீ வருந்தாது இவண இருப்பாயாக" என்றனர்.

பொருவில் வெம்பி புவிபுரப் பான்புக
லிருவரானையு மேந்திநே னின்றுபோய்க்
கருவி மாமழைக் கற்படங் கண்டு நான்
வருவே னீண்டு வருந்தலை நீயென்றான்.

சானகியின் கற்பின் திறத்தை பெண்மணிகள் உற்றுநோக்குக. இதனைக்கேட்ட சீதாதேவி, தனது கணவன் கானகம செல்வதற்கும் வருந்தினளில்லை; கணவன் வெண்கொற்றக் குடையின்கீழமர்ந்து வேலைசூழ ஞாலமெல்லாம் தனிச்செங்கோல் செலுத்தியாளும அரசுரிமையை யிழந்தானென்றும் கலங்கினளில்லை; "நீ வருந்தாதே; நான் நீங்குவேன்" என்ற சொற்களானது செவியைச் சுட்டுவிட்டதால் மனம் வருந்தி துன்பவேலையில் வீழ்ந்தனள். இராவணசங்காரத்தின் பொருட்டு நாராயணர் திருப்பாற்கடலிலிருந்துவந்து இராமனாகத் திருவவதாரம் புரிந்தபோது, அவரைவிட்டுப் பிரியாதிருத்தல்வேண்டுமென்று பரமசுகத்தை நல்கும் பாற்கடல்வாசத்தை வெறுத்து மண்ணுட்டில் வந்து சீதையாக அவதரித்த திருமகள் ஈண்டு "உன்னைவிட்டுப்பிரிவேன்" என்ற சொல்லைக்கேட்டு மனஞ்சகிப்பளோ? கற்பின் கரைகாட்டவந்த காரிகையன்றோ?

நாயகன் வன நண்ணலுற் றனென்று
மேய மண்ணிழந் தானென்றும் விம்மலள்
நீவருந் தலை நீங்குவன் யானென்ற
தீய வெஞ்சொற் செவிசுடத் தேம்புவாள்

சீதை பெருந்துன்புற்று நாயகனது சொல்லை உன்னி உன்னி பெருமூச்செறிந்து "மாரனைப் பழித்த மன்ன! கற்றவர் புகழுங் கற்பகக்கனியே! தந்தையாரும தாயாரும் சொல்லிய காரியங்களைச்

செய்யத்துணிந்தது சாலவும் நன்றே; யாதுகாரணத்தால் என்னை இங்கே இரு என்று சொன்னீர்? என்னைத் தனியேவிட்டுச் செல்ல தங்கட்கு என்ன தவறு செய்தேன்? தங்களுக்கு என்மீதுள்ள வெறுப்பென்ன? தாய்தந்தையர் தங்களைக் காட்டிற்கு அனுப்பினார்களென்றால் என்னையுடன் அனுப்பியதாகும். தங்கள் சுகதுக்கத்தில் எனக்கும் பங்குண்டு; நிழலைப்போல தங்களை என்றும்பிரியாதிருக்குமாறு தந்தையார் கட்டளையிட்டுள்ளார். திருமணகாலத்தில் “உன்னை விட்டு எக்காலத்தும் பிரியேன” என்று அக்கினிமுன் சத்தியஞ் செய்தீர்; அதனை மறந்து தாங்களமட்டும் இப்போது தனியாகக் கானகம் போவது எவ்வாறு பொருந்தும் தாங்களின்றி எனக்குச் சுவர்க்கம் கிடைப்பினும் வேண்டேன்; தங்களுடன் கூடியிருப்பது நரகமே எனினும் விரும்புவேன், கணவனையிழந்த காரிகை பிணத்திற்கு நிகராவள்; யானும் தங்களுடன்வர அனுமதிக்கவேண்டும்” என்று கூறி கண்ணீர் சொரிந்து நெஞ்சம் நெகிழ்ந்து நின்றனள். ரகுராமர் “பெண்ணே! பெருந்தவப்பிடியே! வருந்தாதே! உன்னை இங்ஙனம் விட்டுச்செல்வது நின்மீது வெறுப்புகொண்டன்று, விருப்பேயாகும். கானகத்தின் கடுந்துன்பம் நீ யறிந்தாயில்லை, காயுங் கனியும் இலையும் சருகும் உண்ணவேண்டும், அறுசுவையுண்டியை தாதியர் ஊட்ட உண்ட நீ அவைகளை எவ்வாறு உண்பாய்? பஞ்சணையிற்றுயின்ற நீ பாறையின்மீது எவ்வாறு படுப்பாய்? பனியுங் காற்றும் வெய்யிலும் மழையும் மிகுந்தகாட்டில் வாழ்வது நின்னால் முடிந்தகாரியமன்று, பசிதாகத்தைப் பொறுக்கவும் சுனைநீரைக் குடிக்கவும் நீ எப்பொழுது கற்றாய்? வெம்புலி சிங்கம் காட்டானை முதலிய மிருகங்களைக் கண்டால் நீ அஞ்சுவாய், செம்பஞ்சு ஒட்டிய மலரினுமெல்லிய நின்பாதம் கல்லிலும் முள்ளிலும் எவ்வாறு நடக்க முடியும்? துன்பமென்பது இன்னதென்றறியாத நீ இக்கடுந்துன்பத்தை எவ்வாறு அனுபவிப்பாய்? பூ மேல்விழுந்தாலும் தழும்புபடும் நின் பொன்னார்மேனி பேய்கள்வாழும் பருங்கைக் கற்கள் நிறைந்த கானகத்தின் வெப்பத்தை எவ்வாறு தாங்குவாய்? ஆதலால் நீ இவண் சுகமே இருப்பாயாக” என்றனர்.

இவ்வுரைகளைக் கேட்ட சீதை கானகத்தின் துன்பத்தை ஒரு சிறிதும் பொருள்படுத்தினளில்லை என்னே! கற்பின் உறுதி? தாசரதியை நோக்கி “சந்திரவதனா! மரகதவண்ணா! வாழுங்காலும் வாழ்வன்றி நல்குரவிற்றாழ்ந்தாலும் ஒக்க சமைபவளே கற்புடைக்

காரிகையாவள், பதிக்குத் துன்பம் வந்த ஞான்று தானும் பதியுடனிருந்து அத்துன்பத்தில் பங்கெடுத்துக்கொள்ளல்வேண்டும். தங்களுடனிருந்துண்ணும் காயிலை சருகுகளே எனக்கு விண்ணவரமிர்தம்; மிருகங்களின் ஒலிகள் வேயங்குழல் வீணாநாதங்களாம்; கல்லணை மலரினுமினிய மெல்லணையாம்; தாங்கள் முட்களில் நடக்க நேரிடின் யான் அம்முட்களின்மீது முன்னே நடந்து நற்பாதையாக்குவேன், தங்களுக்குப் பசியுண்டாகின்றபோது காய்கனிதேடி நல்குவேன். தாங்கள் நடந்து கால்வருந்தியபோது பாதங்களை வருடி அயாவு நீக்குவேன்; தங்களைவிட்டு இருக்கின்ற இந்த அயோத்திமாநகரமே எனக்குப் பெருங்காடாகும்; பிரளயகாலத்துச் சூரியனது வெப்பத்தைக் காட்டிலும் தங்கள் பிரிவாலுண்டாகும் வெப்பங் கொடியது; தாங்கள் போகின்றகாடு தங்கள் பிரிவுத்துன்பத்தைக் காட்டிலும் சுடுந்தன்மையதோ? தங்களைவிட்டு ஒருகணமும் பிரிந்திருக்கேன்" என்று விழிநீர் பெருக்கி மனமுருகிக்கூறி நாயகனது அனுமதிபெற்று கணவனுடன் நிழல்போல் தொடர்ந்தனள்.

பரிவிகந்த மனத்தொடு பற்றிலா
தொருவு கின்றனை யூழி யருக்கனு
மெரியு மென்பது யாண்டைய தீண்டுநின்
பிரிவினுஞ் சுடு மோபெருங் காடென்றாள்.

பெண்மணிகள் சற்று ஊன்றி நோக்குக. கணவனைவிட்டிருக்கும் அரசபோகம் சீதைக்கு அனலாயிருந்தது. கணவனோடிருக்கும் காட்டின் வெப்பம் குளிர்ந்திருந்தது.

பெண்கள் நாயகனுக்குப் புகழையுண்டுபண்ணுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருத்தல்வேண்டும். இதனாலன்றோ "சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்றார் செந்நாப்போதர். கற்புடை மகளிரின்றேல் ஒருவன் ஒருபோதும் புகழுடையமுடியாது. இதனை நன்குவிளக்கும் சீதையின் செயலை பிறிதோரிடத்திற் காண்க.

அசோகவனத்தில் சீதையை அநுமன் கண்டு கணையாழி தந்து நல்லுரை கூறியபின், சீதையைக்கொண்டுபோய் இராமபிரானிடஞ் சேர்க்கவேண்டுமென்றுன்னி, சீதையைப் பணிந்து ' அம்மா! என் மொழியை முனியாது கேள் தங்களை அடியேனது புயத்தின்மீது வைத்து ஓரிமைப்போதில் ரகுநாயகன் இருக்கின்ற இடத்தில் சேர்க்கின்றேன்; இடையில் அரக்கர்கள் எதிர்த்தாலும் அவர்களைக்

கொன்று சினந்தணிவேனை, ஒருவராலும் கொல்லப்படமாட்டாத அடியேன் தங்களைக்கொண்டு செல்வேனேயன்றி வெறுங்கையுடன் செல்லேன். மேலும் 'இலங்கையோடு போதத் என்னைக்கொண்டு போ" என்று கட்டளையிட்டாலும் இலங்கையைப் பேர்த்து ஒரு கையில் வைத்து, மற்றொரு கையால் அரக்கர்களையெல்லாம் அழிப்பேன். ஆயினும் தங்களை இராமபிரானிடஞ்சேர்த்து அவரை மகிழ்வித்தபின் இங்குவந்து இவரையழித்தல் நன்று. ஆகையால் மறுத்துரைக்காது அடியேனது தோளின்மீது ஏறுவீர்; எம்பிரானிடஞ் சேர்ந்து மகிழ்வீர்; விரைவில் வருவீர்" என்றனன்.

சீதை "மாருதி! அன்பின் மிகுதியால் இவ்வாறு சொற்றனை. நின் ஆற்றலுக்கு ஏற்றதே செப்பத்துணிந்தனை; இது உனக்கு அரியதன்று; ஆயினும் இது என் எண்ணத்திற்கு மாறாக இருக்கின்றது. பேதைமையுடைய என்சிறுமதிக்கு இதுபொருந்தவில்லை. நீ என்னை எடுத்துக்கொண்டு செல்கையில் வெய்ய அரக்கர்கள் தடுத்து யுத்தம் புரியுங்கால், அவர்களுடன் போர்புரியவு முடியாமல் என்னைக் காப்பாற்றவுமுடியாமல் தடுமாற நேரும். இதுவேயுமன்றி நீ என்னைக் களவடமாகக் கொண்டுபோனால் இராமபிரானது வில்லுக்குப் பழிப்புண்டாகும். களவடமாகக் கொண்டுசெல்ல நினைத்தல் தகுதியோ? குழந்தாய்! இராமபிரானன்றி அயலார் என்னைத் தீண்டுதல் அறமாகுமோ? நீயும் ஓர் ஆடவனேயாகும். மேலும் நீ இந்த இலங்கையையும் அரக்கரையும் அழிக்கிறேனென்றனை; நான் அழிக்கவேண்டுமென்று நினைத்தால் இன்னல் செய்யும் இராக்கதர்க் குறைவிடமாகிய இந்த இலங்கையைமட்டுமோ? கணக்கில்லாத உலகங்களையெல்லாம் என் சொல்லினால் (சாபத்தினால்) சுடுவேன்; அவ்வாறு செய்தால், தூய்மையுடைய இராமபிரானது வில்லுக்குப் புகழில்லாமற் போய் விடுமென்று எண்ணியிருக்கிறேன். இல்லையேல் இந்த இலங்கை எனக்கு எம்மாத்திரம்? கணவனுக்குப் புகழை விளைவிப்பதே காரிகையார் கடமை. பார்வையினாலேயே இலங்கையை எரிக்கும் ஆற்றல் எனக்கிருந்தும் தசரத குமாரராம ரகுவீரருக்குக் கீர்த்தியை விளைவிக்கவேண்டுமென்று கருதி சாந்தத்தை வகித்துளேன்.

அல்லன் மாக்க ளிலங்கைய தாதுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவு மென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்.

அநுமனே ! ஆதலால் நீ சென்று இரகுநாயகருக்கு நிகழ்ந்தவை கூறி, சிறைமீட்குமாறு செய்வாயாக" என்றனள்.

சகோதரிகள ! ஜானகியின் அமுதவாக்குகளையும் தூய எண்ணத்தையும கருததூன்றி காணக

இதுவேயுமன்றி இலங்காபுரி முழுவதும் சுட்டது அநுமனன்று, அநுமன வைத்த அக்கினியுமனறு, சீதாதேவியின் கற்புத்தீயேயாம். இதனை விபீஷணா இராவணனிடம கூறுமாறு காண்க.

சோநகர் முழுவது நீறது கொற்றமும்
சானகி யெனும்பெய ருலகின் நம்மனை
யானவள் கற்பினால் வெந்த தல்லதோர்
வானரஞ் சுட்டதென் றுணர்தல் மாட்சியோ,

அன்புடையீர் ! கறபின் மாணபினை யாரே கழறவல்லார் ? இத்தகைய கறபின் பெருந்தகைப பெணடிா வாழ்நத நாடு நய நாடு. ஆதலால் பெணமககள கறபிலக்கணததை நன்குணாந்து அவ்வணண மொழுகி பிறந்த வீட்டாக்கும புகுநதவீட்டாக்கும பொன்றுப் புகழையுண்டாககி என்று மழியா இனபததை எயதுவார்களாக.

(தொடரும்.)

---

## வினு விடை மணிகள்.

(ஆதிசங்கரர்)

கிம்கஹநம் ஸ்த்ரீசரிதம் கஸ்சதுரோ யோந கண்டிதஸ்தேந ।
கிம்து:கம ஸந்தோஷ: கிம்லாகவ மதமதோ யாச்ஞா ॥

கே .— அளவிடமுடியாதது எது ?
ப :— பெணகளின நடை.
கே — சமாததன யாவன ?
ப .— பெணகளின் நடையினுல வஞ்சிககப்படாதவன,
கே .— வறுமை யாது ?
ப :— திருப்தியினமை.
கே .— கீழ்மை யாது ?
ப :—கீழ்ப்பட்டவனிடத்தில் யாசிப்பது.

# கிருகஸ்தம்

(மனையறம்)

(27-வது பக்கத் தொடர்ச்சி.)

மந்திரம், தன்னை அயலார் அவமதித்தல், மாதரைக் கலத்தல், தன்வஞ்சனை, தன் ஆயுள், தான் பிறந்தநாள், தன் வீட்டிற் பொருந்திய குற்றங்கள், தனக்குரிய செல்வம், தன்மனைவியின் குணங்கள் ஆகிய ஒன்பதும், உயிர் நீங்குங்காலமவரை அயலாரிடம் சொல்லப்படாது.

தத்தந்த விஷயங்கள், தான் பெற்றிருக்குங் கடன், கடனை யொழிக்குமவகை, பொருள்தேடும் வழி, பொருளைச் செலவிடுதல், பெண்ணைமணஞ் செய்து கொடுத்தல், தன்னுடைய நடை, தன் வமிசத்திற் செய்தபாவம், பிறருடைய நல்லகுணங்கள் ஆகிய ஒன்பதையும் ஒளியாமற் சொல்லுதல் வேண்டும்.

உண்மைபேசுதல், சாந்தம், கொலைபுரியாதிருத்தல், அந்தக்கரணங்களை யடக்குதல், ஆசாரம், அளவில்லாமற் கொடுத்தல், கோபத்தை விலக்குதல், திருடாதிருத்தல், அன்னியர் படுந்துன்பத்தைக்கண்டு மனமிரங்குதல் ஆகிய ஒன்பதும் தேவர்கள் எதிர்கொண்டுவந்து தம்மை யழைப்பதற்கு ஆகாயத்திற்கனுப்பிய தூதராகும்.

முகத்திற்கெதிரே ஒன்றுபேசி பிரிந்தால் வேறொன்று பேசுவோர், தூதர், நூற்கேள்வியில்லாத வைத்தியர், பிறர் பொருளை அபகரிப்போர், காமுகர், கொடுந்தொழில் புரிவோர், மல்யுத்தம் புரிவோர், செருக்குடையவர், இழிதொழிலை செய்வோர் ஆகிய ஒன்பது பேருக்கும் பொருள்கொடுத்தல் தீதாகும்.

பெரியோர்கள், சிநேகிதர், தம் வழிமுறையில் நிற்கின்றவர்கள், தரித்திரர், பிறவுயிர்களைத் தன்னுயிர்போற் காப்பவர்கள், துறவிகள், பிதாமாதாக்கள், குரு, தமக்கு உதவி செய்தவர்கள் ஆகிய ஒன்பது பேருக்கும் பொருள் கொடுத்தால் ஒன்று கோடியாகும்.

தன்மனையாளையும், அடைக்கலப் பொருள்களையும், சரணமடைந்தோனையும், தன் குலாசாரத்தையும், சேமநிதியையும், புத்திரனையும்,

புத்திரனுக்காகத் தான்தேடிய பொருள்களையும் மரணத்திற்குச் சமமான துன்பம் வந்தாலும் கைவிடலாகாது.

தமையன் விவாகமில்லாதிருக்கத் தம்பி விவாகஞ் செய்து கொள்ளலாகாது. ஆனால், மூத்தவன் ஊமையாகவேனும் செவிடனாகவேனுமிருந்தாலும், சந்யாசம் பெற்றுக்கொண்டாலும், தூர தேசஞ்சென்று இருக்குமிடம் அறியப்படாதிருந்தாலும் தம்பி விவாகஞ்செய்து கொள்ளலாம்.

அன்னம்படைக்கும் கருவியாலன்றி அன்னத்தைக் கையாற் பரிமாறுதலும், அன்னத்தைக் கையிலேற்றுப் புசித்தலுந் தீதாகும். இரும்பாலாகிய கருவியால் அன்னமிட்டவர்கள் நரகமடைவார்கள். அவற்றைப் புசித்தவர்களும் அமேத்தியத்தை யுண்டவர்களுக்கு ஒப்பாவார்கள். பல்லை விரலால் தேய்த்தாலும், வெள்ளுப்பைச் சேர்த்து உண்டாலும், கையாலெடுத்து இட்டலவணம், நெய், தண்ணீர், பாற்சோறு இவைகளை உண்டாலும் கோமாமிசத்தை யுண்டதற்கு நிகராகும். போசனஞ்செய்தபின் வாயில்வார்த்த நீரை கொப்பளித்து உமிழாமற் குடித்தால், தன்னையும் பிதிர்களையும் தேவர்களையும் கொன்ற பாவிகளுக்குச் சமமாவார்.

நீராடாமலும், செபஞ் செய்யாமலும், பூசை செய்யாமலும், பாலர் விருத்தர் முதலியவர்க்கு உணவுதராமுன்னும், அதிதிகளுக்குத் தராமுன்னும் கிருகஸ்தன் உண்ணப்படாது. அங்ஙனமுண்போன் அருநரகடைவன்.

பலபேர் கூடியளித்த அன்னத்தையேனும், சீமந்தமுகூர்த்தத்திலேனும் பொருள் பெற்றுக்கொண்டு கல்விகற்பிக்கின்றவர் வீட்டிலேனும் போசனஞ்செய்தால் சாந்திராயணவிரதம் அனுஷ்டித்தல் வேண்டும். பசுவின் தொழுவத்திலும், யாகசாலையிலும், வேதியரிடத்திலும், ஆலயத்திலும் இருக்கும்பொழுது காலைத் தீண்டப்படாது. உண்கலத்தைக் கையிலேனும் மடியிலேனும் வைத்துக் கொண்டு உண்ணலாகாது. கட்டிலிலும் பீடத்திலுமிருந்து உண்ணுதலும் மட்கலத்திற் புசித்தலுமாகாது.

பொய்பேசுதல் குற்றமாயினும் மங்கையர் பிணக்கிலும், மறையவர் உயிர்பிழைக்குமென்னுஞ் சமையத்திலும், பசுவை இரட்சித்தற்பொருட்டும், விவாகஞ்செய்தற்பொருட்டும் பேசும்பொய்யானது மெய்யைக் காட்டிலும் சிறந்ததாகும்.

நீர் பெருக்கத்தில் நீந்துகிறவனும், அக்கினிபற்றி எரிகின்ற சமயத்தில் அருகிற் செல்லுகிறவனும், உயர்ந்த மரத்திலும் கல்லின் மீதும் ஏறுகின்றவனும், மகனையும் மனைவியையும் விலைக்குக்கொடுப்பவனும் ஆகிய ஆறுபேரும் தமக்குத் தாமே இயமனாவார்கள். பசுவின் தொழுவத்தில் நித்திரை செய்தலும், இரகசியத்தை வெளியிற் கூறுதலுமாகாது. தன்னுடைய ஒழுக்கத்தினின்றுந் தவறினவன், தன்னைத்தானே கொன்றவனாவான். தான் சொன்ன சபதத்தை நிறைவேற்றாதவன் மோட்சத்தையடையமாட்டான். புதிதாக வீட்டுக்கு வந்த மருமகளையும், சிறு பெண்களையும், வீட்டிலுள்ள பிணியாளர்களையும், கருப்பவதிகளையும், சிறு குழந்தைகளையும், மூப்புடைய பிதா மாதா முதலியவர்களையும் முன்னே புசிப்பித்தல்வேண்டும். தன் பிதா மாதாக்கள் இறந்த மாதமும் திதியும் வரும்போது ஆண்டு தோறும் அன்புடனும் விருப்பபடியும் சிராத்தம் செய்தல்வேண்டும். அமாவாசை கிரகணகாலம், உத்திராயணம், தக்ஷிணாயனம், மாதப் பிறப்பு முதலிய புண்ணியதினங்களில் புண்ணியதீர்த்தத்தில் நீராடிப் பிதிர் தர்ப்பணஞ்செய்து அதிதிகளோடும் சுற்றத்தாரோடும் உணவு செய்து, விரதநியமத்துடன் இருத்தல்வேண்டும். இல்வாழ்வானே மற்றைய ஆச்சிரமத்தார்கள் அனைவருக்கும் ஆதாரமானவன். ஆதலால் தரும நிலையும் உலகநிலையும் இல்லறத்தினாலேயே உண்டாகின்றன. பிரமசரியம் கிருகஸ்தம், வானபிரஸ்தம், சந்யாசம் என்கிற நான்கு ஆச்சிரமங்களும், பாகதியையடைவதற்கு நான்குபடியுடன் சேர்ந்த ஓர் ஏணிக்குச் சமானமாயினும் கிருகஸ்தம் மிகவும் சிறந்த நிலையாக ஆன்றோர்களால் கருதப்படுகிறது.

இல்லறம் மேற்கொண்டோன் ஒரு சமயம் தன்னொழுக்கத்திற் றவறுவானேயாயினு கழுவாயுண்டு. ஏனைய ஆச்சிரமத்தை மேற்கொண்டோர் தவறுவரேல் கழுவாயில்லை முத்தொழிலுடைய மூவரும், இந்திரன் முதலிய இமையவரும், அகத்தியாதி அருந்தவரும் இல்லறத்தையே நடத்திக் காட்டுகின்றனர். இல்வாழ்வோனுக்கு இம்மை நலனும் மறுமை நலனும் எளிதிலுண்டாகும் இல்லறத்தானது பெருமையை இத்துணையதென்று எவரே யறையவல்லார்?

எவன் மனத்தில் வருத்தமின்றி இந்தக் கிருகஸ்த தருமத்தை நடத்திவருகிறானோ அவன் தனது பிதரு பிதாமகர்களான முன்னோர் பதின்மரையும், தன் பின்னுள்ளவர்களான பதின்மரையும் பரிசுத்தர்களாகச் செய்கிறான். முன்பத்தும் பின்பத்தும் தன்னோடும் ஆக

இருபத்தொரு தலைமுறைகளையும் கிருகஸ்தன் முத்தியிற்சேர்க்கிறான். அவன் சக்கிரவர்த்திகளுடைய உலகங்களுக்கு ஒப்பான கதியை அடைவான். அல்லது இந்திரியஜயமுள்ளவர்களுக்குள்ள கதி விதிக்கப்பட்டிருக்கிறது. விஞானத்துடன் கூடியதும் வேதத்தில் காணப்பட்டதுமான சுவர்க்கம் மிகவும் அழகானது. அடக்கமுள்ள மனமுடைய கிருகஸ்தர்களுக்கு சுவர்க்கலோகத்தில் நிலையான வாசம் ஏற்படுகிறது பிரமாவினால் இது படியாக ஏற்படுத்தப்பட்டது. முறையாக இந்த இரண்டாவது ஆசிரமத்தை அடைந்து அனுஷ்டிப்பதால் சுவர்க்கத்தில் பூசிக்கப்படுகிறான். இத்தகைய கிருகஸ்த தருமத்தை யனுஷ்டித்தவன் விண்ணாடு புகுங்கால் வானவர்கள் எதிர் கொண்டு அழைத்துச்சென்று தங்களுக்குள் ஒருவனாக உயர்ந்த இடத்தில் இருக்கவைத்து உபசரிப்பர்.

> வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
> தெய்வத்துள் வைக்கப் படும்

— திருக்குறள்.

கிருகஸ்தம் என்னும் இல்லறத்தை மேற்கொண்டோர் ஒவ்வொருவரும் மேற்போந்த தருமங்களை ஊன்றிக் கவனித்து அதன்படி ஒழுகி எல்லா நலன்களையும் எய்தி இன்புற்று இனிது வாழ்வாராக.

(தொடரும்).

---

## யக்ஷப்பிரஸ்னை.

வினா :— யஜ்ஞத்திற்குரிய முக்கியமான ஸாமம் எது?
விடை.— உயிரே யஜ்ஞத்திற்குரிய முக்கியமான ஸாமம்.

வினா :— யஜ்ஞத்திற்குரிய முக்கியமான யஜுஸ் எது?
விடை.— மனமானது யஜ்ஞத்திற்குரிய முக்கியமான யஜுஸ்.

வினா :— இவர்களுடைய யஜ்ஞத்தை எது வரிக்கிறது?
விடை.— ரிக்கொன்றே யஜ்ஞத்தை வரிக்கிறது,

வினா :— யஜ்ஞமானது எதை மீறாமல் இருக்கிறது?
விடை.— யஜ்ஞம் அநுஷ்டிக்கை (வேதவாக்கை) மீறாமலிருக்கிறது,

ஓம் குஹாய நம.

# குரு சிஷ்ய லக்ஷணம்

சச்சிதானந்தன்.

(96-ம் பக்கத் தொடர்ச்சி)

## சிஷ்ய லக்ஷணம்.

குருநாதன் கிடைப்பானேயாகில் அப்போது கைலயங்கிரியில் சனகாதிகளுக்கு உபதேசித்த பரமசிவனைப்போல் பாவித்து சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து இருகண்களிலும் கண்ணீர்வார மயிர்க்குச்செறிவு முதலியன உண்டாகவேண்டும்.

சிவஞானதீபத்தில்

திருமறையோர் முனிவருக்கன் றாலநீழற்
றிருந்தவுரு முருந்தபெருந் தகைநாதனிந்த
விருநிலமே லருளுருவாய் வந்துதோன்றி
யிசைந்திடுநெஞ் சவிடுமனை யுமிபோல் வேய்ந்த
திருமலமே யிளைச்சேவா லுமையால் ஞானச்
செய்மையிறு லறுநசிநாள் சென்னிசூட்டுங்
குருபாவ மருளுலக வாதைநீக்குந்
துணைசடலை மனத்திலுறை வணக்கஞ்செய்வாம் எனவும்,

அதிரகசியத்தில்,

கண்டான் குருவைக் கண்ணாக் கதறி வீழ்ந்தான் கமலமிசை
யண்டார் வானே தேடுமாலே யயனே யென்று னகமகிழ்ந்தான் [யே
றேண்டா லியலும் பணிசெய்யத் துணிந்தான் பணிந்தான் மும்முறை
பண்டா லிறைந்த பாவாலுங் காயா யென்னப் பாடினன்.

சிவஞானப்ரகாச வெண்பா

ஆசானைக் கண்டோரு மன்புருக கைதுவிய
மாசாருடம்பு மயிர்க்கூச் செரியும்—பேசாத
வானந்த முன்னாறு மக்கணமே பாசாங்க
டானந்த முந்தி தரும்.

ஆகவே, விதிப்படி சரணடைந்து தன் (1) சரீரம் (2) மனது (3) தனம் (4) வாக்கு என்பவற்றைக் குருநாதனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். (தொடரும்)

---

1. அவர் கட்டளை மீறாமல் நடப்பதுதான் சரீர அர்ப்பணம்.
2. தோஷதிருஷ்டி வரவொட்டாமல் குருநாதன் வடிவத்தையே தியானிப்பது மனதின் அர்ப்பணமாம்.
3. தனத்தையெல்லாம் விட்டு சரணமடைவது தன அர்ப்பணம்.
4. குருநாதன் குணங்களைப் புகழ்ந்துசொல்லுதலோடு தோஷத்தை சொல்லாதிருத்தலே வாக்கின் அர்ப்பணம்.

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.



“ குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ஞான்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் ”

| மலர். 2<br>Vol. 2 | ஈஸ்வர௵ புரட்டாசிமீ 1உ<br>செப்டம்பர்—1937 | இதழ் 6<br>No. 6 |
| --- | --- | --- |

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

(19) சங்கைதா ஞென்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்
சந்தோடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா னந்தமாயன்

மங்கைமார் கொங்கைசே ரங்கமோ கங்களால்
வம்பிலே துன்புறுமே
வண்குகா நினசொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ அனபிலாள்வாய்

கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா
கம்பியா திந்த்ரலோ கங்கள்கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா

செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா
செங்கண்மால் பங்கஜா னன்தொழா னந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே.

## பதவுரை.

கங்கை சூடும் பிரான் - கங்காநதியைச் சடையிற்றரித்தருளிய சிவபெருமானுடைய, மைந்தனே - திருக்குமாரரே!, அந்தனே - அழகின் மிக்கவரே!, கந்தனே - கந்தப் பெருமானே!, விஞ்சை ஊரா - ஞான நூல்களையே உறைவிடமாகக்கொண்டவரே!, கம்பியாது - (சூராதி யவுணர்களது கொடுமையால்) நடுங்காவண்ணம், இந்த்ரலோகங்கள் - தேவர்கோமானுலகமாகிய அமராவதி முதலிய தேவலோகங்களை, கா என்ற - காப்பாற்றவேண்டுமென்று முறையிட்ட, ஆகண்டல ஈசன் சொல் வீர - அமரர் கோமானாகிய இந்திரன் புகழ்கின்ற வீரரே!, செம் கை வேல் - சிவந்த கரத்தில் வீற்றிருப்பதும், வென்றி வேல்கொண்டு - வெற்றியை யுடையதுமாகிய வேலாயுதத்தைக்கொண்டு, சூர பொன்ற - சூரபன்மன அழிய (ஏ-அசை), சென்று மோதும பராபரா - போர்த்தலத்திற் சென்று தாக்கி யமர்புரிந்த, பராபரா - கீர்த்தியின மிக்கவரே!, செங்கண் மால் - (தாமரை மலரையொத்த) சிவந்த கண்களையுடைய திருமாலும், பங்கஜாஸனன் - தாமரையில் வீற்றிருக்கும பிரமதேவனும், தொழு ஆனந்த வேள் - (பக்தியுடன் பரவி) வணங்கும் ஆனந்த சொரூபியாகிய முருகவேளே!. செந்தில்வாழ - திருச்செந்திலில் வாழுகின்ற, தம்பிரானே - எம்பெருமானே!, சங்கைதான் ஒன்றுதான் இன்றியே - எண்ணால் அளவை ஒன்றுமின்றி அளவில்லாமலே, நெஞ்சிலே - மனத்திலே, சஞ்சல ஆரம்ப மாயன் - விலைமகளிரை யடையவேண்டுமென்ற கவலை ஆரம்பமாகி மாயையுடையவனும், சந்தொடு (ஏ-பிரிநிலை) குங்கும அலங்க்ருத ஆடம்பர சமப்ரம ஆனந்த மாயன் - சந்தனம குங்குமப்பூ முதலிய வாசனைப்பொருள்களையணிந்து (இரத்தினாபரணங்களாலும் ஆடைகளாலும) அலங்கரித்துக்கொண்டு இடம்பமாகவும் சமப்ரமமாகவும உலாவி இன்புறும் மாயையில் மூழ்கியவனுமாகிய அடியேன், மங்கைமார் கொங்கை சேர் அங்க மோகங்களால் - மகளிரது தனபாரங்களுடைய சரீரத்தின் மீதுள்ள ஆசைப்பெருக்கம் அதனிடத்துள்ள மயக்கமுதலியவைகளால், வம்பிலே துன்புறுமே - வீணாக துன்பத்தையடையாமல், வண் குகா - வள்ளற்றன்மையுடைய குகப்பெருமானே!, நின் ப்ரகாசங்கொடு - (ஏ-அசை) தேவரீரது அருட்பெருஞ் சோதி வீசும் திருக்கோலத்துடன், வந்து நீ அன்பில் ஆள்வாய் - தாங்கள் அடியேனிடம் வந்து அன்பினால் ஆட்கொண்டருளவேண்டும்.

## பொழிப்புரை.

உலகங்கள் அழிந்துபோகாவண்ணம் மிகப்பெருகிவந்த கங்கா நதியை தமது சடாடவியிற் சூடிக்கொண்ட கருணைக்கடலாங் கண்ணுதற்பெருமானது திருக்குமாரரே! அழகிற் சிறந்தவரே! கந்தப் பெருமானே! ஞான நூல்களை உறைவிடமாகக்கொண்டவரே! இந் திரலோகங்கள் (சூரபன்மனால்) நடுங்காவண்ணம் காத்தருளவேண்டு மென்று முறையிட்ட தேவர் கோமானால் புகழப்பட்டவரே! சிவந்த (தாமரையனைய) கரத்தில் வீற்றிருக்கும் வெற்றியையுடைய வேலாயுதத்தைக்கொண்டு போர்க்களஞ்சென்று சூரபன்மன் அழியுமாறு தாக்கிய கீர்த்தியின் மிக்கவரே! தாமரை மலரையொத்த கண்களையுடைய நாராயணமூர்த்தியும், தாமரையில் வசிக்கும் நான்முகனும் பக்தியுடன் வழிபட்டு வணங்கும் ஆனந்த சொரூபியாகிய அறுமுக வேளே! செந்திமா நகரத்தில எழுந்தருளியுள்ள தலைவரே! (விலைமகளிரது மோகத்தாலுண்டாகிய) அளவில்லாத பலவகைப்பட்ட சஞ்சலமானது மனத்திலே முளைக்க ஆரமபித்த மாயைக்குட்பட்டவனும், சந்தனம் குங்குமப்பூ முதலிய வாசனைகளையணிந்து, (ஆடை ஆபரணங்களால்) அலங்கரித்துக்கொண்டு ஆடம்பரமாகவும சம்பிரமமாகவும் திரிகின்ற மாயையின் மிக்கவனுமாகிய அடியேன், மாதர்களது தனபாரங்களோடுகூடிய சரீரத்தின்மீதுள்ள ஆசைப்பெருக்கத்தால் வீணே துன்புற்று அழியாவண்ணம் வள்ளல்தன்மையுடைய குக மூர்த்தியே! தேவரீரது அருட்பிரகாசத்தோடுகூடிய திருவுருவத்துடன் வந்து அடியேனை அன்பினால் தடுத்தாட்கொண்டருள வேண்டும்.

## விரிவுரை.

கங்கை சூடும்பிரான் :—

### கங்கையைத் தரித்த வரலாறு.

முன்னொருஞான்று உமாதேவியார், திருக்கைலாசமலையிலுள்ள சோலையிலே ஒரு விளையாட்டாக ஒன்றும் பேசாதவராய்ச் சிவபெருமானுக்குப் பின்புறத்தில் வந்து, அவருடைய இருகண்களையும் தமது திருக்கரங்களாற் பொத்தினார். அதனால் எவ்வுயிர்களும் வருத்தமடையும்படி புவனங்கள் எங்கும் இருள் பரந்தது. சிவபெருமானுடைய திருக்கண்களினாலேயே எல்லாச் சோதியுந்தழைத்த தன்மை

யினால், சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய இவர்களின் சுடர்களும் மற்றைத்தேவர்களின் ஒளிகளும் பிற ஒளிகளும் அழிந்து எல்லாம் இருள்மயமாயின. அம்மையார் அரனாரது திருக்கண்களைப் பொத்திய அக்கணமொன்றில், உயிர்கட்கெல்லாம் எல்லையில்லாத ஊழி காலங்களாயின. அதனை நீலகண்டப்பெருமான நோக்கி, ஆன்மாக்களுக்குத் திருவருள்செய்யத் திருவுளங்கொண்டு, தம்முடைய நெற்றியிலே ஒரு திருக்கண்ணையுண்டாக்கி, அதனால் அருளொடு நோக்கி, எங்கும வியாபித்த பேரிருளை மாற்றி, சூரியன் முதலாயினோர்க்கும் சிறந்த பேரொளியை யீந்தார். புவனங்களிலுள்ள பேரிருள முழுதும் நீங்கினமையால ஆன்மகோடிகள் உவகை மேற்கொண்டு சிறப்புற்றன. சிவபெருமானுடைய செய்கையை உமாதேவியார் நோக்கி அச்சமெய்தி அவருடைய திருக்கண்மலர்களை மூடிய இருகர மலர்களையும தண்ணென்று எடுத்தார். எடுக்கும் பொழுது தமது பத்துத திருவிரல்களிலும் அச்சத்தினாலே வியர்வை தோன்ற, அதனை உமாதேவியார் நோக்கி திருக்கரங்களையுதறினார். அவ்வியர்வை பத்துக் கங்கைகளாய் ஆயிரநூறுகோடி முகங்களைப் பொருந்திச் சமுத்திரங்கள்போல எங்கும் பரந்தன. அவற்றை அரியரிபிரமாதி தேவர்களும் பிறருங்கண்டு, திருக்கைலையில் எழுந்தருளிய தேவதேவன்பால் சென்று, வணங்கித்துதித்து, "எம்பெருமானே! இஃதோர் நீரப்பெருக்கு எங்கும் கல்லென்று ஒலித்து யாவரும் அழியும்படி அண்டங்கள முழுவதையும் கவர்ந்தது; முன்னாளில் விடத்தையுண்டு அடியேங்களைக் காத்தருளியதுபோல் இதனையுந் தாங்கி எங்களைக் காத்தருளுவீர்" என்று வேண்டினார்கள். மறைகளுங்காணக் கறைமிடற்றண்ணல் அந்நதியின் வரலாற்றை அவர்களுக்குச் சொல்லி, அதனை அங்கே அழைத்து, தமது திருச்சடையிலுள்ள ஓர் உரோமத்தின்மீது விடுத்தார்.

அதனைக்கண்டு மகிழ்ந்து நான்முகனும் நாரணனும் இந்திரனும் "எம்மையாட்கொண்ட எந்தையே! இவ்வண்டங்களை யெல்லாம் விழுங்கிய கங்கை உமது அருட்சத்தியாகிய அம்பிகையாரது திருக்கரத்திற்றோன்றினமையாலும், உமது திருச்சடையிற் சேர்த்தமையாலும் நிருமலமுடையதாகும். அதில் எமது நகரந்தோறும் இருக்கும்படி சிறிது தந்தருளல்வேண்டும்" என்று வேண்டினார்கள், சிவபெருமான் திருச்சடையிற் புகுந்திருந்த கங்கையிற் சிறிதை அள்ளி அம்மூவர்களுடைய கைகளிலுங் கொடுத்தார். அவர்கள் வாங்கி

மெய்யன்போடு வணங்கி, விடைபெற்றுக்கொண்டு தத்தம் நகர்களை யடைந்து அங்கே அவற்றை விடுத்தார்கள். அந்த மூன்று நதிகளுள் பிரமலோகத்தையடைந்த கங்கை பகீரதமன்னனுடைய தவத்தினாற் பூமியின் மீண்டுவர, சிவபெருமான் பின்னும் அதனை திருமுடிமேற் றாங்கி, பின் இந்த நிலவுலகிற் செல்லும்படி விடுத்தார். அந்நதி சகரர்கள் அனைவரும் மேற்கதிபெற்றுய்யும்படி அவர்கள் எலும்பிற் பாய்ந்து சமுத்திரததிற் பெருகியது. இதனையொழிந்த மற்றை இருநதிகளும் தாம் புகுந்த இடங்களில் இருந்தன நமது அருட் சத்தியாகிய உமையம்மையாருடைய திருக்கரத்திற்றோன்றிய கங்கா நதி உலகங்களையழிக்காவண்ணம் திருவருண்மேவிட்டால் சிவபெரு மான் அதனை திருமுடியிற்றரித்த வரலாறு இதுவேயாம்.

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மறறொருத்தி
சலமுகத்தால் அவன்சடையிற் பாயுமது என்னேடி? [ம்
சலமுகத்தால் அவன்சடையிற் பாயந்திலனேல் தரணியெல்லா
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ.

—திருவாசகம்.

பங்கஜானன் = பங்கஜாசனன், சகரங்குறைந்து இடைக்குறை யாயிற்று.

ஆனந்தவேள் :—

முருகப்பெருமான் ஆனந்தமூர்த்தியாம். இதனை "ஆனந்தம் ப்ரஹ்ம" எனும யஜுர்வேத தைத்திரீயோபநிடத ஆனந்தவல்லி வச னத்தாலும், "கந்தசுவாமி சிவபெருமானது தோளின்மீது எறியிருந் தனர்; அஞ்ஞான்று சிவபெருமான் அளவற்ற ஆனந்தசொரூபியா யினும் தம்முடைய உத்தமபுத்திரராம் ஆனந்தசாகரத்தினது திரு மேனி பரிசித்தலாய அளப்பறு மகிழ்தகீரில் அமிழ்வாராயினர்" எனும் பொருளைத்தரும் முதல்வன்புராண சம்பவகாண்டத்து 34-ம் அத்தியாயத்து 4, 5ஞ் சுலோகங்களானுமறிக.

"ஆனந்த வத்துவின் கழல் வாழ்த்தி வணங்குவாம்"

என்ற ஸ்ரீமத் குமாரகுருதாசசுவாமிகள் திருவாக்கையும் உய்த்துணர்க. இதனாலன்றோ முருகப்பெருமானது திருவருள பெறாதார்க்கு ஆனந்த மில்லையென்பது ஆன்றோர் கொள்கை.

## கருத்துரை.

*கங்கையிலேச்சிய கண்ணுதற்கடவுளது திருக்குமாரரே! கந்த மூர்த்தியே! கலை விநோதரே! இந்திரனால் துதிக்கப்பெற்றவரே! வெற்றிவேலைக்கொண்டு சூரனையழித்த பெருங் கீர்த்தியையுடையவரே! அரியயனால் தொழப்பட்ட ஆனந்தமூர்த்தியே! செந்திலாதிப! சஞ்சலமனமுடையவனாகி வாசனைப்பொருள்களையணிந்து ஆடம்பரமாகத்திரிகின்ற மாயையுடையவனாகிய அடியேன், விலைமகளிர் வலைப்பட்டு அழியாவண்ணம் தேவரீர் தமது திருவருட்பிரகாசத்திருமேனியுடன்வந்து காத்தருள்வீர்.*

(20) அங்கை மேனகுழ லாய்வார் போலே
சாதி நிறைய லோடே போவா
ரன்பு கொண்டிட நீரோ போறீ ரறியீரோ
அன்று வந்தொரு நாள்நீர் போனீர்
பின்பு கண்டறி யோநா மீதே
அன்று மின்றுமோர் போதோ போகா துயில்வாரா
எங்க ளந்தரம் வேறு ரோராவார்
பண்டு தந்தது போதா தோமே
லின்று தந்துற வோதா னீதே னிதுபோதா
திந்த நின்றதேன் வீடே வாரீ
ரென்றி ணங்கிகள் மாயா லீலா
இன்ப சிங்கியில் வீணே வீழா தருள்வாயே
மங்கு லின்புறு வானாய் வானா
டன்ற ரும்பிய காலாய் நீள்கால்
மண்டு றும்புகை நீறு வீறு எரிதீயாய்
வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
மண்ட லம்புகழ் நீயாய் நானாய் மலரோனாய்
உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
அண்ட பந்திகள் தாமாய் வானாய்
ஒன்றி லுங்கடை தோயா மாயோன் மருகோனே
ஒண்த டம்பொழில் நீடூர் கோடூர்
செந்தி லம்பதி வாழ்வே வாழ்வோர்
உண்ட நெஞ்சறி தேனே வானோர் பெருமாளே.

## பதவுரை.

மங்குல் இன்புறு வானாய் - மேகமானது இன்புற்று சஞ்சரிக்கும் ஆகாய பூதமாகியும், வானூடு அன்று அரும்பிய காலாய் - அவ் வாகாயததில் அந்நாளில தோன்றிய வாயுபூதமாகியும், நீள்கால் மண்டுறும் புகை நீறு விறு எரியாய் - பெருங்காற்றுடன் நெருங்கி புகையுடனெழுந்து யாவற்றையும் நீறாக்கும் வன்மையுடைய அக்கினிபூதமாகியும், வந்து இரைந்து எழும் நீராய் - ஒலித்து எழுந்துவரும் அப்புபூதமாகியும், நீர் சூழ் அம்பரம் புனை பாராய் - தண்ணீரைத் தனக்கு ஆடையாகப்புனைந்துள்ள பிருதிவி பூதமாகியும், பார் ஏழ் மண்டலம் புகழ் நீயாய் - நிலம் முதலிய எழுலகங்களும் புகழும் குகக்கடவுளாகிய தாஙகளாகவும், நானாய் - அடியேனாகவும், மலரோனாய் - பிரமதேவராகியும், உங்கள் சங்கரர் தாமாய் - உமது பிதாவாகிய சிவபெருமானாகவும், நாம் ஆர் அண்ட பந்திகள் தாம் ஆய்வானாய் - எத்துணையவோ என்று அச்சத்தை விளைவிக்கக்கூடிய எண்ணிலாத அண்டகோடிகளை ஆராய்பவராகியும், ஒன்றிலும் கடை தோயா - முடிவில் ஒன்றிலும் கலப்பில்லாதவராகியுமாகிய, மாயோன் - மாயவன் என்னும் திருமாலினது, மருகோனே - மருகரே! ஒண்தடம் பொழில் நீடு ஊர் - ஒளி பெற்றதும விசாலமுடையதுமாகிய மலர்ச்சோலைகள் சூழ்ந்த புராதன தலமாகிய, கோடுஊர்—சங்குகள் தவழும், செந்திலம்பதி வாழ்வே - திருச்செந்தூர் என்னுமக்ஷேத்திரததின் வாழ்வையுடையவரே! வாழ்வோர் உண்ட நெஞ்சு அறிதேனே - அத்தலத்தில் வாழ்பவர்கள பருகிய உளளத்தில் தித்தித்தறிந்துகொள்ளும் ஆனந்ததேனே! வானோர் பெருமாளே! தேவர்களுக்கெல்லாம் பெருமானாக வீற்றிருப்பவரே!, அம் கை மென்குழல் ஆய்வார் போலே - அழகிய கரத்தால் மென்மையாகிய அளகபாரக் கூந்தலை சிக்கெடுப்பவர்களைப்போல், சந்தி நின்று - பல தெருக்கூடுமிடத்தில் நின்று, அயலோடே போவார் - அயலிடத்திற்கெனச் செல்லுவோர்கள், அன்புகொண்டிட - தங்கள்மீது அன்புகொள்ளும்படி, நீரோ போறீர் - நீங்களா போகின்றீர்கள்?, அறியீரோ - நான் நிற்பதை அறியவில்லை போலும்?, அன்று வந்து ஒருநாள் போனீர்-அன்றைத் தினம் ஒருநாள் இவ்விடம் வந்து போனீர், நாம் பின்புகண்டு அறியோம் - நாம் பின்னர் ஒருவரையொருவர் பார்த்து அறியவேயில்லை, ஏதே - உம்முடைய அன்பு இதுவோ? அன்றும் இன்றும் ஓர்போதா போகா - தாங்கள் என்னிடம் வந்துபோன அன்றுதொடங்கி இன்று

வரை ஒரு பொழுதே போகிறதில்லை, துயில் வாரா - இரவில் தூக்கமே வருவதில்லை, எங்கள் அந்தரம வேறு ஆர் ஓர்வார் - எமது இரகசியத்தை தங்களைத்தவிர வேறு யார்தான் ஆராயவல்லவர்? பண்டு தந்தது போதாதோ - முன்பு கொடுத்தீரே அதுவே போதாதோ? மேல் இன்று தந்து உறவோதான் - இனிமேல் இன்றைக்கு வேறு பொருள் கொடுத்துத்தான உறவாடவேண்டுமென்பதில்லை, ஈதேன் இது போதாது - இது என்ன தாங்கள் இப்படி வந்து தெரிசனம் கொடுத்தீரே இது போதாதோ? இங்கு நின்றது என் - நடுவீதியாகிய இங்குநின்றிருப்பது எதற்கு? வீடே வாரீர் - வீட்டிற்கு வாருங்கள், என்று இணங்கிகள் மாயா லீலா - என்று இவ்வாறு இணக்கமாகப்பேசி (பொருள்பறிக்கும்) மாயா லீலையுடைய, இன்ப சிங்கியில் - விலைமகளிரது இன்பமாகிய குளிர்ந்த கொல்லும் விஷக்குழியில், வினை விழாது - வினை விழுந்து உழலாவண்ணம், அருள்வாயே - அருள்புரிந்து காப்பாற்றவேண்டும்.

## பொழிப்புரை.

மேகங்கள் இன்புறுதலவும் ஆகாய பூதமாகியும், அவ்வாகாயத்தில் அந்நாளில் தோன்றிய வாயுபூதமாகியும், பெருங்காற்றுடன் நெருங்கியெழும் புகையுடன்கூடி யாவற்றையும் நீறாக்கும் வலியுடைய அக்கினிபூதமாகியும, ஒலித்தெழுந்துவரும் அப்பு பூதமாகியும், நீரை ஆடையாகவுடைய பிருதிவி பூதமாகியும், நிலம் முதலாக (சத்திய உலகம ஈறாகவுள்ள) ஏழுலகங்களும் புகழும் தேவரீராகியும், அடியேனாகியும், பிரமதேவராகியும, உமது பிதாவாகிய சிவமூர்த்தியாகியும், எத்துணையவோ? என அச்சத்தை விளைவிக்கும் அண்ட பந்திகளை ஆராய்பவராகியும், முடிவில் ஒனறிலும தோயாத மாயவனாகிய திருமாலினது மருகரே! ஒளிபெற்றதும் விசாலமுடையதுமாகிய சோலைகளால் சூழப்பெற்ற புராதனதலமும, சங்குகள தவழப்பெற்றதுமாகிய திருச்செந்திலம்பதியில் வாழ்கின்றவரே! அத்தலத்தில் வாழ்வோர்கள் பருகிய நெஞ்சததில் தித்திக்கும் ஆனந்தத்தேனே! தேவர் பெருமானே! அழகிய காத்திருல் மெல்லிய கூந்தலை ஆராய்பவரைப போல் பல தெருக்கூடுமிடத்தில் நின்று அயலில் செல்லும் ஆடவர் தமமீது அன்பு கொள்ளுமாறு நீங்களாபோகிறீர்? என்னைப்பார்க்கவில்லைபோலும்? அன்று ஒரு நாள்வந்துபோயினீர். பின்பு உம்மைக் காணவேயில்லை, உமது அன்பு இதுவோ? நீர் வந்துபோன அன்று

முதல் இன்றுவரை பொழுதே போகிறதில்லை. இரவில் தூக்கமும் வருவதில்லை. உம்மைத் தவிர எமது உள்ளக்கிடக்கையை ஆராயவல்லவர் யாவர்? முன்பு கொடுத்ததுபோதாதோ? இனிமேல் இன்று புதிதாகக் கொடுத்து உறவாடவேண்டுமோ? வேண்டியதில்லை. என்ன இது; நீர் இங்குவந்து தெரிசனந்தந்தீரே இது போதாதோ? இங்கு நிற்பது எதற்கு? வீட்டிற்கு வாருங்கள் என்று இணக்கமாகப் பேசி (அழைத்துக்கொண்டுபோய்) மாயலீலைகளைப்புரியும் இன்பம்போல் குளிர்ந்து கொல்லும் விலைமாதராது நச்சுக்குழியில் அவமே வீழ்ந்தழியாவண்ணம் அருள்புரிவீர்.

## விரிவுரை.

" அங்கை மென்குழ . . . . . . என்றிணங்கிகள் "

நடுவீதியில் நின்று அவ்வீதிவழியே செல்லும் இளைஞர்களை வலிந்தழைத்து பல இனியவார்த்தைகளைக்கூறி, கண்வலை வீசி, தமது நடையுடைகளால் மயக்கி, மனமுடனே பொருளையும் ஆவியையும் பறிமுதல்புரியும விலைமகளிரது சாகசங்களை எடுத்துக்கூறி; அதனிடத்து மயங்காவண்ணம் விழிப்பை யுண்டுபண்ணுகிறார். சிவஞானந் தலைப்படுமாறு பதிநெறி சென்று முத்திநிலையடைய விழைவார்க்கு முதற்படி மாதராசையை நீக்குவதேயாம். முதலில் விலைமகளிரை வெறுத்து இல்லறத்திருந்து பின்னர் அதனையும் வெறுத்து நிராசையை மேற்கொள்ளவேண்டும்.

எங்கேனு மோருவர்வர அங்கேக ணினிதுகோடு
இங்கேவ ருனதுமயல் தரியாரேன்
றிந்தாவே னினியஇதழ் தந்தேனை யுறமருவ
என்றுரைசை குழையவிழி யிணையாடி
தங்காம லவருடைய வுண்டான பொருளுயிர்கள்
சந்தேக மறவெபறி கோளுமானூர்
சங்கீத கலவிநல மென்றேது முததிவிட
தண்பாரு முனதருளை யருள்வாயே
—திருப்புகழ்

சந்தி = என்பதற்கு மாலைநேரம் என்றும் பொருள்கொள்ளலாம்.

சிங்கி = குளிர்ந்து கொல்லு ம நஞ்சு.

மங்குலின்புறு. . . . . மாயோ ன்:—

விஷ்ணு என்றால் வியாபகன் என்று பொருளாதலின் பஞ்சபூதங்களாகியும் விளங்குகின்றனர். சங்கார் தாமாய், முருகனாய்,

என்பதன் பொருள் : நாராயணர் சிவனடியாராதலால் சிவ சாரூப்பியமும் விஷ்ணுவுக்கு உளதாதலால சிவமூர்த்தியாகவும் விளங்குகிறார் என்றனர். நாராயணர திருநீறு தரித்து உருத்திராக்கமணிந்து சிவ வழிபாடு செய்கின்ற சிவனடியாரில முதன்மையானவர். அங்ஙனஞ் சிவபெருமானை வழிபட்ட ஆலயங்கள் இற்றைக்கும் ஆங்காங்கு விளங்குகின்றன.

உண்டநெஞ்சறிதேனே :—

பத்திநெறி சென்று தினந்தோறும் இறைவனை மன மொழி மெய் என்ற மூன்று கரணங்களாலும வழிபட்டு, இறைவனது திருவருட் பெருமையை நினைந்து நினைந்து நெஞ்சம நெகிழ்ந்து, கண்ணீர் மல்கி, உரைதடுமாறி உரோமஞ் சிலிர்ப்ப ஒழியா ஆர்வத்துடன் அன்பு செய்வார்க்கே அப்பெருமானுடைய தியானநதம் இனிக்கும் அவ்வாறு வழிபடத்தெரியாத அபாக்யவான்களுக்கு அமமதுரம் இனிப்பது யாங்ஙனம்? அன்பு நெறி நின்று ஆணடவனை வழிபடுவார்க்கு அவ்வானநதத்தேன் நினைக்குந்தோறும் பேசுந்தோறும காணுந்தோறும் மற்று எக்காலத்தும இன்பத்தை வழஙகும். இதனை மணிவாசகனார் தமிழ்மறை தெரிக்குமாறு காண்க.

தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறுங் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.

இறைவனைத் தேனே என்று பரிந்தழைக்கும் ஆன்றோர் அமுத வாக்குகளையும் உற்று நோக்குக

"திருவே என் செல்வமே தேனே வானோர் செழும்
பொருளே"

—அப்பர்.

"சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்
தேவதேவனைத் தித்திக்குந் தேனை"

—சுந்தரர்.

## கருத்துரை.

பஞ்சபூத சொரூபியாயும் யாவையுமாயும் விளங்கும் திருமாலினது மருகரே! செநதிலாதிப! உண்ட நெஞ்சறி தேனே! தேவர் பெருமானே! விலைமகளிரது மாயாலீலையிற சிக்கி வீணே அழியாமல் நின் திருவருளால் அடியேனைக் காத்தருளல் வேண்டும்.

கல்லடிசத் துள்ளங் களித்தனையே—மல்லலுறும்
வில்வக்கிளை பதித்த வெய்ய முசுக்கலையைச்
செல்வத் துரைமகனாச் செய்தனையே—சொல்லகலின்
ஏறுகின்ற கேடபருந்த கேவலியை மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனு யாக்கினையே—கோளகல
வாய்ச்சங்கு நூலிழைத்த வாய்ச்சிலம்பி தன்னையுயர்
கோச்செங்கட் சோழனெனக் கொண்டனையே-ஏச்சறுநல்
ஆறடுத்த வாக்சாக காம்பசியைக் கண்டுகட்டுச்
சோறெடுத்துப் பின்னே தொடர்ந்தனையே—கூறுகின்ற
தொண்டைபெறுஞ் சுந்தரரைத் தோழனென்று பெண்பரவை
நண்ணமனைக்குத் தூது நடந்தனையே"

— திருவருட்பிரகாசவள்ளல்,

மதியினைக் குறைசெய் துண்டமும் —

*சந்திரனைத் தரித்த வரலாற்றைத் திருப்புகழமிர்தம்,* 1-*வது மலர்* 9-*வது பக்கத்திற் காண்க*

தமிழ்விரக :—

*முருகப்பெருமான் ஏனைய மொழிகளுக்குப் பொதுக்கடவுளாகவும், தமிழ்மொழிக்குச் சிறப்புக் கடவுளாகவும் விளங்குகின்றனர். மதுரையில் நாற்பத்தொன்பது புலவர்களுடன் தாமுமொருவராயிருந்து தமிழாராய்ந்ததும், அகத்தியருக்குத் தமிழைப்போதித்ததும், நக்கீரருக்கும் அருணகிரிநாதருக்கும் தமிழால் அடியெடுத்துக் கொடுத்ததும், இதனை விளக்கும். "செந்தில்வாழ் செந்தமிழ்ப்பெருமாளே" என்ற திருப்புகழாலுந் தெளிக. திருப்புகழ் தமிழ் வேதத்தை முருகப்பெருமான் மனமகிழ்ந்து தரித்துக்கொள்ளுகின்றார்.*

" விரித்தருணை கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முடனோதி மகிழ்வோனே"

*தெய்வயானையம்மையாரது இனிய கலவியின்பத்தினும் நக்கீரர் தேவர் பாடிய திருமுருகாற்றுப்படையென்னும் செந்தமிழ்ப்பிரபந்தத்தில் மிகவும் பிரியமுடையவராயிருக்கின்றனரென அருணகிரியார் கந்தரந்தாதியில் உரைக்குமாறு காண்க.*

" கைமா மயில் செவ்வி நற்கீரர் சொற்றித்தித்ததே '

முருகவேள் செந்தமிழ்ப்பிரியர் என்பதனை "முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்" என்ற கந்தரலங்காரத் திருவிருத்தம் உணர்த்துவதையுங் காண்க.

> " தண்டரள மணிமார்ப செம்பொனெழில் செறிரூப
> தண்டமிழின் மிகுநேய முருகேசா "
>
> —(அண்டாபதி) திருப்புகழ்

## கருத்துரை.

மயிலின்மிசை எழுந்தருளிவந்து அசுரரை சம்மரித்த வேலாயுதரே! சிவபெருமானது இடப்புறத்திலிருக்கும் உமாதேவியார் திருமுலைப்பால் தந்து அன்புகொள்ளும் தமிழ்விரக! பெரிய பொருளே! சங்கரன் கும்பிடுந் தம்பிரானே! பொதுமகளிரது மாயா வலையிற் சிக்கி, அவரது இன்பத்தையே பரமசுகமெனக்கருதி அறிவில நெறியில் சென்று திருச்செந்தூர் என்று உருகாத அடியேனுக்கு தேவரீரது சீறடிக்கமலத்தைத் தந்தருளத் தமது திருவுள்ளஞ் சிந்தியாதோ?

---

## உண்மையின் உயர்வு.

உண்மையுரைப்பவன் இம்மையிற் பொருளையும் புகழையும், மறுமையில் புண்ணியலோகத்தையும் அடைவான். கடவுள் சத்தியவடிவாக இருக்கிறார். சத்தியத்தின் மேலான தருமமும், அசத்தியத்தின் மேலான பாவமுமில்லை, பொய்கூறியவன் எழுபிறப்பிலீட்டிய எல்லா புண்ணியத்தையுங் கெடுத்தவனாவான். பிரமவதையும், சிசுவதையும், தந்தைவதையும் செய்தவனாவான் ரௌரவ முதலிய கொடிய நரகங்களையடைவான். பின்னும் ஊர்ப்பன்றி, கழுதை, நாய், நீர்க்காக்கை, புழு என்னும் இப்பிறப்பிற் பிறந்து, பின்பு மானுடப்பிறவியிலே, பிறவிக்குருடன், செவிடன், ஊமை, குட்டநோயினன், இவர்களாகியும், மிக்க பசிதாகமுடையவனாகித் தனது பகைவன் வீட்டில் தன்மனையாளோடும் பிச்சை யிரப்பவனாகியும் பிறப்பான். உண்மையுரைத்தவன் எக்காலத்தும் பொன்றாத இன்பத்தையடைவான். உண்மையே மனத்திற்குச் சாந்தியைத் தரும். உண்மையே மனிதனை உயர்த்தும்.

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:




(205-ம் பக்கத் தொடர்ச்சி.)

कृतान्तस्य दूतेषु चण्डेषु कोपा
दहच्छिन्धि भिन्धीति मां तर्जयत्सु ।
मयूरं समारुह्य मा भीरिति त्वं
पुरःशक्ति पाणि र्ममायाहि शीघ्रम् ॥

(21) க்ருதாந்தஸ்ய தூ3தேஷு சண்டே3ஷு கோபாத்
த3ஹச்சி2ந்தி4 பி4ந்தீ4தி மாம் தர்ஜயத்ஸு |
மயூரம் ஸமாருஹ்ய மாபீ4ரிதித்வம்
புர: சக்தி பாணிர் மமாயாஹி சீ4க்ரம் ||

## பதவுரை.

ஹே தயாளோ! - ஓ தயாளுவே!
சண்டேஷு க்ருதாந்தஸ்ய தூதேஷு - கொடியவர்களான யமனுடைய தூதர்கள்,
கோபாத் - கோபத்தினால்,
தஹ, சிந்தி, பிந்தி, இதி மாம தர்ஜயத்ஸு - கொளுத்து, வெட்டு, குத்து என்று என்னை பயமுறுத்தும்போது,
த்வம் - தேவரீர்,
மயூரம் ஸமாருஹ்ய - மயிலின்மீதேறிக்கொண்டு,
சக்திபாணி - வேலாயுதத்தைத் தாங்கின திருக்கரத்தையுடையவராய்,
சீக்ரம் - விரைவில்,
மாபீ: இதி - பயப்படாதே என்று,
மமபுர: ஆயாஹி - எனது எதிரில் எழுந்தருளவேண்டும்.

## பொழிப்புரை.

ஓ கருணாமூர்த்தியே! மரணகாலத்தில் கொடியவர்களான யமதூதர்கள் வெட்டு குத்து கொளுத்து என்றிவ்வாறு என்னை நோக்கிப் பயமுறுத்தும்போது தேவரீர் திருக்கரத்தில் வேலாயுதத்தைத் தாங்கிக்கொண்டு விரைவில் மயூராரூடராய அடியேன்முன் எழுந்தருளி அபயந்தந்து ஆதரிக்கவேண்டும்.

प्रणम्यासकृत्पादयोस्ते पतित्वा
प्रसाद्य प्रभो प्रार्थयेऽनेक वारम् ।
नवक्तुं क्षमोऽहम् तदानीं कृपाब्धे
नकार्यान्त कालेमनागप्युपेक्षा ॥

(22) ப்ரணம்யாஸக்ருத் பாத³யோஸ்தே பதித்வா
ப்ரஸாத்³ய ப்ரபோ⁴ ப்ரார்த²யேநேகவாரம் |
நவக்தும் க்ஷமோஹம் த³தா³னீம் க்ருபாப்³தே⁴
நகார்யாந்த காலே மனாகப்யுபேக்ஷா.

## பதவுரை.

ஹேப்ரபோ! க்ருபாப்தே! - ஓ பிரபுவே! கருணைக்கடலே!

| | |
|---|---|
| தவாம | - தேவரீர் |
| அஸக்ருத | - பலதடவை, |
| ப்ரணம்ய | - நமஸ்கரித்து, |
| தேபாதயோ | - தேவரீரது திருவடித்தாமரைகளில், |
| பதித்வா ப்ரஸாதய | - வீழ்ந்து சந்தோஷப்படுத்தி, |
| அநேகவாரம | - பலதரம், |
| ப்ரார்த்தயே | - கேட்டுக்கொள்ளுகிறேன், |
| ததானீம | - அப்போது, |
| அஹம | - நான, |
| வக்தும் | - பேசுவதற்கு, |
| நக்ஷம: | - சக்தியற்றவனாயிருப்பேன், |
| அத: | - ஆகையினால, |
| அந்தகாலே | - எனது மரணத்தருவாயில, |
| மனாக அபி | - சிறிதுகூட, |
| உபேக்ஷா | - உபேக்ஷையானது, |
| நகார்யா | - செய்யலாகாது, |

## பொழிப்புரை.

கருணை நிறைந்த பிரபுவே! நான் மரணத்தருவாயில் தேவரீரைப் பிரார்த்திக்கச் சக்தியற்றுப் போவேனாகையால் அக்காலத்தில் என்னை விட்டுவிடலாகாதென்று இப்போதே தேவரீரைப் பலதரம் வணங்கி மகிழ்வித்துப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறேன்.

20, 21, 22 இம்மூன்று ச்லோகங்களினால் ஒருதரமேனும் தன்னைக் காப்பாற்றவேண்டுமென்று முருகக்கடவுளிடம் பிரார்த்தித்த அன்பன் கடல்போல விசாலமான கருணையையுடைய அக்கடவுளால் எக்காலத்திலும் காப்பாற்றப்படுவான் என்பது தெரிவிக்கப்பட்டது.

सहस्राण्डभोक्ता त्वया शूरनामा
हतस्तारकःसिंहवक्त्रश्चदैत्यः।
ममान्तर्हृदिस्थं मनःक्लेशमेकं
नहंसिप्रभोकिं करोमिक्वयामि॥

(23) ஸஹஸ்ராண்ட[3] போ[4]க்தா த்வயா சூரநாமா
ஹ[4]தஸ்தாரக: ஸிம்ஹ வக்த்ரஸ்ச தை[3]த்ய: |
மமாந்தர்ஹ்ருதிஸ்[2]தம் மன: க்லேசமேகம
நஹம்ஸிப்ரபோ! கிமகரோமி க்வயாமி ||

## பதவுரை.

ஹே ப்ரபோ! - ஓ பிரபுவே!
த்வயா - தேவரீரால்,
ஸஹஸ்ராண்ட போக்தா சூரநாமா தைத்ய: - ஆயிரம் அண்டங்களை அடக்கியாண்டுவந்த சூரபத்மா என்கிற அசுரனும்,
(ததா) தாரக: ஸிம்ஹ வக்த்ர: ச ஹத: - தாரகன் சிம்ஹவக்த்ரன் என்னும் அசுரர்களும் கொல்லப்பட்டார்கள்,
(கிந்து) மம அந்தர் ஹ்ருதிஸ்தம் ஏகம் மன: க்லேசம் நஹம்ஸி -- ஆனால் எனது ஹ்ருதயத்திற்குள்ளிருக்கும் ஒரே ஒரு மனக்கிலேசத்தைமட்டும் கொல்லாமலிருக்கிறீர்,
அஹம் - நானே,
கிம் கரோமி க்வயாமி? - என்ன செய்வேன்? எங்கு செல்வேன்,

உ

ஸ்ரீவள்ளிநாயகன் துணை

# கந்தர் திருவிளையாடல்

(192 வது பக்கத் தொடர்ச்சி)

உலகம் உய்யும் பொருட்டு அருளுருவங்கொண்டு சரவண தடாகத்தில் திருவவதாரஞ்செய்தருளிய முருகப்பெருமானைக் குழந்தைபோலச் செய்யுந் திருவிளையாடலைக்கண்டு, அரியயனாதி யமரர்கள் அனைவரும் கார்த்திகை மகளிர்களை நோக்கி, "சரவணப் பொய்கையில் சண்முகக்கடவுளாய் வீற்றிருந்தருளும் எம்பெருமான் ஒரு குழந்தைபோலத் தோன்றினார். நீங்கள் அவருக்கு நாடோறும் உங்கள் முலைப்பாலைக்கொடுத்து வளர்க்கக்கடவீர்கள்" என்றார்கள். கார்த்திகைப்பெண்கள் அதற்கிசைந்து, சரவணப்பொய்கையில் எழுந்தருளியிருக்கும் இளம்பூரணனையடைந்து போற்ற, அறுமுகக்கடவுள் தம்மை வேண்டுவோர் வேண்டிய பொருள்களை வெறுத்துதவு பெருமாள் ஆதலால், அவ்வாறு மாதர்களும் அன்போடு பால்தரும் அன்பால் எடுக்க ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக ஆறு குழந்தையாகப் பிரிந்தருளினார்.

"உவகையொடு கிர்த்திகைய ராறுவருமெடுக்க அவர்
ஒருவ ரொருவர்க் கவனோ ரோர்புத்ர னானவனும்"

—வகுப்பு.

---

## பொழிப்புரை.

ஓ பிரபுவே! அநேக அண்டங்களை யடக்கியாண்டுக்கொண்டு உலகத்தைத் துன்புறுத்திவந்த சூரபத்மன் தாரகன் சிங்கமுகன் முதலிய அசுரர்களைத் தேவரீர் சிரமமில்லாமல் கொன்றுவிட்டீர். ஆனால் எனது உள்ளத்திலிருந்துகொண்டிருக்கும் மனக்கிலேசத்தை மாத்திரம் ஒழிக்கின்றீரில்லை. நான் எதைச் செய்வேன் எங்கே செல்லுவேன்

இதனால் முருகக்கடவுளின் அருளால் அடியவர்கள் எக்காலத்தும் சந்தோஷமுள்ளவர்களா யிருப்பார்கள் என்பது தெரிவிக்கப்பட்டது.

---

அங்ஙனம் பிரிந்த ஆறு திருக்குழந்தைகளையும் கார்த்திகை மகளிர்கள் மிகவும் மகிழ்ந்து எடுத்து தங்கள் தங்கள் முலைப்பாலை ஊட்ட, முருகப்பெருமான் திருமுறுவல் செய்து, நீங்காத பேரருளால் அருந்துவார்போல அருந்தினார். பாலருந்திய பரஞ்சுடர் முதல்வனை அக்கார்த்திகைப்பெண்கள் வண்டருந்தாத கஞ்சமாமலர்ச் சயனத்தில் சேர்த்துத் தாலாட்டிக் கண்வளரச் செய்துத் துதித்தார்கள். குமாரக்கடவுள் திருவருளினாலே துயில்செய்ய ஒருருவமும், துயில் செய்துத்துணையின்றி எழுந்து மகிழ்ச்சியொழிந்து பேச ஒருருவமும், மாதாவின் முலைப்பாலை செப்பவள வாய்வைத்து உண்ண ஒருருவமும், நகைசெய்துக்கொண்டிருக்க ஒருருவமும், விளையாடிக்கொண்டிருக்க ஒருருவமும், காரணமின்றியே அழுதுகொண்டிருக்க ஒருருவமும், உடையாராயினார். தவழ ஒருருவமும், தளர்நடையிட்டுச் செல்ல ஒருருவமும், நில்லாது விரைந்து எழுந்துவிழ ஒருருவமும், இருக்க ஒருருவமும், அச்சரவணத் தடாகமுழுதுங் கலக்க ஒருருவமும், தாயாரிடத்தில் இருக்க ஒருருவமும் உடையாராயினார். கூத்தாட ஒருருவமும், செங்கைகொட்ட ஒருருவமும், இனிய பாடல்களைப்பாட ஒருருவமும், அவ்விடத்தைப்பார்க்க ஒருருவமும், ஓடவோருருவமும், ஓரிடத்தில் ஒளிக்க ஒருருவமும், அப்படி ஒளித்த மகவைத் தேட வோருருவமுமாக உடையாராயினார்.

ஆடவோ ருருவஞ் செங்கை யறையவோ ருருவ நின்று
பாடவோ ருருவ மாடிப் பார்க்கவோ ருருவ மாங்க
ணோடவோ ருருவ மோர்பா லொளிக்கவோ ருருவம் யாண்டுந்
தேடவோ ருருவ மாகச் சிவன்மகன் புரித லுற்றான்

இவ்வாறு ஆறுதிருமேனியும் ஒருகணத்திற்குள் ஆயிரக்கணக்கான பேதமாம் வண்ணம் முழுமுதற்கடவுளாகிய முருகப்பெருமான் உயிர்கள்தோறும் ஆடல்போல் எண்ணிலாத அற்புதத் திருவிளையாடல்களைப் புரிவாராயினார். சிறுபாலனாகிவந்த செவ்வேளது திருவிளையாடலின் பற்பல திறமும் நோக்கிய நாரணனும் நான்முகனும் இந்திரனும் இருடியரும் பிறரும் அற்புதமும் ஆனந்தமும் அடைந்து, இவ்வொருபாலரே பல சிறுவர் வடிவங்கொண்டு நம்முன் கணப்பொழுதிற்குள் எண்ணிலாத பேதத்தராயினார் இதனை ஆராயுங்கால் இக்குமாரசுவாமியுடைய திருவிளையாடல் எங்களாலும் அறிவரியது. கைக்குழந்தைபோலத் தோன்றிய இவர் செய்யும் இம்மாயையைபோல ஒருவரும் செய்ய வல்லவரல்லர். பிறிது சொல்லி என்ன பயன்?

நாமும் இவ்வாறு செய்ததொன்றில்லை இவர் உயர்வொப்பில்லா சிவபெருமானேயாம்" என்று சொல்லி வணங்கினார்கள்.

கார்த்திகைப்பெண்கள் அறுவரும் அறுமுகக்கடவுளின் ஆடல்களை நோக்கி மிக்க வியப்புற்று, குழந்தையென்ற எண்ணத்தை ஒழித்து, சிறந்த பிறப்பாகு அஞ்சி, வழிபடுகடவுளாகவேகொண்டு மெய்யன்போடு துதித்தார்கள்.

## நவவீரருற்பவம்.

ஆலமுண்ட அரனாரது நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றிய அக்கினிப்பொறிகளின் வெம்மையைத் தாங்காது, உமாதேவியார் தமது திருவடிகளிலுள்ள சிலம்புகள் தாக்கலால் நவரத்தினங்கள் சிதறும்வண்ணம் அஞ்சியோடினார் "மாலவனாதிவானவர்கள் சிவபெருமானை வணங்கி, "நீர் ஒரு திருக்குமாரனைத் தந்தருளும்" என்று வேண்ட, சிவபெருமான் தமது நுதல்விழியினின்று தீப்பொறிகளைத் தோற்றுவித்து, ஒரு குமாரனைப் வளரும்வண்ணம் சரவணப் பொய்கையிலே சேர்ப்பித்தருளினார்" என்றுணர்ந்தார். அதன்பின் அரனாருக்குக் குமாரன் என்னிடத்தே தோன்றாவண்ணம் திருமால் பிரமன் இந்திரன் முதலிய இமையவர்களுடைய பன்னியர்களுக்கெல்லாம் புதல்வர்கள் இல்லாதொழிக" என்றார். மீண்டு சிவசந்நிதியையடைந்து, "தமது நெற்றிக்கண்ணில் தோன்றிய நெருப்புப்பொறிகளின் வெம்மையைக்கண்டு உடல் வெதும்பி ஓடினேன்; நீர் அவற்றை இவ்விடத்தினின்றும் அகற்றினமையால் மீண்டேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, கண்ணுதற்கடவுள் கருணைசெய்து, தேவியாரைத் தமபக்கத்திருத்தியருளினார்.

உமாதேவியார் முன் ஓடியபொழுது, அவருடைய பாதச்சிலம்பினுஞ் சிதறிய இரத்தினங்களெல்லாம் சிவமூர்த்தியின் திருமுன் விளங்கின. அரனாரது ஆணையினால், அந்நவமணிகளினின்றும் அம்பிகையின் திருவுருவந்தோன்றியது. அவ்வுருவங்களைச் சிவபெருமான் நோக்கி, திருவருளினால் "வாருங்கள்" என்று திருவாய்மலர்ந்தருள, ஒவ்வோர் இரத்தினத்துக்கு ஒவ்வோர் சத்தியாக நவசத்திகள் தோன்றினார்கள். அவர்கள் முக்கண்மூர்த்தியின் முளரியந்தாளை வணங்கிநின்று அவரிடத்தே விருப்பம் வைத்தமையால், இருடி பத்தினிகள்போல் விரைவிலே கருப்பமுற்றார்கள். இவை யாவையும் பார்வதியம்மையார் கண்டு, அந்நவசக்திகளின்மீது சினந்து "நீங்கள்

நடந்தீராயினமையால், இக்கருப்பத்துடன் பலகாலம் இருக்கக் கடவீர்கள்' என்று சபித்தனர். அப்பொழுது நவசக்திகள் அஞ்சி நடுநடுங்கி உடல் வெயர்த்தனர். அவ்வெயர்வையினின்றும், தேவதேவனது திருவருளால் தினகரத்திரள்களைப்போல் இலட்சம் வீரர்கள் உதித்தார்கள். அவ்வீரர்கள் இடியேற்றனைய சொல்லையுடையவர்களும், பொன்னுடையை உடுத்தவர்களும், வாளையும் பரிசையையும் கரத்திலேந்தியவர்களுமாய்க் கண்ணுதற்கடவுள் முன் சென்று, திருவடிகளை இறைஞ்சித் துதித்துநின்றார்கள். எம்பெருமான் அவர்களை நோக்கி, "மைந்தர்களே! கேண்மின்; அமரர்களுக்குப் பகைவர்களாகிய அவுணர்களை யழித்தற்பொருட்டு நமதுபுதல்வனாகிய முருகவேளுக்கு நீங்கள் யாவரும் படைகளாகக் கடவீர்கள்" என்று கூறியருளினார். அவ்விலக்க வீரர்களும் நாடோறும் பேரன்புடையவர்களாய் சிவசத்தியை அகலாது, திருத்தொண்டின்வழி நின்றார்கள்.

பார்வதியாரால் சபிக்கப்பட்ட நவசக்திகள் நடுநடுங்கி, மலைவளர்காதலியை மனமொழி மெய் கரணங்களால் வழிபாடுசெய்து கொண்டு, கருப்பத்தோடு பலகாலம் இருந்தார்கள். அந்நவசக்திகளுடைய கருவினுள்ளே நந்திகணத்தவர்கள் குழவிகளாய்ப்புகுந்து, காளைகளாகி, சிவபெருமானைச் சிந்தித்துத் தொழுதுகொண்டிருந்தார்கள். அவர்கள் இங்ஙனம் சிவயோகஞ் செய்துகொண்டிருந்ததனால், கருப்பம் மிகப்பாரமாதலும்; நவசக்திகள் பார்வதி பரமேசுவரரைப் பணிந்து "அடியேங்கள் இந்நாள்காறும் இக்கருப்பத்தினால் வருந்தினேம்; இனித்தாங்கலாற்றேம் திருவுளமிரங்கியருளல்வேண்டும்" என்று குறையிரந்தனர்கள். தழல்விழிப்பரமன் தண்ணருள்புரிந்து மலைமகளது மலர்முகத்தை நோக்கி, "ஏலவார் குழலியே! நின் காற்சிலம்பினின்றும் உதித்த இந்நவசக்திகள், நின் சாபங்காரணமாக நெடுங்காலம் கருப்பத்தைச் சுமந்து மிகுந்த துன்புற்றார்கள்; இனிப் புதல்வரைப்பெறத் திருவருள் செய்க" என்று பணித்தருளினார். அம்பிகை "நன்று" என்று அதற்கிசைந்து, புன்முறுவல்பூத்து நவசக்திகளை நோக்கி, "இனி நீங்கள் ஆற்றலிற் சிறந்த அரும்புதல்வர்களைப் பெறக்கடவீர்கள்" என்று திருவாய்மலர்ந்தருள, அவர்கள் வயிற்றினுள் யோகஞ் செய்துகொண்டிருக்கும் வீரர்கள் அதனையறிந்து, யோகத்தைவிடுத்து மனமகிழ்ந்து, கறைமிடற்றண்ணலாரது கருணையைநினைந்து தொழுது, பிறக்கும்பொருட்டு நினைந்தார்கள்.

நவசக்திகள் ஞானாம்பிகையின் கருணைநிறைந்த திருமொழியைக்கேட்டதும், கவலை நீங்கி, அம்மையாரையும் அரனாரையும் வணங்கி வாழ்த்தி, விடைபெற்றுக்கொண்டு அங்குநின்று நீங்கி, திரும்பிச்சென்று புதல்வரைப்பெற்றார்கள். மாணிக்கவல்லியிடத்துத் திரயிக்க வீரவாகுதேவரும், மௌத்திகவல்லியிடத்து வீரகேசரியும், புட்பராகவல்லியிடத்து வீரமகேந்திரரும், கோமேதகவல்லியிடத்து வீரமகேச்சுரரும், வைடூரியவல்லியிடத்து வீரபுரந்தரரும், வைரவல்லியிடத்து வீரராக்கதரும், மரகதவல்லியிடத்து வீரமார்த்தாண்டரும், பவளவல்லியிடத்து வீராந்தகரும், இந்திரநீலவல்லியிடத்து வீரதீரரும் அவதரித்தார்கள். இந்த வீரர்கள் ஒன்பதின்மரும், சிவபெருமானுடைய திருவருளினாலே, தங்கள் தங்கள் அன்னையர்களது நிறத்தையுடையவர்களாய், பொன்னுடையுடுத்தவர்களாய், பலகாலம் வளர்ந்த உறுப்புகளோடும், நவசக்திகளுடைய உந்தியினின்றும் நான்முகக் கடவுளைப்போல் உதித்தார்கள். இவ்வண்ணம் உதித்த வீரர்கள் சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கி எழுந்தனர், சிவநாதர் அம்பிகையை நோக்கி, "புவனேஸ்வரி! மைந்தர்களாகிய இவர்கள் மிகுந்த அறிவுடையவர்கள், ஆற்றலுடையவர்கள்; மானமாகிய அருங்கலமுடையவர்கள், இவர்கள் புதியர்களல்ல; நந்திகணத்தவர்கள்" என்று சொல்லியருளினார். தேவியார் அதுகேட்டு அம்மைந்தர்களுக்குத் திருவருள்புரிந்தார். சிவபெருமான் அவர்கள் எல்லாருக்கும் தனித்தனி வாள்கொடுத்து, இலக்க மைந்தர்களோடு நீங்களுங்கூடி, உங்களுக்குத் தலைவனாகிய அறுமுகக்கடவுளை நீங்காது அவன் பணித்த தொண்டுகளைச் செய்துகொண்டிருக்கக் கடவீர்கள்" என்று அருளிச்செய்ய அவர்களும் அதற்கிசைந்து வணங்கினார்கள். இவ்வொன்பது வீரர்களும் இலக்க வீரர்களோடு கலந்து எம்பெருமானுடைய திருக்கோயிலை அகலாது, அங்கிருந்தார்கள். சத்திகளொன்பதின்மரும் உமாதேவியாரை நீங்காது, அவர் பணித்த தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தார்கள்.

(தொடரும்.)

ஓம் குஹாய நம:

# கற்பு

(217-ம் பக்கத் தொடர்ச்சி)

கற்புடை மனைவியால் கணவனுக்கு ஆயுள், செல்வம், புகழ், அழகு, வெற்றி, இன்பம், கல்வி முதலியவைகள் தானே வந்தடையும்.

பற்பல நெறிகளும் பயிலு நாட்களா
லற்பய மடைதலுந் தேசு நாடொறும்
பொற்புடை வெற்றியும் புகழு மின்பமுங்
கற்புடை மனைவியாற் கணவற் கெய்துமே,

—மகாபாரதம்.

இதற்கு எடுத்துக்காட்டாக இன்றும் என்றும் எங்கும் நின்று நிலவும் புண்ணிய சரித்திரத்தை விளக்குதும்.

## சாவித்திரி.

சீர்வளம் நிறைந்த மத்திரதேசத்தில் உத்தமகுணம் பொருந்திய அச்சவபதி என்ற ஓர் அரசன் இருந்தான். அவன் அறநெறி வழுவாதவன்; விளையாட்டிற்கும் பொய் சொல்லாதவன்; தருமசீலன்; தெய்வபக்தியுள்ளவன்; போரிற் புறங்காட்டாதவன்; இந்திரியங்களை வென்றவன்; நாட்டு ஜனங்களுக்கும் நகர ஜனங்களுக்கும் பிரியமானவன்; எல்லாவுயிர்களுக்கும் இதத்தைச் செய்பவன்; பொறுமையுள்ளவன். இத்தகைய மன்னன் குழந்தைகளில்லாமல் வருந்தினான். வயது தளர்ந்தவனாதலால் புதல்வனை விரும்பி மிகவும் மனம் வருந்தி கடுமையான நியமத்தை மேற்கொண்டான். பகலை எட்டாகப் பகுத்து அதன் ஆறாவது காலத்தில் குறைந்த உணவையுண்டு கொண்டும், பிரமசரிய விரதமுடனும், மனத்தையடக்கியும், சாவித்திரி மந்திரத்தால் லக்ஷம் ஆகுதி செய்துகொண்டிருந்தான். இந்த நியமத்துடன் பதினெட்டு ஆண்டுகள் இருந்தான். பதினெட்டாவது ஆண்டு நிறைந்தவுடன் சாவித்திரிதேவி உள்ளமகிழ்ந்து, அவ்வரசன் முன் தோன்றி "வேந்தே! உன்னுடைய பரிசுத்தமான பிரமசரியத்

தாலும், அடக்கத்தாலும், நியமத்தாலும், பக்தியினாலும் எல்லாவிதத்தாலும் உன் விஷயத்தில் மகிழ்ச்சியுள்ளவளாக இருக்கிறேன்; அச்சுவபதியே! விரும்பிய வரனைப் பெற்றுக்கொள்வாயாக" என்றனள்.

அச்சுவபதி, "வரத்தைக்கொடுப்பவளே! தருமத்தை அடைய வேண்டுமென்கிற விருப்பத்தால் என்னால் குழந்தை உண்டாவதற்காக இந்தக்காரியஞ் செய்யப்பட்டது தேவி! குலத்தை வளர்ப்பவர்களான அநேக புத்திரர்கள் எனக்கு உண்டாகவேண்டும். பாக்கியங்களில் புத்திரபாக்கியஞ் சிறந்ததென்பது ஆன்றோர்களின் கொள்கை. என்னிடத்தில் நீ அன்புடையவளாக இருந்தால் இந்த வரத்தை நான் விரும்புகிறேன்" என்று சொன்னான். சாவித்திரிதேவி, "அரசனே! உன்னுடைய எண்ணத்தை முன்னமே அறிந்து நளினமிசை வைகும் நான்முககடவுள் உனக்குப் புத்திரனைத் தருவதற்காக உரைக்கப் பட்டிருக்கிறார். நல்ல ஒளியுள்ள ஒரு பெண்குழந்தை உனக்குப் பிறக்கும்" என்று அருள்புரிந்து மறைந்தனள். இறைவன் தனது நகரத்திற்குச் சென்றான்.

மனுநெறி தவறாத அம்மன்னன் குடிகளைத் தருமத்தால் காப்பாற்றிக்கொண்டு அரசுசெய்து வந்தான். சிலநாள்களுக்குப்பின் அவ்வரசனுடைய மூத்தமனைவி கருவடைந்தனள். மனுவின் புதல்வியான அந்த உத்தமியின் கருப்பமானது வளர்பிறை மதிபோல் வளர்ந்தது மகப்பெறுங்காலம் வந்தவுடன் தாமரை மலர்போன்ற கண்களுள்ள ஒரு பெண்மகவைப் பெற்றாள். மன்னன் மகவைக் கண்டு மகிழ்ந்து சாவித்திரி தேவியின் திருவருளால் பிறந்ததனால் அக்குழந்தைக்கு சாவித்திரி என்று பெயர் சூட்டினன் அந்தணர்களும் ஆன்றோர்களும் அக்குழந்தையை அன்புடன் ஆசீர்வதித்தார்கள். எல்லா நலன்களும் அமைந்துள்ள அக்கன்னிகை இலக்குமி தேவியே உருவெடுத்துவந்ததுபோல் வளர்ந்து வந்தாள், கல்வி கேள்விகளிற் சிறந்தவளானாள்; மங்கைப்பருவத்தை யடைந்தாள்; அழகிய இடையையுள்ளவளும், குளிர்ந்த பார்வையுள்ளவளும், பொற்பாவை போன்றவளுமாகிய அந்தப் பெண்ணை ஜனங்கள் பார்த்து, "தேவகன்னியே இந்தப் பெண் வடிவத்துடன் வந்திருக்கிறாள்" என்று கொண்டாடினார்கள். காந்திமிக்க அக்கட்டழகியை அவள் காந்திக்குத் தாம் இணையில்லாமையால் ஒருவனாவது மனைவியாகவரிக்க

யிலே அப்பெண்மணி பருவகாலத்தில் நீராடி உபவாசமிருந்து தேவதையை வந்தனம்பண்ணி விதிப்படி அக்கினியில் ஓமஞ்செய்து மறையவர்களை மந்திரங்களைச் சொல்லச்செய்தாள். பிறகு தேவதைக்குச் சூட்டப்பட்ட மலர்களையெடுத்துக்கொண்டு பிதாவினிடம் வந்து வணங்கி, அந்த மலர்களை பிதாவிடம் தந்து கரங்களைக் குவித்து அருகில் நின்றாள்.

சீதேவியைப் போன்றவளும் யௌவனப்பருவத்தி லிருப்பவளும் ஆகிய அந்தத் தன்னுடைய மகளை வரன்களால் வரிக்கப்படாமலிருத்தலை எண்ணி, அரசன் மனம் வருந்தி, "மகளே! இது உனக்குக் கன்னிகாதான காலம்; ஒருவரும் என்னிடத்தில் வந்து கேட்கவில்லை; உனக்குத் தகுந்த கணவனை நீயே வரிப்பாயாக, உன்னால் விரும்பப்பட்டவனை எனக்குத் தெரிவித்தால் நான் நன்கு ஆராய்ந்து கொடுப்பேன். தக்கசமயத்தில் தக்க வரனுக்குப் பெண்ணைக்கொடுக்காத பிதா இகழப்படத்தக்கவன். ருதுகாலத்தில் மனைவியை யடையாதபதியும் இகழத்தக்கவன்; பிதா பரலோகம்போனபிறகு தாயைக் காப்பாற்றாத புத்திரனும், இகழத்தக்கவன், குழந்தாய்! கணவனைத் தேடுவதில் நீ விரைவுசெய்; தேவதைகள் என்னை இகழாமலிருக்குமாறு செய்' என்றனன். மந்திரிகளைப்பார்த்து பிரயாணத்திற்கு வேண்டிய வாகனாதி முதியவர்களும் உடன்செல்லவேண்டும்" என்றான். பெரிய மனமுள்ள அந்த சாவித்திரி நாணத்துடன் பிதாவை வணங்கி அவனுடைய சொல்லை நன்கு அறிந்து ஆலோசியாமல் புறப்பட்டாள். பொன்னாலாகிய தேரிலூர்ந்து வயதுமுதிர்ந்த மந்திரிகளால் சூழப்பட்டு ராஜரிஷிகளுடைய அழகிய தவவனங்களை அடைந்தாள். அங்கே பூசிக்கத் தக்கவர்களான முதியவர்களை அடிவணங்கிக் கொண்டு வரிசையாக எல்லா வனங்களையுமே அடைந்தாள்; தருமத்தைச் செய்துகொண்டே சென்றாள்.

சாவித்திரி இவ்வாறு எல்லாத்தீர்த்தங்களையும் எல்லா ஆச்சிரமங்களையும் அடைந்து மந்திரிகளோடு பிதாவின் வீட்டுக்குத் திரும்பிவந்தாள். மத்திரதேசாதிபதியாகிய அரசன் நாரதருடன் பேசிக்கொண்டிருந்தான். அந்த சமயத்தில் அவ்விடத்தில் வந்த சாவித்திரி இருவரையும் தலைவணங்கி நின்றாள். நாரதர் "அரசனே! உன்னுடைய இந்தப்பெண் எங்கே போயிருந்தாள்? எவ்விடத்திலிருந்துவந்தாள்? பருவமடைந்த இந்தப்பெண்ணை ஏன் தகுந்த வரனுக்குக்கொடாமலிருக்கின்றாய்? என்று வினவ; அச்சுவபதி "மாதவரே! இந்தக்

காரியத்திற்காகவே அனுப்பப்பட்டிருந்த இந்தப்பெண் இப்பொழுது
தான் வந்தாள், இவளால் வரிக்கப்பட்ட கணவனை இவளிடமிருந்து
கேளும்" என்று கூறி விரிவாகக் கூறுமாறு மகளுக்குக் கட்டளை
யிட்டான்.

சாவித்திரி "சாளுவ தேசத்தில் தருமநெறி தவறாத த்யுமத்
சேனன் என்னும் அரசர் ஒருவர் அரசாட்சி செய்தார்; அவர் பிறகு
குருடரானார்; அறிவிற் சிறந்த அவர் கண்களையிழந்து சிறுவரான
ஒரு புத்திரருடனிருந்தமையால், இந்தச்சமயத்தில் அவருடைய
ராஜ்யமானது அருகிலிருக்கும் பழைய பகைவரால் கவரப்பட்டது.
அவர் சிறு குழந்தையுடனும் மனைவியுடனும் கானகஞ் சென்றார்.
பெரிய காட்டையடைந்த அவர் கடுமையான விரதத்துடன் தவம்
புரிந்தார். அவருடைய புத்திரரும் தபோவனத்தில் வளர்கின்றவரு
மான சத்தியவான் என்கிற உத்தமரை எனக்கு ஒத்த கணவனென்று
மனத்தினால் வரித்தேன்" என்றனள். நாரதர் "அரசனே!
அந்தோ! சாவித்திரியினால் பெரிய தவறுசெய்யப்பட்டது. சத்திய
வான் குணத்திற் சிறந்தவனானபடியால் அவனை இவள் அறியாமை
யால் வரித்தாள். அந்த சத்தியவானுடைய பிதா சத்தியத்தைச்
சொல்லுகிறான்; மாதாவும் சத்தியத்தைச் சொல்லுகிறாள்; அதனால்
அந்தணர்கள் அவனுக்குச் சத்தியவான் என்று பெயரிட்டார்கள்;
அந்தச் சிறுவனுக்குக் குதிரைகளிடத்தில் பிரியமதிகம்; அவன் மண்
ணால் குதிரைகளைச் செய்கிறான்; சித்திரத்திலும் குதிரைகளை எழுது
கிறான்; அதனால் அவனை "சித்திராசுவன்" என்றுஞ் சொல்லுகிறார்
கள்" என்று கூற; அரசன் "முனிநாதா! இப்பொழுது அந்த அரச
குமாரன் ஒளியுள்ளவனாக இருக்கின்றானா? அறிவிற் சிறந்தவனா?
பொறுமையுள்ளவனா? சூரனா? சத்தியவாதியா? தாயதந்தைகளிடத்
தில் அன்புடையவனா?" என்று வினவினான். நாரதர் "சத்தியவான்
சூரியனைப்போன்ற ஒளியுள்ளவன்; அறிவில் வியாழபகவானுக்கு ஒப்
பானவன்; மகேந்திரனைப் போன்ற வீரன்; பூமியைப் போன்ற
பொறுமையுள்ளவன்" என்று சொன்னார். அரசன் "அவ்வரசகுமா
ரன் கொடையாளியா? ஆன்றோர்களுக்கு நன்மை செய்பவனா? சத்
தியவாக்கியமுள்ளவனா? இனிய தோற்றமுள்ளவனா? சிறந்த அழ
குள்ளவனா? பெருந்தன்மையுள்ளவனா?" என்று வினவினான். நாரதர்
"அந்த சாளுவமன்னன் மகன் தனது சக்திக்குத்தக்கபடி கொடுப்ப

தில் சங்கிருதிமகனாகிய ரந்திதேவனுக்கு நிகரானவன்; உசீநரகுமாரனாகிய சிபியைப்போல ஆன்றோர்களுக்கு நலத்தைச் செய்பவன்; அரிச்சந்திரனைப்போன்ற சத்தியவாக்குள்ளவன்; யயாதியைப்போல பெருந்தன்மையுள்ளவன்; சந்திரனைப்போன்ற இனியதோற்றமுள்ளவன்; அசுவனீதேவர்களைப்போல உருவத்தையுடையவன்; பேசுந்திறமையுள்ளவன்; மனத்தை அடக்கினவன்; மகாசூரன்; நல்ல நட்புடையவன். குணமுள்ளவற்றிலும் குற்றத்தை ஏற்றுச் சொல்லுவதாகிய அசூயை இல்லாதவன்; தியகாரியங்களில் நாணமுடையவன்; தைரியம் அவனிடத்திலேயே நிலைபெற்றிருக்கிறது; உள்ளும்புறமும் ஒத்தவன். சுருக்கமாக அவனிடத்தில் எல்லா நற்குணங்களும் குடிகொண்டிருக்கின்றன" என்றார்.

அசுவபதி "பகவானே! அந்த சத்தியவானைத் தேவரீர் எல்லாக்குணங்களோடுங் கூடியவனென்று சொல்லுகிறீர், அவனிடத்தில் ஏதாவது குறைகள் உண்டாயின் அவைகளையுஞ் சொல்லவீராக" என்று வினவ; நாரதர் "ஒரே ஒரு குறை அவனது எல்லாக்குணங்களையும் மீறிநிற்கிறது; அந்தக்குறை முயற்சியால நீக்கமுடியாதது; அந்த ஒரு குறையைத்தவிர வேறு குறையில்லை; அந்த சத்தியவான் இன்றுமுதல் ஓராண்டுடன் ஆயுள்முடிந்தவனாகத் தேகத்தை இழக்கப்போகிறான்" என்று சொன்னார். அரசன் "சாவித்திரி! வேறு வரனை வரிப்பாயாக! கல்யாணி! நீ வரித்த சத்தியவான் ஒரு வருடத்தில் உயிர் துறப்பான் என்று நாரதர் சொல்லுகிறார், வேறு கணவனைத் தேடு" என்றான்.

சாவித்திரி "அப்பா! தந்தைமுதலியோரால் கிடைத்தபொருளை சகோதரர்கள் பங்கிட்டுக்கொள்வது ஒரேதடவை, கன்னிகை தந்தைமுதலியோரால் கொடுக்கப்படுவது ஒரேதடவை; பசுமுதலியவற்றைத் தானஞ்செய்வதும் ஒரேதடவை இந்த மூன்றும் ஒவ்வொரு தடவையே என்கிறார்கள் நீண்ட ஆயுளுள்ளவனோ குறைந்த ஆயுளுள்ளவனோ குணமுள்ளவனோ குணமில்லாதவனோ என்னால் கணவன் ஒரு தடவை வரிக்கப்பட்டுவிட்டான்; நான் இரண்டாமவனை வரிக்கமாட்டேன். மனத்தினால் நிச்சயஞ்செய்த பிறகு வாக்கினால் சொல்லப்படுகிறது. பிறகு சொன்னவண்ணம் அது செய்கையால் செய்யப்படுகிறது; ஆகையால் எனக்கு மனமானது பிரமாணம்" என்று சொன்னாள். நாரதர் "மகிபால! நின் புதல்வி திடசித்தமுடையவள்; எவ்விதத்திலும் இவளைத் திருப்பமுடியாது; சத்தியவான் குணத்திற்

சிறந்தவன்; அவனுக்கு இவளை தடைசெய்யாது கொடுப்பதே நலம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்றார். மன்னன் "முனிநாதா! தேவரீர் எனக்குக் குருநாதரல்லவா? இவளுடைய நிச்சயத்தை மாற்றமுடியாது, உமது மொழிப்படியே செய்கிறேன்" என்றான். நாரதர் "உனது மகளை தடைசெய்யாது சத்தியவானுக்குக்கொடுப்பாயாக, உங்கள் அனைவருக்கும் மங்களம் உண்டாகுக" என்றுகூறி ஆகாயவழியே சென்றார். அரசன் விவாகத்திற்கு வேண்டியவற்றைச் சித்தஞ்செய்தான்.

அச்சுவபதி, அறிவிற் சிறந்த அந்தணாளரையும் புரோகிதர்களையும் மந்திரிகளையும் அழைத்துக்கொண்டு நல்ல நாளில் கன்னிகையுடன் புறப்பட்டான். பரிசுத்தமான வனத்திலுள்ள தியுமத்சேனனுடைய ஆச்சிரமத்தையடைந்து கால் நடையாக நடந்துபோய் அந்த ஆச்சிரமத்தில் தருப்பையாசனத்திலிருப்பவனும், கண்ணில்லாதவனும் குணசீலனுமாகிய தியுமத்சேனனைக் கண்டான். அச்சுவபதி அந்த ராஜரிஷியைத் தக்கபடி பூசித்து "நான் அச்சுவபதி" என்றான். தருமங்களையறிந்தவனாகிய தியுமத்சேனன் அச்சுவபதிக்கு அருக்கியத்தையும் ஆசனத்தையும் பழங்களையுந்தந்து "வந்த காரணம் யாது?" என்று வினவினான். அச்சுவபதி "ராஜரிஷியே! அழகியவளான சாவித்திரி என்கிற பெண் என்னுடைய பெண்; இதோ இருக்கிறாள்; நீர் இந்தப்பெண்ணை உமக்கு மருமகளாக நமக்குரிய முறைப்படி என்னிடத்தினின்று பெற்றுக்கொள்ளும்" என்றான்.

தியுமத்சேனன் "பார்த்திபரே! நாங்கள் ராஜ்யத்தினின்று நழுவினவர்களும் வனவாசமுள்ளவர்களும் நியமமுள்ளவர்களும், தவஞ்செய்பவர்களுமாகத் தருமத்தை அனுஷ்டிக்கிறோம். வனவாசத்தில் சுகமே கிடையாது; துன்பத்தையறியாத நின்மகள் இந்த வனவாசத் துன்பத்தை எவ்வாறு சகிப்பாள்?" என்றான். அச்சுவபதி "ஐய! சுகதுக்கம் மாறிமாறிவரும்; சுகமுந்துக்கமும் மனத்தைப்பொறுத்திருக்கின்றன; நல்ல நிச்சயத்துடன் உம்மிடம் வந்திருக்கிறோம். சிநேகத்தால் வணங்குகிற என் விருப்பத்தை நீர் கெடுக்கப்படாது, எனக்கு நீர் சம்பந்தத்திற்குத் தகுந்தவர்; உமக்கு நான் ஒத்தவன்; என்னுடைய மகளை சத்தியவானுக்கு மனைவியும் உமக்கு மருமகளுமாக ஏற்றுக்கொள்ளும்" என்று வேண்டினான்.

உ

ஸ்ரீவள்ளிநாயகன் துணை

# ஜீவகாருண்ய ஒழுக்கம்

A. திருஞானம், சமையபுரம்.

கடவுள் சகல உலகங்களையும் அதில் தோன்றும் வஸ்துக்களையும் படைத்தார். அவற்றில் சில வஸ்துக்கள் உணர்ச்சியற்று ஜடங்களாகவும் மற்றும் சில வஸ்துக்கள் அறிவுடன்கூடி ஜீவர்களாகவும் உள்ளன. ஜீவன் என்பது கடவுளின் சக்தியாம்சமாகும், அதுவே ஆன்மா அல்லது உயிர் எனவும்படும். உயிர் தோன்றி விளங்குவதற்கு பூதங்களால் ஆகிய உடல் இருப்பிடமாய் உள்ளது. ஜீவன் கடவுள் விளக்கம் ஆகையால், அது அழிவதில்லை. பூதகாரியமான

---

தியுமத்சேனன் "முந்தியே உயர்வுடைய சம்பந்தத்தை நான் விரும்பியிருந்தேன், நான் இராஜ்யத்தை இழந்திருப்பதால் ஆலோசித்தேன்; நான் முன் விரும்பிய இந்த எண்ணம் இப்போது நிறைவேறட்டும்; சாவித்திரி எனக்கு மருமகளாகட்டும்" என்றான்.

இருமன்னர்களும் சேர்ந்து அங்குள்ள எல்லா முனிவர்களையும் வருவித்து, சாவித்திரிக்கும் சத்தியவானுக்கும் முறைப்படி விவாகத்தை நடத்தினார்கள். மகளுக்குவேண்டிய சீதனங்களை மகிழ்ச்சியுடன் கொடுத்துவிட்டு சம்பந்தியிடம் விடைபெற்று தனது நகர் சென்றான். சத்தியவான் சாவித்திரியை மனைவியாகக்கொண்டு மனமகிழ்ந்தான். மனத்தினால் விரும்பிய அக்கட்டழகனைக் கணவனாகப்பெற்று சாவித்திரியும் மகிழ்ந்தாள். தந்தை சென்றபின் சாவித்திரி ஆபரணங்களைக் கழற்றிவிட்டு மரவுரி யுடுத்திக்கொண்டாள். பணிவிடைகளாலும் குணங்களாலும் நட்பாலும் இந்திரியங்களுடைய அடக்கத்தாலும் வேண்டியவற்றைச் செய்வதாலும் மாமி மாமன் கணவன் இவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தாள். மாமியாரையும் மாமனாரையும் அடக்கத்துடன் இனிய சொல்லுடனும் உணவுகளைத்தந்து உபசரித்துவந்தாள். ஏகாந்த உபசாரத்தாலும் அன்புடன் உபசரிப்பதாலும் கணவனுக்கு மகிழ்ச்சியை விளைவித்தாள்.

(தொடரும்).

தேகம் அழியுந்தன்மையுடையது. தேகம் அழியும்போது அதிலுள்ள ஆன்மா அழியாமல் தான் செய்த ஊழ்வினைகளுக்குத்தக்கபடி வேறு உருவத்துடன் மறுபடியும் ஜீவிக்கின்றது.

இவ்வாறு ஒரு ஜீவன் அடையத்தக்க பிறப்பு பலவகைப்படினும் அவை தேவர், நரர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்ற ஏழு வகைகளில் அடங்கும். அவை எல்லாம் மாயையில் வெளிப்பட்டு பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம் என்னும் விகற்பங்களால் இன்பதுன்பங்களை அனுபவிக்கின்றன. ஜீவன்கள் எல்லாம் ஒரே கடவுளின் சிருஷ்டி. ஆதலால் ஒரு (ஜீவன்) வருக்கொருவர் சகோதரர் ஆகிறார். ஆதலால் ஒரு ஜீவன் துன்பப்படுவதைக் காணும்போதும், துன்பப்படும் என்று அறியும்போதும் மற்றவர்கள் மனம் இரங்குவது ஆன்ம உரிமை ஆகும். அதற்குத்தான் ஜீவகாருண்யம் என்று பெயர். பரஜீவர்களது துன்பத்தைக்கண்டு மனமிரங்கி அத்துன்பத்தை நீக்கி இன்புறச்செய்வது ஜீவகாருண்ய ஒழுக்கம் எனப்படும்.

ஜீவர்களுக்கு உண்டாகும் பலவித துன்பங்களினும் பசியால் வரும் துன்பமே மிகவுங்கொடியது. தாகம், பிணி, இச்சைமுதலியவற்றைச் சகித்துக்கொண்டு ஜீவர்கள் உயிர்வாழலாம் அல்லது வேறு உபாயங்களால் நிவர்த்திசெய்துகொள்ளலாம். அப்படிச்செய்வதால் உயிர்ச்சேதம் உண்டாவதில்லை. ஆனால் பசிநோயை ஆகாரம் இன்றி வேறு உபாயங்களால் நிவர்த்திசெய்யமுடியாது. பசியைப்பொறுத்துக்கொண்டு சும்மா இருக்கவும் இயலாது. அப்படியிருந்தால் ஜீவன்கள் உயிர் நீங்குவது நிச்சயம்; ஆகையால் எளியவர்களுக்குப் பசியாற்றுவிப்பதே மேலான ஜீவகாருண்யம்; அது பரஜீவகாருண்யம் எனப்படும். உடுக்க உடையும், இருக்க இடமும், உதவியாகப் பொருளும் இல்லாமையால் வருந்தும் ஏழைகளது குறைகளைத் தீர்ப்பது அபரஜீவகாருண்யமாகும். ஆகையால் ஜீவர்களது பசிப்பிணியை நீக்குவதுதான் ஜீவகாருண்யத்திற்கு முக்கிய லக்ஷியமாகும். இதைக் கையாண்டுவந்தால் ஏழைகளின் மற்ற குறைகளையும் நீக்கத்தக்க உபகாரசக்தி தானே உண்டாகும்.

ஜீவகாருண்யம் உள்ளவர் ஏழைகளுக்குப் பசியாற்றுவிக்கும்போது அவரது ஜாதி, மதம், ஒழுக்கம், செய்கைமுதலியவற்றில் வேற்றுமை பாராட்டாமல் எல்லோரையும் சமமாகப் பாவித்தல்

வேண்டும். தமது விதிவசத்தால் கூன், குருடு, செவிடு முதலான அங்க ஈனர்களிடத்தில் விசேஷ அன்புகொண்டு அவர்களது பசியை முதலில் நீக்கவேண்டும். அற்ப சக்தியுடைய சம்சாரிகள்கூட தமது மாதா பிதா மனைவி மக்களை காப்பாற்றுவதோடு தங்கள் செலவை சிறிது குறைத்துக்கொண்டாகிலும் ஏழைகளுக்கு உதவிபுரியவேண்டும். தக்க இயல்புள்ள சம்சாரிகள் தமது குடும்பத்தையும் பந்து மித்திரர்களையும் அடியார் அயலார்களையும் உணவளித்து ரக்ஷித்தல் வேண்டும். கலியாணம் முதலிய சடங்குகளுக்காக ஆடல், பாடல் அலங்காரம், ஊர்கோலம் முதலான ஆடம்பரங்களில் தங்கள் பொருளை வீணசெலவு செய்யும் செல்வர்கள் அப்பொருளைக்கொண்டு ஏழைகளுக்குப் பசிதீர்த்து இன்பம் அளிக்கவேண்டும். அவ்வாறு பசித்தவர்க்கு உணவு கொடுப்பதில் தாவரங்களில் காய்கறி, கிழங்கு வித்துக்களாலாகிய சுத்த ஆகாரத்தையே வழங்கவேண்டும். ஏனெனில் அவற்றைக் கிரகிக்கும்போது அத்தாவரங்களுக்கு உபத்திரவமாவது உயிர்ச்சேதமாவது உண்டாவதில்லை. மாமிச ஆகாரம் தாமச குணத்தை விருத்திசெய்வதினாலும் அதைச் சம்பாதிப்பதில் உயிர்க்கொலை ஏற்படுவதினாலும் அதை உபயோகிப்பது பாவச்செயல்ஆகும். ஒரு ஜீவனைக்கொன்று மற்றொரு ஜீவனுக்கு பசிநீக்குவதில் புண்ணியமுமில்லை; தெய்வ சம்மதமுமில்லை.

ஜீவகாருண்யம் ஒழுக்கத்தால் அடையும்பலன்கள் அளவற்றன. பசிநோயால் வருந்திச் சோர்ந்துவரும் ஏழைகளுக்கு அன்னம் கொடுத்து திருப்திசெய்தால் தீராத கரும ரோகங்களான சூலை குன்மம், குஷ்டம் முதலியவையும் தீர்ந்துபோகும், சந்ததியில்லாமல் ஏங்கிநிற்கும் சீமான்கள் ஏழைகளுக்கு உணவளிக்கும் விரதத்தை அனுஷ்டித்து வந்தால் புத்திரபாக்கியத்தைப் பெறலாம். அற்ப ஆயுளைப்பெற்ற அரிஷ்டர்களும் அன்னதானம் செய்து அதன்பலத்தால் தன் ஆயுளை விருத்திசெய்துகொள்ளலாம். பசிக்குப் போஜனமளிக்கும் புண்ணியவான்களுக்கு காற்று மழையால் கஷ்ட நஷ்டம் வாரா; கொடுநோயால் துன்பம் நேராது; கள்வர் சத்துருக்களிடம் பயம் தோன்றாது; அவர்களுக்கு கல்வி, செல்வம், அறிவு முதலியன மிகுதியும்உண்டாகும்; அவரது தொழில்களில் முயற்சிக்கு அதிகமான லாபம் கிடைக்கும்; அவர் பயிரிடும் நிலங்களில் எதிர்பாராத பலன் உண்டாகும்; அவரிடத்தில் அரசனிடத்தும் நன் மதிப்பு ஏற

ஓம் குஹாய நம

# குரு சிஷ்ய லக்ஷணம்

(225-ம் பக்கத் தொடர்ச்சி)

ப்ரும்ம வைவர்த்த புராணத்தில் பிரம்ம காண்டம் அ 11, சு.18ல்

நசவ்யாதிஸ ஸமச்சந்நோ ந பூஜ்யோ குரோ பர:
நாஸ்திமாத்ருஸமோ-பந்து ர்ந மித்ரம் பிது: பரம்,

வியாதிக்கு ஸமானமான சத்துருவுமில்லை, குருவைவிட பூஜிக்கத் தக்க சிரேஷ்டனொருவனுமில்லை, தாய்க்கு சமானமான பந்துவுமில்லை, தகப்பனுக்கு ஸமானமான நண்பரில்லை என்று கூறுகிறது

---

படும், ஏழைகளின பசியை நீக்கி அவர் முகத்தில் தழைத்துவளரும் திருப்தி இன்பத்தைக்கண்டவர் தாமும் அவ்வின்பத்தை அனுபவிக்கிறார். தருமங்களிற் சிறந்த அன்னதானத்தைச் செய்பவர் யோகிகளுக்குச் சமமாவர்; ஏழைகள் உண்பதைத் தாம் உண்ணுவதாக நினைப்பவர் ஞானிகளை ஒப்பார், ஏழைகளின் திருப்தியாகிய கடவுள் விளக்கத்தைக் கண்டவர் கடவுளைக் கண்டவரே ஆவர். சுருங்கச் சொல்லின ஜீவகாருண்ய ஒழுக்கத்தை கடைபபிடித்து நடப்பவர் மோக்ஷவீட்டை அடைந்து சாஸ்வதமான மோக்ஷ இன்பத்தை அனுபவிப்பார். ஜீவகாருண்யம் மோக்ஷவீட்டைத் திறப்பதற்கு ஓர் திறவுகோல்.

மோக்ஷ சாதனங்களைத் தேடிக்கொள்வதற்காகவே மானிட தேகம ஆன்ம விளக்கமும் அருள் விளக்கமும் உடையதாய் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது. தேகம் நிலையற்றதாகையால் எந்த நிமிஷத்திலும் அழியக்கூடும். அது அழிந்தால் மறுபடியும் இப்பிறவி கிடைப்பது அரிது. ஆகையால் இத் தேகம் அழிவதற்கு முன் மனிதர் யாவரும் ஜீவகாருண்யம் என்னும சாதனத்தைக்கொண்டு முக்தி இன்பத்தைத் தேடிக்கொள்ளக்கடவர். மனிதப்பிறவியால் அடையத் தக்க பெரும் பதவிகளில் மோக்ஷமே அது ஆன்மலாபம் எனப்படும்.

---

ஆகவே சீடனுடைய கரங்களானது எப்பொழுதும் குருநாதனையே பூசிக்கவேண்டும். மனமானது அவருடைய திருநாமத்தையே மனனம் செய்யவேண்டும்; செவியானது அவருடைய கீர்த்தியையே கேழ்க்கவேண்டும்; நயனமானது அவருடைய திருமேனியையே தரிசிக்கவேண்டும்; சரீரமானது அவருக்குப் பணிவிடை செய்வதிலேயே கிடக்கவேண்டும்; வாக்கானது அவருடைய பெருமையையே பேசவேண்டும், தான் செய்யும் நற்கருமங்களெல்லாம் அவரைச் சேர்ந்ததாக எண்ணவேண்டும்; தானறியாமல் செய்யும் குற்றங்களெல்லாம் தன்னைச் சேர்ந்ததாக எண்ணவேண்டும். அமேரிக்காவில் நியூயார்க்கு (New York) என்னும் நகரத்தில் கி. பி. 1896-ம் ௵ ஸ்ரீமத் ஸ்வாமி விவேகாநந்தர் தம் குருநாதனுடைய புகழையே பொருளாகக்கொண்டு "என் குருநாதன்" என்று ஒரு உபந்நியாசம் செய்தார்,

"ஞானங்களையாவது, தருமங்களையாவது, ஒரு வார்த்தையேனும், நான் பிரசங்கம் செய்திருந்தால் அவைகளெல்லாம் என் குருநாதனையே சேர்ந்தது, அப்பிரசங்கங்களிலுள்ள குற்றங்குறைகளெல்லாம் என்னைச் சேர்ந்தது" என்று கூறியிருக்கிறார்.

சீடனுக்கு அவரைத்தவிர பந்துகிடையாது; அவரைவிட அன்னியமானதும்; சிரேஷ்டமானதும் எதுவும் இல்லை. அவரே தேவன், அவரே பந்து, அவரே ஆத்மா, அவரே ஜீவன், குருவே சிரேஷ்டமான தருமம், குருவே சிரேஷ்டமான பதவி, குருவே பிரமமா, குருவே விஷ்ணு, குருவே ஈஸ்வரன், ஆகவே குருவைக்காட்டிலும் இம்மூன்று உலகங்களிலும் சிரேஷ்டன் ஒருவனுமில்லை. ஈஸ்வரனிடத்தில் எத்தன்மையான பக்தி பாராட்டுகிறேமோ அத்தன்மையான பக்தி குருநாதனிடத்தில் எவன் பாராட்டுகிறானோ அவன் பிரம்மத்தை அறிந்தவனாய் பிரம்மமாக ஆகிறானென்பது வேதத்தினுடைய கட்டளை என்று சாட்டியாயநியோபநிஷத்தில்

குருரேவ பரோ தர்மோ குருரேவ பராகதி: யஸ்யதேவே பராபக்திர்யதா தேவே ததா குரௌ, ஸப்ரம்ம வித்பரம் ப்ரேயாதி திவேதானுசாஸனம்

என்று கூறப்படுகிறது.

தெய்வம் அவரே என்பதை கீழ்வரும் ப்ரமாணத்தாலறிக. குருகீதை:

குருஸ்ஸிவோ குருர்தேவோ குருர்பந்து ஸரீரிணம்,
குருராத்மா குருர்ஜீவோ குரோரந்யம் நவித்யதே

என்றும், யோகசிகோபநிஷத்தில

குருர்ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவஸ்ஸநாதந:
குருமோராதிக: சர்ச அநிஷ்டாலோகேஷு விந்யதே திவ்யஞ்நாநோ
பதேஷ்டா-ஸந்தேசச்ச பரோக்ஷவான் ! ப்ருவ்யே அபாநாபக்த்யா
தஸ்மஞ்நாநமயம் ஹபேது' யதாத்ருஷ் நனநவே சோயந்தவேசஸ்தததநு:
புஜ்யோமாஹாமக்த்யா சுவேந் விநயதேசஸ்யோ !

என்றும், திருமந்திரத்தில்

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென்பது குறித்தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே

எனவும் வருவனவற்றால் காண்க.

இவ்விதம் குருகுலவாசம் செவ்வையாகச் செய்யவேண்டும். ஏனெனில் சற்குருவினால் உபதேசிக்கப்பட்டபோதிலும் அசம்பாவனை, சம்சயபாவனை, விபரீதபாவனை என்ற மூன்றுவித பாவனைகளிலும் ஜீவஸ்வரபின்னபேதம். ஜீவாத்மாக்களின் பரஸ்பரபேதம், ஜீவ ஜடங்களின் பேதம், ஈஸ்வரஜடங்களின் பேதம், ஜடங்களின் ஒன்றுக்கொன்று பேதம் என ஐந்துவகையாயுள்ள ப்ரேதைகளினாலும், குருபதேசவாக்கியங்களுடைய லக்ஷியங்களும் மனதுக்கு பிடிபடாததாகையால் நன்றாய குருகுலவாசஞ்செய்து அவருடைய ஆக்ஞையின் படி நடக்கிறதின்மூலமாய் சகலசந்தேகங்களையும் நிவர்த்தியாகிவிடும். பிறகுதான் குருபதேச லக்ஷியத்தில் மனது நிற்கும் இந்திரனானவன் பிரம்மவித்தையை உபதேசிக்கப்பெற்றபோது அதாவது

ஏஷோக்ஷிணி புருஷோத்ருஸ்யதேஏஷ
ஆத்மேதிஹோவாசைதத் அம்ருதமபயமேதத் ப்ரஹ்மேதி
(சாந்தோ—பிரபா—4—கண்டம்—15—வாக—1

ஓ தேவதைகளுக்கு ராஜனான இந்திரனே உன்னுடைய நேத்திரத்தின்மூலமாய் நீயே உன் எதிரே ஆகாசத்தில் பார்க்கிற சாயா புருஷனே ஆத்மா; அதுவே அமிருதமானது; அதுவே அபயமானது; அதுவே பிரம்மம் என்று முதலில் உபதேசம்பெற்றுதான் தனித்துச் சென்று ஏகாந்தமாய் அநுஷ்டித்தும் மனத்திற்கு பிடிபடாமல் குருநாதனிடம் வந்தான். குருநாதனும் பலவிதமாய் வெளிப்படுத்தியும் இந்திரனுக்கு மனதில் படியவில்லை அப்போது குருநாதனானவர் "ஏ இந்திரா! நீ இன்னும் 'குருகுலவாசஞ்செய்து மனதிலுள்ள கல்மிஷங்களெல்லாவற்றையும் நிவர்த்தித்துக்கொண்டுவா" என்றனர்.

இந்திரனானவன் விடாமுயற்சியுடன் குருகுலவாசஞ்செய்து மறுமுறை அவரிடத்தில் சென்றான். அப்பொழுதும் குருநாதனானவர் முதற் சொன்ன வாக்கியத்தையே உபதேசித்தார். அப்பொழுதும் புருகூனுக்கு மனத்திருப்படவில்லை. குரு—மறுபடியும் குருகுலவாசஞ்செய் யென்று அனுப்பிவிட்டார். இவ்விதமாக இந்திரன் விடாமுயற்சி யால் நான்காந்தடவையில் ஸ்வாநுபவத்தை யடைந்தானென்று உப நிடதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் மனதிலுள்ள கல் மிஷங்களெல்லாம் நிவர்த்தியாகும்பரியந்தம் நாம ஞானத்தையடைய மாட்டோம், குருகுலவாசம் செவ்வையாகச் செய்தால்தான் ஞானத் தையடையலாம்.

அவ்விதம் குருகுலவாசத்திலிருந்து ஞானத்தை யடைந்த பெரி யோர்கள் சரித்திரத்தில் ஒன்றை வரைகுவாம்.

பல்வளங்களும் நிறைந்த சோழதேசத்தில் காவிரிநதிக்கரையில் சில பிராமணர்கள் வாழ்ந்துவந்தார்கள். வேதாத்யாயனம் பண்ணி னவரும் தர்மவழியாகச் செல்லுபவருமாகிய ஒரு அந்தணருக்கு முன் செய்த தவப்பயனால் ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு சநந்தனன் என்று பெயரிட்டு வளர்த்துவந்தனர். குழந்தைக்கு செயிர்தீர் அறமும், வாய்மையும், பாரநேசமும் தூய்மைதங்கிய உள்ளமும் நல்லறமும் விளங்கின. எக்காரணத்தினாலும் கொடுஞ் சொற்களை உபயோகப்படுத்தாதவரும், அகங்கார மில்லாதவரும் தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளாதவரும் ஆகிய நற்குணத்தையே பூஷணமாக உடையவருமாகிய சநந்தனரானவர் வளர்மதிபோல் வளர்ந்துவந்தனர். சநந்தனர், செல்வவந்தனர்களையும் தரித்திரர் களையும்பார்த்து மனம் சோகிப்பார். வாடியமலரைப்பார்த்து வாழ்வும் இப்படித்தானே வாடுமென மனம் வாடுவார்; வீடியதழையைக்கண்டு விழிநீருகுப்பார். இறந்து மண்ணாகி மறைந்தவரை எண்ணியெண்ணி ஏங்குவார். நாலால் தவழ்ந்து இரண்டால் நடந்து, மூன்றால் தள்ளாடி, எணியேறி எமலோகம்புகும் இவ்வுயிரை வெறுப்பார். மனைவி மக்கள், நண்பர், தாய்தந்தை, செல்வமென, மினுக்கும் இன்பமெலாம் நாடக மாடி நமனவாயப்படுமென உணர்ந்து, பவசாகரக் கடலைத்தாண்ட வேண்டுமென மனதிலுன்னி வாழ்ந்துவந்தார்.

(தொடரும்.)

உ

ஓம் குஹாயநம:

# திருப்புகழமிர்தம்.



"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| மலர் 2<br>Vol. 2 | ஈஸ்வர ௵ மார்கழி மீ 1உ<br>டிசம்பர்—1937 | இதழ் 9.<br>No. 9. |
|---|---|---|

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

அனிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின தூவித லாவிய சிறடி மடமானா
அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுத்தும் பாவியை ஆவியி டேறிட நெறிபாரா

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டாணவ மானநி மூடனை
விடக்கன் பாய்நுகா பாழனை யோமொழி பகராதே
விகற்பங் கூறிடு மோக விகாரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ

முனைச்சங் கோலிடு நீலம கோததி
அடைத்தஞ் சாதஇ ராவண னீள்பல
முடிக்கன் றோகணை யேவு மிராகவன் மருகோனே
முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி தர்த்தகி கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே

திணைச்செங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வேகணி யாகிய
திறறகந் தாவளி நாயகி காமுறும் எழில் வேலா
சிறக்குந் தாமரை யோடையில மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச்செந் தூாவரு சேவக னேசுரா பெருமாளே.

பதவுரை.

முனை சங்கு ஓலிடு - போருக்குரிய சங்குகள் ஓவென்று ஒலிக்கும், நீல மகா உததி - நீல நிறத்தையுடைய பெரிய சமுத்திரத்தை, அடைத்து - (வானர வீரர்களைக் கொண்டு) அணை புதுக்கி, அஞ்சாத இராவணன் நீளபல முடிக்கு - பகைவர்களுக்குப் பயப்படாத இராவணனது உயர்ந்த மணிமகுடந் தரித்த பல தலைகளையும அறுப்பதற்கு, அன்று ஓர் கணை ஏவும - அந்நாளில் ஒரே ஒரு அம்பினை விடுத்த, இராகவன் - இரகு வம்சத்தி லவதரித்த இராமபிரானது, மருகோனே - மருமகனாக விளங்குபவரே! முளைக்கும் சீத நிலாவொடு - திருப்பாற் கடலிலே தோன்றும குளிர்ந்த பிறைச் சந்திரனையும், அரா - பாமபையும், விரி திரை கங்கா நதி - விசாலமானதும் அலைகளை யுடையதுமாகிய கங்காநதியையும், தாதகி - ஆத்தி மலரையும், கூவிளம் - வில்வத்தையும, முடிக்கும சேகரர் - தரித்துக் கொண்டுள்ள சடாமகுடத்தையுடைய சிவபெருமானது, பேர் அருளால் வரு - பெருங்கருணையால் அவதரித்த, முருகோனே - முருகப் பெருமானே, திணை செம் கானக - திணைப்பயிர் விளையும் செழிப்பாகிய காட்டகத்தில் வாழுகின்ற, வேடுவர் ஆனவர் - வேடுவர்களானவர்கள், திகைத்து அந்தோ என (ஏ - அசை) - புதிதாக முளைத்ததால் "இது எது? என்று" பிரமித்து "ஐயோ! என் செய்வோம்" என்று கூற, கணி ஆகிய - வேங்கை மரமாகி நின்ற, திறல் கந்தா - வலிபொருந்திய கந்தப் பெருமானே! வள்ளி நாயகி காமுறும் - வள்ளி நாயகியார் கண்டு அன்புறும், எழில் வேலா - கட்டழகுடைய வேலாயுதரே! சிறக்கும தாமரை ஓடையில் - மலர்களுக்குள சிறப்புற்றிருக்குந் தாமரை ஓடைகளிலும், மேடையில் - உயர்நத உப்பரிகைகளிலும, நிக்கும் சூல் வளை - நல்ல நிறம் பொருந்திய சினைகொண்ட சங்குகள, பால் மணி வீசிய - பால் போன்ற வெண்ணிறமுடைய முத்துக்களை எறிகின்ற (கடற்கரையிலுள்ள), திருச் செந்தூர் வரு - திருச் செந்திலம் பதியில் அடியார் பொருட்டு எழுந்

தருளி வருகின்ற, சேவகனே - வீரரே!, சுரர் பெருமாளே - தேவர்களால் வணங்கப்படும் பெருமையிற் சிறந்தவரே!, அனிச்சம் - அனிச்ச மலரும், கார் முகடு வீசிட மாசு அறு தூவள் பஞ்சு - பஞ்சடிக்கும் வில்லின்று அடிக்க கடினமாகிய குற்றமுடையவைகள் நீங்கப் பெற்று மெலிய பஞ்சும், ஆனை தடாகம் விடா மட அனத்தின் தூவி - அன்பு மிக்கதான தடாகத்தை விட்டு நீங்காத அழகிய (நடையுடைய) அன்னப் பறவையின் மெலிய இறகும், துலாவிய சிறு அடி - மிகவும் மிருதுவாக விளங்குவதால் கொண்டாடுகின்ற சிறிய பாதங்களையுடைய, மட மாதர் - அழகிய மாதரைப் போன்ற மகளிரது, அருக்கன் போல - சூரியனைப்போல், ஒளி வீசிய - பிரகாசிக்கின்ற, மாமரகத பைம்பூண் அணி - சிறந்த மரகத மணிகள் பதித்த பசுமை நிறம் பொருந்திய ஆபரணங்களை யணிந்துள்ள, வார் முலை மேல - இரவிக்கையோடு கூடிய தனங்களின் மேல், முகம் அழுத்தும் பாவியை - முகத்தையும் பார்வையையும் வைத்து அழுத்திக் களிக்கின்ற பாவியும், ஆவி இடேற்ற நெறி பாரா - ஆன்மாவானது உய்யும் நெறி இன்னதென்று ஆராய்ந்தறியாத, வினை சண்டாளனை - தீய காரியங்களைப் புரியும் சண்டாளனும், வீணனை - வீண காரியங்களைப் புரிவோனும், நீள் நிதி தனைக்கண்டு - பெரிய செல்வமுடைமையைக் கண்டு அதன் பெருக்கத்தை நினைத்து அகங்காரத்தைக் கொண்ட மூழ மூடனும், விடக்கு அன்பாய் நுகர் பழனை - மாமிசத்தை அன்பாக உண்ணுகின்ற பாழனும், ஓர் மொழி பகராதே - ஒப்பற்ற மொழியான தேவரீரது சடக்கர மந்திரத்தை உச்சரிக்காமல், விகற்பம் கூறிடு - சாஸ்திர விரோதமான வார்த்தைகளையே பேசுகின்ற, மோக விகாரனை - மோகவிகாரத்தை யுடையவனும், அறத்தின் பால் ஒழுகாத மூதேவியை - தரும நெறியில் நின்று ஒழுகாத மூதேவியுமாகிய அடியேனை, விளித்து உன் பாதமலர் நீ தர - தேவரீர் கருணையால் அழைத்து தங்களுடைய திருவடி ரட்சையை என் முடிமேல் சூட்ட, நான் அருள் பெறுவேனோ - அடியேன் அந்த அனுக்கிரகத்தைப் பெற மாட்டேனோ?

## பொழிப்புரை.

போருக்குரிய சங்குகள் ஓவென்று ஒலித்துக்கொண்டிருக்கும் நீல நிறம் பொருந்திய பெரிய சமுத்திரத்தில் அணை கட்டி பகைவர்களுக்கு அஞ்சாத இராவணனது மணிமகுடந் தரித்துள்ள பல தலைகளும் அற்றுவிழ ஓரே ஒரு கணையை ஏவிய ரகுவீரராகிய ஸ்ரீராம

பிரானது மருமகராக எழுந்தருளி யிருப்பவரே! பாற்கடலில் தோன்றிய குளிர்ந்த பிறைச் சந்திரனையும, பாம்பையும், விசாலமான தம் அலைகளையுடையதுமாகிய கங்கா நதியையும, ஆத்திமலரையும், வில்வத்தையும் தரித்துக் கொண்டுள்ள சடாமகுடத்தையுடைய சிவ பெருமானது பெருங் கருணையால் (உலகம் உய்யும பொருட்டு) அவ தரித்த முருகப் பெருமானே! தினைபபயிர் விளையும் செழுமையான கானகத்தில் வசிக்கும (நம்பி முதலிய) வேடுவர்கள் (புதிதாகத் தோனறியதால்) "இது எது" எனறு திகைப்புறறு "ஐயோ! இதற்கு என் செய்வோம" என்று கூறுமபடி வேங்கை மரமாகி நின்ற வல்லபமுடைய கந்தமூர்த்தியே! வள்ளி நாயகியார அன் புறும கட்டழகிற் சிறநத வேலாயுதப் பெருமானே! மலர்களுக்குள சிறந்த தாமரை ஓடைகளிலும உபபரிகைகளிலும் நல்ல நிறம் பொருந்திய சினைச்சங்குகள் பால் போன்ற வெண்ணிற முத்துக் களைக் கொழிக்கும் கடற்கரையில் விளங்கும் திருசசெந்தூர் என்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள வீரரே! தேவர்களுக்குள் பெருமை யிற் சிறந்தவரே! (மிகவும் மெல்லியதாகிய) அனிச்சமலரும், பஞ் சடிக்கும் வில்லாலடிக்க கடின பொருளகளாகிய குற்றம் நீங்கிய மெல்லிய பஞ்சும், அன்புடையதான தடாகததை நீங்காத அழகிய அன்னப்பறவையின் மெல்லிய இறகும், தமது மென்மையிலும் மிருதுவாக இருப்பதால் கொண்டாடுகின்ற சிறிய பாதஙகளையுடைய அழகிய மானைப்போன்ற மகளிரது சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற சிறந்த மரகத மணிகளிழைத்த பசுமை நிறம பொருந்திய பொன் னாபரணங்களை யணிந்துளள இரவிக்கையோடு கூடிய தனபாரங் களின்மீது முகத்தையும (பார்வையையும) ஆசைப் பெருக்கத்தால் அழுத்துகினற பாவியும், ஆன்மா ஈடேறுகின்ற நன்னெறியை ஆராய்ந்து பாரக்காது தீயகாரியஙகளைப் புரியும் சண்டாளனும், வீண காரியங்களைப் புரிவோனும், பெரிய செல்வ முடைமையைக் கண்டு அகங்கரிக்கும நிர்மூடனும், மாமிசததை அன்பாக உண்ணுகின்ற பாழனும், தேவரீரது ஒப்பற்ற மொழியாகிய சடக்கர மந்திரத்தை அன்புடன் உச்சரிக்காமல் சாஸ்திர விரோதமான குதர்க்க வார்த் தைகளைப்பேசுகின்ற மோகவிகாரனுமாகிய அடியேனைத் தேவரீர் திரு வருட் பெருக்கமுடையவராதலால் வலிந்து அழைத்து தமது திரு வடியி லணிந்துள்ள பாதுகைகளை என் முடிமீது சூட்ட அடியேன் அந்த அனுக்கிரகத்தைப் பெறுவேனோ?

விரிவுரை

அனிச்சம் :—

அனிச்சமலர் என்பது மிகவும் மென்மையுடைத்து அது மோந்தால் வாடும். அதனை மெல்லியது இடையலின் மென்மையைப்பற்றி தெய்வப் புலவர்

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து

என்றதனால் நன்கு புலனாகின்றது.

இத்தனை மெல்லிய அனிச்சப் பூவைக் காட்டிலும், மெல்லிய பஞ்சு அன்னப்பறவையின் மெல்லிய இறகு இவைகளைக் காட்டிலும் மாதரடி மென்மை யுடைத்து

அனிச்சமு மன்னத்தின் றூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்

—திருக்குறள்.

ஆவி யீடேறிட நெறிபாரா :—

"ஆன்மா ஈடேறும் நெறி எது" என்று ஆராய்ந்து பார்த்தல் அவசியம். அந்நெறி பக்தி நெறியே யாகும். அந்நெறியே சென்றால் பழவினைகள் கெட்டு மலநீக்கமுற்று சிவயதார்த்தனமையை எளிதில் பெறலாம்.

"பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றாபெறுவா ரச்சோவே"

—மணிவாசகனார்.

வினைச் சண்டாளனை :—

சண்டாளர் என்பது ஒரு தனிப்பட்ட குலமன்று; பிறப்பினாலே சண்டாள குலம் என்பது இல்லை; சண்டாளத்துவம் எவரிடத்தில் இருக்கிறதோ அவரெல்லாம் சண்டாளரே. பிறப்பினாலேயே உயர்வு தாழ்வைக்குறித்துப் பேசுவதை அறிஞர் வெறுக்கின்றனர்.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்

—உத்தரவேதம்.

தொழிலின் உயர்வு தாழ்வாலேயே குலமும் உண்டாகிறது. பிராம்மண உடம்பு, க்ஷத்திரியர் உடம்பு, என்பது இல்லையாதலால்

குலம் உடம்பைப்பற்றியதல்ல; பிராமமண உயிர், க்ஷத்திரிய உயிர் எனபதும் இல்லையாதலால் குலம உயிரைபபற்றியதுமல்ல; ஆதலால் தொழிலைப்பற்றியே ஏறபடுகிறது மேறகுலததிற பிறநதான் ஒருவன் இழிதொழிலைப் புரிந்தால் மேற்குலத்தான் எனறு கூறலாமா? சகல ஒழுக்கஙகளுமு பொருந்தியுள்ளவனை இழிகுலததான் என்று கூறலாமா?

> நாஹம் மநுஷ்யோ நசதேவயக்ஷா
> நபராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத்ரா ।
> நபரஹ்மசாரீ நக்ருஹீ வநஸ்தே
> பிக்ஷு நசாஹம் நிஜபோத ரூபம் ॥
>
> —நிர்வாணஷ்டகம.

(இதன் பொருள்) "நான் மனிதனல்ல. தேவனல்ல; யக்ஷனுமல்ல, பிராமமணனலல; க்ஷததிரியனல்ல; வைசியனலல; சூத்திரனல்ல, பிரமசாரியல்ல; கிருகஸ்தனல்ல; வானபரஸ்தனல்ல, சந்நியாசியுமல்ல; ஆகையால் சததிய ஞானாநத சொரூபன நான்".

மேற்போந்த திருபபுகழின கருத்தை நீதிநூலும் வலியுறுத்துமாறு காணக.

> தூஷகச்ச கரியா சூநயோ நிகருஷ்டோ தீர்க கோபந: ।
> சதவார கர்மசண்டாலே ஜாதிசண்டால உத்தம: ॥

பிறரைத் தூஷிப்பவன், நித்தியகருமானுஷ்டானத்தை விட்டவன, அதிக லோபமுளளவன், தீர்க்க கோபமுளளவன், இந் நால்வரும் கர்ம (வினைச) சணடாளாகள்; இவர்களைக் காட்டிலும் ஜாதி சணடாளன் என்பவன் உத்தமன்.

பிரமஞானமுணர்ந்தவன் பிராமணன்; அழகிய தணிந்த சிந்தையுடையவன் அநதணன், வேதமோதுபவன் வேதியன், இந்திரியங்களுடன்போராடி அவற்றை வென்று பொறிபுலன்களை அடக்கியாள்பவன் அரசன்; புண்ணியபாவஙகளை நிறுத்து வாணிபஞ் செய்பவன் வைசியன்; புலன்களுக்கு அடிமைப்பட்டவன் சூத்திரன்; பறைவாத்தியத்தை வாசிப்பவன் பறையன்; புலாலுண்பவன் புலையன்; சண்டாளத்துவமுடையவன் சண்டாளன் எனப் பிரித்துணர்தல் வேண்டும்.

வீணனை:—

கிடைத்தற்கரிய வாழ்நாளை அவமாயைகொண்டு விருதாவாகக் கழிப்பவர் வீணர் எனப்படுவர். நம்முடைய வாழ்நாளில் ஒவ்வொரு

கணமும் மிகவும் விலையுயர்ந்த மாணிக்கத்திற்கு நிகரானது. அதனை வீண் களியாடல்களில் கழித்துவிட்டால் யாக்கையும் அழிகிறது. ஆதலால் நம்முடைய காலங்களைச் சிவநெறியில் கழிக்கவேண்டும்.

நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே அரனாமங்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே.

—திருஞானசம்பந்தர்.

நிதிதனைக்கண்டு ஆணவமான நிர்மூடனை:—

அழிகின்ற செல்வத்தைக்கண்டு அதன் நிலையாமையை யுணராது, செருக்குற்று மூடனாக இருத்தல்.

சிறியரே மதிக்குமிந்தச் செல்வம்வந் துற்றஞான்றே
வறியபுன் செருக்குமூடி வாயுள்ளோரு மூகராவர்
பறியணி செவியுளாரும் பயிறரு செவிடராவர்
குறிபெறு கண்ணுளாருங் குருடராய் முடிவரன்றே

—குசேலோபாக்கியானம்.

விடக்கன்பாய் நுகா பாழனை —

விடக்கு - மாமிசம். மோக்ஷ உலகத்திற்கு முதற்படி ஜீவகாருண்யமேயாம். சகல யாகங்களிலும் செய்யுந் தானமும், சகல தீர்த்தங்களிலுஞ் செய்யும் ஸ்நானமும், சகல தானங்களின் புண்ணியமும் அஹிம்சா தருமத்திற்குச் சமமாகமாட்டாது. அஹிம்சா தருமத்தை அனுசரித்து நடக்கிறவனுடைய தவம் குறைவற்றது. அஹிம்சா தருமத்தை அனுசரித்து நடக்கிறவன் எப்பொழுதும் யக்ஞம் செய்பவனாக எண்ணப்படுகிறான்.

ஸர்வ யஜ்ஞேஷு வா தானம் ஸர்வதீர்த்தேஷு சாலுப்தம்
ஸர்வதான பலம்வாபி நைதத்துல்ய மஹிம்ஸயா |
அஹிம்ஸ்ரஸ்ய தபோ(அ) க்ஷயம்
அஹிம்ஸ்ரோ யஜதே ஸதா ||

—மஹாபாரதம், அனுசாசனிக பர்வம்.

ஓர் மொழி .—

பிரணவமந்திரம் எனவும் பொருள் கொள்ளலாம்.

விளித்துன் பாதுகை நீ தர :—

பாவியும், சண்டாளனும், வீணனும், மூடனும், பாழனும், மோகனும், மூதேவியுமாகிய அடியேனை குற்றம் நோக்கிக் கைவிடா

மல் தேவரீரது திருவருட்பெருக்கால் வலிந்து அழைத்து பாதுகையைச் சென்னிமேற்றந்து திருவருள் புரியவேண்டும்.

திணைச்செங்கானகவேடுவா . . . . . கனியாகிய :—

மூவர் தேவாதிகள் தம்பிரானாகிய முருகப்பெருமான், மாமுனிவன் புணர்மானுதவுந் தனிமானாகிய வள்ளிபிராட்டியாரைத் திருமணஞ்செய்யவான் வேடவடிவங்கொண்டு, அப்பிராட்டியார் காக்குந் தினைவனம்போந்து, வேடர்குலக்கொடியுடன் உரைநிகழ்த்திக்கொண்டிருக்குங்கால், வேடர்கள் சூழ நம்பிராஜன் ஆங்கு வந்தான். அதுகண்டு அறுமுகப்பெருமான பயந்தவரைப்போல வேங்கைமரமாக நின்றார். வேதங்கள் வேர்களும் அடியுமாக, சிவாகமங்கள் நடுப்பாகமும், பலவித கலைகள் கவடுகளுமாக மந்திரவடிவான மரமாயினார்.

ஆங்கது காலே தன்னி லடிமுதன் மறைகளாக
வோங்கிய நடுவணெல்லா முயர்சிவ நூலதாகப்
பாங்கமர் கவடுமற்றும் பல்கலையாகத் தானேர்
வேங்கையி னுருவமாகி வேற்படை வீரனின்றான்

—கந்தபுராணம்.

பெண்களை நேசிப்பவன் எத்துணை வலியுடையோனாயினும் மரம்போல் அசைவற்றுச் செயலற்று நிற்பான் என்பது அதனுடைய தத்துவம்

தறமறவர் கோடியடிகள் கூசாது போய்வருட
காடுபுலி திரிகடியவாரான கானிலுமிதே
தளிர்கனியி னிளமரமதே யாகிநீடியுயர் குன்றுலாவி

—(உறவினமுறை) திருப்புகழ்.

## கருத்துரை.

சேதுபந்தனம் புரிந்து இராவண வதஞ்செய்த இரகுவீரரது மருகரே! மதி, நதி, பாம்பு, ஆத்தி, வில்வம் இவைகளை முடிக்குஞ் சிவமூர்த்தியின் புதல்வரே! வேடுவராகிய வேங்கைமரமாகிய கந்தப்பெருமானே! வள்ளிநாயகி அன்புகொள்ளும் வேலாயுதரே! செந்திலம்பதியில் வாழும் பெருமாளே! மாதராசையால் மயங்கும் பாவியும், வினைச்சண்டாளனும், செல்வச்செருக்கு மூடிய மூடனும், புலாலுண்ணும் பாழனும், மோகவிகாரனும், அறநெறியில் ஒழுகாத மூதேவியுமாகிய அடியேனை அழைத்து தமது பாதுகையைத்தர அடியேன் அருள்பெறுவேனோ?

உ

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(239-ம் பக்கத் தொடர்ச்சி.)

अहं सर्वदा दुःख भारावसन्नो
भवान्दीनबन्धु स्त्वदन्यं नयाचे ।
भवद् भक्तिरोधं सदाक्लुप्त बाधम्
ममाधिं द्रुतं नाशयोमासुतत्वम् ॥

(24) அஹம் ஸர்வதா து:க பாராவ ஸன்னோ
பவான் தீனபந்து ஸ்த்வதன்யம் நயாசே ।
பவத் பக்தி ரோதம் ஸதா க்லுப்த பாதம
மமாதிம் த்ருதம் நாசயோமா ஸுத! த்வம் ॥

## பதவுரை.

ஹே உமாஸுத! - ஓ உமாதேவியின் புத்திரரே!
அஹம் - நான்,
ஸர்வதா து:கபாராவஸன்ன: - துக்கபாரத்தினால் தளர்வுற்றவன்,
பவான் தீனபந்து: - தேவரீரோ தீனர்களுக்குப் பந்துவாக இருக்கிறீர்,
த்வதன்யம் நயாசே - தேவரீரைவிட்டுப் பின் ஒருவரை நான் வேண்டேன்;
அத: - ஆகையினால்,
பவத் பக்திரோதம் - தேவரீரிடத்தில் பக்தியைக் கெடுக்கிறதும்,
ஸதாக்லுப்தபாதம் - எப்போதும் துன்பத்தையே செய்வதுமான,
மம ஆதிம் - என் மனக்கவலையை,
த்ருதம் நாசய - விரைவில் நாசம் செய்யவேண்டும்,

## பொழிப்புரை.

ஓ உமையின் புதல்வரே! அடியேன் துன்பத்தினால் தளர்வுற்றிருக்கிறவன்; தேவரீரோ என்போன்ற ஏழைகளைக் காப்பாற்றுகிறவராகவுமிருக்கிறீர், என் துன்பத்தை ஒழிக்கும்படி பிறதெய்வங்களை வேண்டவும நான் பிரியப்படவில்லை. ஆகையால் தேவரீரது திருவடிகளில் வைத்திருக்கும பக்திக்குத தடையாய் நின்று என்னை எக்காலத்தும் துன்புறுத்திவரும கவலையைத் தீர்த்து காப்பாற்றவேண்டும்.

இதனால் ஏழைபங்காளனாகிய முருகவேளிடம் மெய்யன்புவைத்த உத்தமர்கள எக்காரணத்தாலும் பிறதெய்வங்களை வேண்டார் எனவும், அத்தகைய அடியார்களைக் காப்பதே முருகனது முதறகடமையென்றும் தெரிவிக்கப்பட்டது.

अपस्मारकुष्ट क्षयार्शः प्रमेह
ज्वरोन्मादगुल्मादि रोगा महान्तः ।
पिशाचाश्च सर्वे भवत्पत्र भूतिम्
विलोक्यक्षणात्तारकारे द्रवन्ते ॥

(25) அபஸ்மார குஷ்ட க்ஷயார்ச: ப்ரமேஹ
ஜ்வரோன்மாத குல்மாதி ரோகா மஹாந்த: ।
பிசாசாஸ்ச ஸர்வே பவத்பத்ர பூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே! த்ரவந்தே ॥

## பதவுரை.

ஹே தாரகாரே! - ஓ! தாரகாசுரனைக கொன்றவரே!
மஹாந்த: - கொடியவைகளான,
அபஸ்மார குஷ்ட க்ஷயார்ச ப்ரமேஹ ஜ்ரோன்மாத குல்மாதி ரோகாஹ: - அபஸ்மாரம (முயலவலி காககைவலி முதலியன) குஷ்டம, க்ஷயம, மூலம், பிரமேகம், ஜ்வரம், பைத்தியம், குன்மம் முதலிய நோயகளும,

## பொழிப்புரை.

ஓ குமாரக் கடவுளே! என்னைச் சார்ந்தவர்கள் எல்லோரும் தேவரீரது திருவடியின்கண் அன்புவைத்துப் பூசிக்கின்றவர்களாயும் நமஸ்கரிக்கின்றவர்களாயும் ஸ்தோத்திரம் செய்கின்றவர்களாயும் இருக்க அருளபுரியவேண்டும்.

இதனல் எல்லாப்பிராணிகளும முருகப்பெருமானுடைய அடிமைகளாதலால் அவரது திருப்பணியைச் செய்ய அவசியம் கடமைப் பட்டிருக்கிறாகள என்பது தெரிவிக்கப்பட்டது.

मृगाः पक्षिणो दं सखाये चदुष्टा
स्तथा व्याधयो वाधकाये मदङ्गे ।
भवच्शक्ति दीक्षणाग्रभिन्नाः सुदूरे
विनस्यन्तु ते सूर्णित क्रौञ्च चैल ॥

(29) ம்ரு$^{3}$கா: பக்ஷிணோ த$^{3}$ம்சகாயேச து$^{3}$ஷ்டா
ஸ்த$^{2}$தா வ்யா$^{4}$தயோ பா$^{3}$த$^{4}$காயே மத$^{3}$ங்கே$^{3}$ ।
ப$^{4}$வச் சக்தி தீக்ஷ்ணா கா$^{3}$பி$^{4}$ன்னா: ஸூதூ$^{3}$ரே
விநஸ்யந்து தே சூர்ணித க்ரௌஞ்ச சைல ॥

## பதவுரை.

ஹே சூர்ணிதகரௌஞ்ச சைல - ஓ கிரௌஞ்ச பர்வதத்தைப் பொடியாக்கிய பெருமானே!

துஷ்டர் - கொடியவைகளான,

யே ம்ருகா: பக்ஷிண: தம்சகா.- யாதொரு விலங்குகள், பறவைகள், கடிக்கும் படியான காட்டீககள், பாம்புகள்,

ததா மதஙகே பாதகா. - அவ்வாறே எனது உடலை வருத்துகின்ற,

யே வ்யாத: ஸந்தி - யாதொரு நாய்களும் உண்டோ,

தே - அவைகளெல்லாம்,

பவச் சகதி தீக்ஷ்ணகரபின்ன:- தேவரீருடைய வேலாயுதத்தின் கூர்மையான முனையால் பிளக்கப்பட்டு,

ஸுதூரே வினஸ்யந்து - வெகுதூரததிலேயே (என்னை நெருஙகுமுன் னேயே) நாசத்தை யடையட்டும்.

உ

ஓம் ஸ்கந்தாய நம:

# கந்தர் திருவிளையாடல்

(274-ம் பக்கத் தொடர்ச்சி.)

உலகங்கள் முழுதுஞ் சென்று அரிய திருவிளையாடல்களைப் புரியும் குமாரக்கடவுள் பின்னர் ஒரு திருவிளையாடல் செய்வாராயினர். குலமலைகளனைத்தையும் ஓரிடத்தில் ஒருங்கு கூட்டுவர்; அம்மலைகளைப் பின்னர் தலைகீழாகப் பூமியில் நிறுத்துவார்; அலைகளையுடைய எழு கடல்களையும் ஒன்றாகச்செய்வர்; சக்ரவாளகிரியை பாதாளம் புகுமாறு பாதத்தால் அழுத்துவர்; கங்கா நதியை ஓடவிடாமல் அடைப்பர்; பாதாள லோகத்துள்ள எட்டு நாகங்களையும் பிடித்து மேருமலை முதலிய பெரிய மலைகளிலே பூட்டிக்கட்டி உயிர்களுக்குச் சிறிதுகூடத் துன்பமில்லாவண்ணம் சிறு தேர்களாக்கி உருட்டிச் செல்வர். திசைகளிலுள்ள ஐராவதம்முதலிய எட்டு யானைகளையும் கொண்டுவந்து ஒன்றோடொன்று போர்புரியுமாறு செய்வர். ஆகாயத்திலுள்ள கங்காசலத்தால் வடவாமுகாக்கினியை அவிப்பர்; கருடனையும் வாசுகியையும் பிடித்து ஒன்றோடொன்று மாறுகொண்டு போர்புரியச் செய்

---

## பொழிப்புரை.

ஓ க்ரௌஞ்ச சயிலத்தைப் பொடியாக்கிய கடவுளே! தேவரீரது திருவடிகளுக்கு அடிமையான என்னைத் துன்புறுத்த வரும் கொடிய உயிர்களும் அவ்வாறே கொடிய நாய்களும் தேவரீரது வேலாயுதத்தின் கூர்மையான முனையினாற் பிளக்கப்பட்டு என்னை நெருங்கு முன்னமேயே நாசத்தையடையவேண்டும்.

இதனால் முருகக்கடவுளின் அன்பர்களுக்குத் துன்பமிழைக்க நினைக்கும் கொடிய உயிர்கள் அக்கணமே அழிந்துவிடுமென்றும் அவ்வாறே எவ்வித நோய்களும் அவ்வடியவர்களை நெருங்கித் துன்புறுத்தாவென்றும் தெரிவிக்கப்பட்டது.

(தொடரும்).

வர்; பாதாளலோகத்துள்ள நாக இனங்களைப் பூதலத்தில் சேர்த்து, பூதலத்திலுள்ள கடல்களைப் பாதாள லோகத்திற் புகுமாறு விடுவர்; சூரியனைச் சந்திரமண்டலத்திலும், சந்திரனைச் சூரியமண்டலத்திலுமாக மாற்றி பரிவர்த்தனையாக விடுவர், அஷ்ட திக்குப்பாலர்களுடைய பதங்களனைத்தையும் முன்னையிடத்தினின்றும் பறித்துப் பிறழ வைப்பர்; மேகங்களுக்குள்ளிருந்த மின்னல்களையும் இடிகளையும் பற்றி மாலையாக்கித் தரித்துக்கொள்வர்; சூரிய சந்திரர் முதலிய கிரகங்களும் பிறவும் விண்ணிற் செல்லும் விமானங்களையும் தேர்களையும் பிணித்த கயிறுகள் துருவன் கரத்திலிருப்பன, அவற்றுள் வேண்டுவனவற்றை இடையில் அரிந்து, பூமியிலும் திசைகளிலும் செல்லுமாறு விடுப்பர், ஆகாயத்திற் செல்லும் விறகளிரண்டையும் பற்றி, கிரகங்கள் நட்சத்திரங்கள் இவற்றை உண்டைகளாகக் கொண்டு, தேவர்களது தலை மார்பு கழுத்து முகம் இவைகளைக் குறியாகக்கொண்டு எய்து வில்வன்மையைக் காட்டுவர்; சிவன்முத்தருக்கேயன்றிப் பிறருக்கு வெளிப்படாத நிருமலராகிய எமது குமாரக் கடவுள் சுராசுரர்களும் நரர்களும் எனோரும் தங்கள் தங்கள் உள்ளமும் உடம்பும் தளர்தலன்றி யாதொருதீங்கும் நேராவண்ணம், எண்ணில்லாத இன்பத்தை நல்கும் திருவிளையாடல்களைச் செய்தருளினர்.

அப்பொழுது பூமண்டலத்திலுள்ள அசுரர்கள் இவ் வற்புத ஆடல்களை நோக்கி, தாம் பெரும் பாவிகளாதலால், அறுமுகப்பெருமானது திருவுருவத்தைக் காணாதவராகி, "ஆ! இவ்வண்ணம் புரிந்தார் யாவர்?" என்று வியப்புற்றுத் தியங்கினர்கள். அந்த அசுரர்கள் பின்னுஞ் சிலநாள் உயிரோடிருக்குமாறு ஆயுள்பெற்றுள்ளமையால், முருகக்கடவுள் அவர்களுக்குத் தமது திருமேனியைக் காட்டாது உலவினர். அவர்கள் தேடித் தேடி ஒருவரையுங் காணாமையால் "அரியயனாற் காணப்படாத அரனாது மாயமே இது" என்றார்கள். குமாரக்கடவுளது செய்கையை மண்ணுலகத்திலுள்ள மனிதர்கள் கண்டு, "நெறி தவறி கொடுங்கோல் செலுத்துகின்ற அசுரர்கள் எல்லோரும் இறப்பது திண்ணம்; இது அதற்கு அடையாளமாகத் தோன்றிய விமமிதம்போலும்" என்றார்கள். திசைபாலர்களும் சூரியன் சந்திரன் முதலாயினோரும் மனம் வருந்தி, ஒருங்குகூடி, முருகப்பெருமானது திருமேனியைக் காணாதவராகித் திகைத்து, இது அசுரர்கள் செய்கையன்று வேறு யாரோ செய்தார்; இந்திரன் சிலரோடு மகாமேருகிரியில் இருக்கின்றனன்; நான்முகக்

கடவுளும் அங்கிருக்கின்றார்; நாமெல்லாம் அவர்களிடத்திற்சென்று இதனைச் சொல்வோம்" என்று துணிந்துகொண்டு, சூரனுக்கும் அஞ்சித் துயரத்தோடு சென்று, மேரு சிகரத்தை அடைந்தார்கள். அங்கே, அறுமுகக்கடவுளுடைய திருவிளையாடலைக்கண்டு அவர் திருவுருவத்தைக்காணாது வருந்தியிருந்த இந்திரனைக்கண்டு, அவன்முன் சென்று அடிவணங்கி, இருந்துகொண்டு: "மண்ணுலகத்தினும் விண்ணுலகத்தினும் உள்ளவைகளைப் பண்டைய நிலையினின்றும் யாரோ மாறுபடச்செய்தனர்; அவரை இன்னாரென நாங்கள் அறிகிலோம்; இராக்கதர்கள் இது செய்திலர் போலும், இங்ஙனம் நிகழ்ந்தது என்ன?" என்றார்கள். அதனைக்கேட்ட அயிராணி கேள்வன், "நானும் இதனை ஆராய்ந்துகொண்டேயிருக்கின்றேன், சிறிதும் அறிந்திலேன், நினைப்பதற்கும் அரிதாகிய இதனைப்புரிந்தார் யாவரோ? தாமரையில் வைகும் சதுர்முகப் பிரமதேவரைப்போய் வினவுவோம்; வாருங்கள" என்று சொன்னான். உடனே, அந்த இந்திரன் முதலிய இமையவர்கள் உண்மையான தவத்தைப் புரிந்தோராதலால், அவர்கள் விழிப்புலனுக்குத் தெரியும்வண்ணம் அறுமுகக்கடவுள் ஒரு திருமுகமுடைய பாலராய் அம்மலைமீது தோன்றியருளினார்.

தேவர்கள் கொண்ட மயக்கம் நீங்கும்வண்ணம் தமது அற்புதச் செயலைக் காட்டவந்த எம்பெருமான், மகாமேருமலையை அசைத்து தாமரை இதழ்களைக் கொய்து சிந்துதல்போலக் கொடுமுடிகளைப் பறித்து வீசினார். இந்திரன் முதலிய இமயவர்களனைவரும் குமாரக் கடவுளை நோக்கி, "ஐயையோ! மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் நிலைகலங்கத் திரிபு செய்தவன் இவனேயாகும்" என்று சிங்கத்தை எதிர்ந்த விலங்குகளைப்போல் கலங்கி, இவனது ஆற்றலை ஆராயுங்கால் இவனைக் குழந்தை என்று கொள்ளப்படாது; அசுரரினும் இவன் மிகக் கொடியன்; யாவராலும் செய்யமுடியாத மாயா வித்தையையுடையவன்; போர்செய்து இவனை வெல்வேம்" என்று துணிந்து, அக்கினி மலையைச் சூழும் கொசுக்களைப்போல், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய முருகப்பெருமானைச் சூழ்ந்தார்கள். அப்பொழுது இந்திரன் முன்னாளிலே தந்தமொடிந்து திருவெண்காட்டிற்சென்று சிவபெருமானைப்பூசித்துத் தந்தம் பெற்றுக்கொண்டு அங்கிருந்த வெள்ளையானையாகிய ஐராவதத்தை நினைக்க அது அம்மேருகிரிக்கு வந்தது. உடனே இந்திரன் போர்க்கோலங் கொண்டு, வச்சிராயுதம், வாள், தண்டு, வில், வேல்முதலிய ஆயுதங்

களை எடுத்துக்கொண்டு, அந்த ஐராவதத்தின் மீதூர்ந்து, குமாரக் கடவுளைத் தேவர்களோடு வளைந்து போர்செய்யத் தொடங்கினன்.

அறுமுகப்பெருமான் தேவர்கள தமமைப் பகைவராய வளைந்த மையை நோக்கி, திருநகைசெய்து, யாதும் எண்ணாது முன்போலவே தமது திருவிளையாடலைச் செய்துகொண்டிருந்தார். இந்திரன் பற்பல படைகளை முருகவேள்மீது விடுப்ப, அவை யாவும் அவர்மீது மலர் போறபட்டன. அதுகண்டு இந்திரன் வச்சிராயுதத்தைவிட்டு ஆரவாரித்தான். அக்குலிசம் எம்பெருமானுடைய திருமார்பிலேபட்டு நுண்மணல்போலப் பொடியாயிற்று. இந்திரன் அதுகண்டு வருந்த ஐராவதம் கர்ஜித்துக்கொண்டு கந்தசுவாமியின் திருமுன்சென்றது. அறுமுகக்கடவுள் அதுகண்டு, சங்கல்பமாத்திரத்தால ஓர் வில்லையும் பலகணைகளையும விரைந்து படைத்துக்கொண்டு, வில்லை வளைத்து நாணொலிசெய்து, ஒரு கணையை அந்த யானையின நெற்றியிற் புக விடுத்தார்; உடனே ஐராவதம புலம்பிவீழ்ந்து இறந்தது. அது கண்ட இந்திரன் வருத்தமுற்று, "ஐயையோ என்று கூவி, குமரவேளருகிறசென்று, கோபத்தோடு தன்வில்லை வளைப்ப, முருகக்கடவுள் ஓரம்பை அவன் புயமீது விடுத்தார். அக்கணைபட்டு இந்திரன் தன் வலிமை இழந்து, விற்போரை விடுத்துத் தன் கையிலிருந்த வேலை பெருமான்மீது விடுத்தான், அவ்வேல ஒரு சிறு புல்லைப்போலச் சென்று அழிந்தது. அதுகண்ட அமரர்கள் அற்புதமடைந்தார்கள். கந்தப்பெருமான் இந்திரனுடைய முடியை ஓரம்பினாலும், கொடியை ஓரம்பினாலும், மார்பிற் கவசத்தை ஓரம்பினாலும் அழித்து, அவன் மார்பை ஏழம்பினால் துளைத்தார். உடனே அயர்ந்து வீழ்ந்தான். அதுகண்ட மற்றைத் தேவர்கள் தமது அழிவை யெண்ணாது கந்த மூர்த்தியை வளைந்து போர் புரிந்தார்கள். அப்பொழுது அறுமுகப் பரமன் வருணனை நான்கம்பினாலும், இயமனை ஐந்தம்பினாலும், சந்திரனை ஓரம்பினாலும், சூரியனை மூன்றம்பினாலும், வாயுவை இரண்டம்பினாலும், அக்கினியை மூன்றம்பினாலும் கொன்றார். எஞ்சியதேவர்கள் எல்லோரும் குமாரக்கடவுளது போராற்றலை நோக்கி "இவனே இன்றைக்கு எல்லோரையும் கொன்றுவிடுவன்" என்று மனங்கலங்கி ஓடி ஒளிந்தார்கள். அதுகண்ட அறுமுகப்பெருமான் அப்போர்க் களத்தில் தனி நின்று உலவினார்.

இச்செயலை நாரதர்கண்டு, கருணையின் மிகுதியால் ஓடி தேவ குருவாகிய வியாழபகவானிடங் கூறினார். அதுகேட்ட பிரகஸ்பதி

"தேவர்களுடைய வாழ்க்கை அழிந்ததுபோலும்" என்று சொல்லி, மனம்நொந்து விரைந்துசென்று, போர்க்களத்தையடைந்து, அங்கு மாண்டுகிடக்கும் தேவர்களைக்கண்டு மனங்கலன்று, அங்கு பரமார பக்கவடியிலிருந்து திருவிளையாடல்புரியும் தெய்வசிகாமணியாகிய செவ்வேட் பரமனது திருவடித்தாமரைமீது வீழ்ந்து, துதித்து "எம பெருமானே! பணிந்தவர் பயங்கெடுக்கவந்த பரமகருணாநிதியே! தாரகன், சிங்கமுகன், சூரன்என னும் அசுரர்கள் தண்டிப்ப இந்திரன் நாள்தோறும் துன்பமுற்று தனது பொன்னுலகத்தைவிடுத்து இம மேரு மலையில் மறைந்திருந்தான் அவன் உமமுடைய திருவடிகளையடைந்து வழிபட்டு, உமமைக்கொண்டு தன் பகைவர்களையழித்து, முன்போல் தனது அரசாட்சியைப் பெற நினைந்திருந்தான். பலகாலம அருந் தவஞ்செய்து வாடினன்; சரவணதடாகத்திற்சென்று தேவரீரது திரு வவதாரத்தைக்கண்டு, தன் துயரமெல்லாம நீங்கியதென்று உவகை பூத்தான்; உமக்குத் தொண்டுசெய்ய விரும்பிய இந்திரன் நீர் இவ் வாறு திருவிளையாடல் செய்வதை அறிந்திலன்; திருமால் முதலியோர் தேடிக்காணாத சிவபெருமானும, உமாதேவியாரும், அவர் திருவருள் பெற்றோர் சிலருமன்றி உமது அற்புதத் திருவிளையாடலை அறியவல் லார் யாவர்? அடியேம பாசத்தையும் பசுவையும் பகுத்து இஃ தித்தன்மையது என்று அறிந்திலேம். பகுதிப்பொருளாகிய உமது பெருங்கருணைத் திருவிளையாடலை எவ்வாறு அறியவல்லேம்; சிற்றறி வுடையேம்; பாசத்தினின்றும நீங்கிலேம், ஆதலால் இந்திரன் தனது அஞ்ஞானங் காரணமாக உமது திருவிளையாடலைத் தீது என்று எண்ணி, உமமோடு போர் புரிந்தனன். நீதிசேர் தண்டமே நீர் புரிந் தீர்; மற்றைத் தேவர்களும் அறியாமையால் உம்மை எதிர்த்து இறந் தார்கள. தாய்தந்தைகளே தமக்குப் பிழைசெய்த தம புதல்வர் களைக் கொல்வாராகளாயின், அவர்களுக்கு வேறு யாவர் அருள்செய் வார்? ஞானவடிவாகிய தீனபந்துவே! சரபமானது சிங்கத்தைக் கொல்வதன்றி மின்மினியைக் கொல்லுதல் வெற்றியாகுமா? அருட் பெருங்கடலே! வலியர்களாகிய அசுரர்கள் ஒழியும்வண்ணம வேரோ டறுத்தருளும்; எளியவர்களும் உம்முடைய திருவடிகளை மறவாதவர் களுமாகிய தேவர்களுடைய பிழையைப் பொறுத்தருளும். மரக் கலத்தினாலே தாங்கப்படுவோரும அதனால் தங்கள் செல்வத்தை அடைதற்பாலருமாகிய வணிகர்கள் அதனைச் சாய்த்து அது கவிழ்ப் பத் தாம இறத்தல்போல, உம்மாலே தாங்கப்படுவோரும் உம்மாலே

தங்கள் செல்வத்தை அடைதற்பாலருமாகிய தேவர்கள் உம்மைப் பொருது நீர் கொல்லத் தாம் இறந்தார்கள். தேவதேவ! உம்மு டைய அடித்தொண்டர்கள் செய்த பிழையைத் திருவுளங்கொள்ளா தொழிக இவர்கள் இங்கு அறிவுபெற்று எழுமாறு திருவருள் செய் வீர" என்று விண்ணப்பஞ் செய்தார்.

முன்னவாக்கெல்லாம் முன்னவராகிய முருகப்பெருமான் திரு முறுவல்செய்து இந்திரன் முதலிய தேவர்கள் ஐராவதத்தோடும் எழும் வண்ணம் திருவுளங்கொண்டருளினார். உடனே ஆகண்டலனாதி அமரர்கள் எழுந்து, மெய்யறிவு தோன்ற, தாங்கள் முன்செய்த செய் கையை அறிந்து, தாங்கள் போர்செய்தது முருகப்பெருமானோ டென்று அறிந்து, உள்ளங்கலங்கி, நடுநடுங்கி, எம்பிரானுடைய சரண கமலங்களில் பன்முறை வீழ்ந்து பணிந்து, துதித்து மொழிகுழறி, மெய் விதிர்த்து நின்றார்கள்.

கந்தநம ஐந்துமுகா நந்தமுரு கேசநம கங்கை யுமைதன்
மைந்தநம பன்னிரு புயத்தநம நீபமலர் மாலை புனையும்
தந்தைநம ஆறுமுக ஆதிநம சோதிநம தற்பரமதாம்
எந்தைநம என்றும் இளை யோயநம குமாரநம என்று தொழுதார்

இவ்வாறு தொழுதுநின்ற தேவர்களைக்கண்டு கந்தப்பெருமான் "வருந்தா தொழிமின், வருந்தாதொழிமின்" என்று திருவருள்செய் தார். தேவர்கள் துயரமும் அச்சமும நீங்கி, கார்த்திகேய சுவா மியை வணங்கி, "எம்பெருமானே! அமிர்தத்தோடு நஞ்சு கலந்து உண்பவரை அந்நஞ்சன்றி அமிர்தமா கொல்லும்? அதுபோல, உமது திருவருளினாலே செல்வத்தைப்பெறக் கருதிய அடியேங்கள் உம் மோடு போர்புரிந்ததனால், நீர் எமமைக்கொன்றீரல்லீர், எமது அக் குற்றமே எம்மைக்கொன்றது முன்னாளிலே சிவபெருமானை இகழ்ந்த தக்கனுடைய யாகத்தில் தரப்பட்ட பாகத்தை யாம உண்ட அதி பாதகம் இன்னும் முடிந்திலது. அதனோடு உம்மைப்பொருந்த அதி பாகமுங்கூடிற்று. எமது பரம பிதாவே! நீர் பரமகருணையால் இப் போது அடியேங்களைத் தண்டித்து அப்பாவங்களைத் தொலைத்தருளி னீர். ஆதலால், அடியேங்களுக்கு நீர்செய்த திருவருளுக்கு நாங் கள் செய்யுங் கைமமாறு யாது? எங்களை உமக்கு அடியார்களாகத் தருவேமெனின், அநாதிமலபெத்த பசுக்களாகிய நாங்கள் அநாதி மல முத்தபதியாகிய உமக்கு என்றும் அடிமைகளேயன்றோ? அவ்

உ

ஓம் குஹாய நம:

# கற்பு

## சாவித்திரி

(280-ம் பக்கத்தொடர்ச்சி)

இவ்வாறு கூறிய அறக்கடவுளினது வசனங்களைக் கேட்ட சாவித்திரி, "உம்மால் இந்தப் பிரஜைகள் விதிப்படி ஸம்யமனம் (—அடக்குதல்) செய்யப்படுகின்றன. இந்த உயிர்களை நீர் விதியைச் செய்துகொண்டுபோகிறீர். உமது இச்சையினால் கொண்டுபோகிறதில்லை; தேவரே! அதனால், உமக்கு யமனாயிருக்கை பிரசித்தமாக இருக்கிறது. என்னால் சொல்லப்பட்ட இந்த வசனத்தையும் அறிந்து கொள்ளும். எல்லாப் பிராணிகளிடமும் செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் துரோகம் செய்யாமையும் அருளுடைமையும் கொடையும் சாதுக்களுடைய பழமையான தருமம். இந்த உலகமானது பெரும்பான்மையாக இவ்வண்ணமிருக்கிறது. மனிதர்கள் சக்தியினால் குறைந்தவர்கள்; ஸத்துக்கள் மட்டுமே தம்மைவந்தடைந்திருக்கிற பகைவர்களிடமும் கருணைபுரிகிறார்கள்" என்று சொன்னாள். இயமன், "தாகங் கொண்டவனுக்குத் தண்ணீர்போல உன்னால் இந்த வாக்கியம் உரைக்கப்பட்டது. கல்யாணி! இந்த சத்தியவானுடைய உயிரைத்தவிர வேறு விரும்புகிற வரத்தைக் கேள்" என்றான்.

சாவித்திரி, "என்னுடைய பிதாவான அச்சுவபதி மன்னர் புத்திரபாக்கியமில்லாதவர். அப்படிப்பட்ட என் பிதாவுக்குக் குலத்தை வளர்க்கத்தக்க நூறு ஔரஸ புத்திரர்கள் உண்டாகவேண்

---

வாருக, அடியேங்களைப் புதிதாகத் தருவது எவ்வாறு? சிறுவர்கள் தங்களைத் தங்கள் தந்தையர்களுக்குத் தருவது தகுதியாமோ? அறிவில்லாதேம் செய்த பிழைகள் அனைத்தையும் திருவுளத்திற் கொள்ளாது பொறுத்தருளும்" என்று விண்ணப்பஞ்செய்தார்கள்.

(தொடரும்).

டும். இந்த மூன்றாவது வரத்தை உம்மிடம் பெற விரும்புகிறேன்" என்றாள். இயமன், "பாக்கியவதி! குலத்திற்கு இடையறாத தொடர்ச்சியை உண்டுபண்ணுகிறவர்களும் நல்ல ஒளியுள்ளவர்களுமான நூறு குமாரர்கள் உன் பிதாவுக்கு உண்டாகட்டும். அரசகுமாரி! என்னால் உன் விருப்பம் நிறைவேற்றப்பட்டது. ஆதலால் திரும்புவாயாக, நெடுந்தூரம் வந்துவிட்டாய்" என்றான்.

சாவித்திரி, "கணவருக்கு அருகிலிருத்தலால் எனக்கு இது தூரமன்று; என் மனமானது நெடுந்தூரம் ஓடுகிறதன்றோ? என் மனத்தில் தோன்றியதும் என்னால் சொல்லப்படுகிறதுமான இந்த வார்த்தையை நீர் போய்க்கொண்டே கேட்பீராக. பிரதாபமுடைய நீர் விவஸ்வா (சூரிய) னுடைய புத்திரர், அதனாலன்றோ கற்றறிந்தவர்கள் உம்மை வைவஸ்தர் என்று கூறுகிறார்கள், ஈச்வரரே! பிரசைகள் பகை நட்பு என்னும் வேறுபாடில்லாத சமமான உமது ஆட்சியினால் வசப்பட்டு நடக்கின்றன. அதனால், உமக்கு இந்த உலகத்தில் தருமராஜர் எனப்படுதல் சித்தித்திருக்கிறது, சாதுக்களிடம் உண்டாகிறதுபோன்ற நம்பிக்கை தன்னிடத்திலும் உண்டாகிறதில்லை. ஆகையால், ஜனங்கள் சாதுக்களிடம் மிக்க நம்பிக்கை வைக்கிறார்கள்" என்று சொன்னாள். இயமன், "பெண்மணி! கல்யாணி! உன்னால் சொல்லப்பட்டதுபோன்ற வசனத்தை உன்னைத்தவிர மற்றவர்களிடத்தில் நான் இதற்குமுன் கேட்டதில்லை; இதனால் நான் சந்தோஷமுள்ளவனாக இருக்கிறேன். இவனுடைய உயிரைத்தவிர வேறான நான்காவது வரத்தை கேட்டுக்கொள்; வரத்தைப்பெற்றுக்கொண்டு போவாயாக" என்றான்.

சாவித்திரி, "தேவ சிரேட்டரே! எனக்கும் சத்தியவானுக்கும் குலத்தை உத்தாரணஞ்செய்யும் நல்ல ஆற்றலுள்ள நூறு ஔரஸபுத்திரர்கள் உண்டாகவேண்டும்; இந்த நான்காவது வரத்தை உம்மிடத்தில் யாசிக்கிறேன்" என்றாள். இயமன், "பெண்ணே! பலமும் சக்தியுமுள்ளவர்களும் பிரீதை உண்டுபண்ணுகிறவர்களுமான நூறு புத்திரர்கள் உனக்கு உண்டாவார்கள்; உனக்கு சிரமமுண்டாகவேண்டாம்; திரும்பிப்போ; நெடுந்தூரம் வந்துவிட்டாய்" என்றான்.

சாவித்திரி, "அறக்கடவுளே! என்னைப்போன்ற பதிவிரதைகளுக்கு எப்பொழுதும் பதியினிடத்திலிருந்து குழந்தைகளை உண்டுபண்ணிக்கொள்வதே சநாதன தருமம். பெரியோர்கள் வாத்தைக்

கொடுத்துவிட்டு என் கொடுத்தோமென்று வாட்டமடையமாட்டார்கள், மனவருத்தத்தையு மடையமாட்டார்கள். சாதுக்களுக்கு சாதுக்களோடு சேர்க்கையானது பயனற்றதாகாது. சாதுக்கள் சாதுக்களிடத்தில் பயத்தையடையமாட்டார்கள்; சாதுக்கள் சத்தியத்தால் சூரியனை நடத்துகிறார்கள்; சாதுக்கள் தவத்தினால் பூமியைத் தாங்குகிறார்கள். சாதுக்கள் சென்றதற்கும் இனி வருவதற்கும் கதியாக இருக்கிறார்கள். சாதுக்களுடைய மத்தியில் சாதுக்கள் காரியம் நடை பெருமையால் வருந்துகிறதில்லை 'இது பெரியோர்களால் அன்போடு அடையப்பட்ட நிலைமையான ஒழுக்கம்' என்று அறிந்து சாதுக்கள் பிறருக்கு உபகாரத்தைச்செய்து அதற்குப் பிரதிப்பிரயோஜனத்தை எதிர்பார்க்கிறதில்லை. நல்லோர்களிடம் உண்டாகிற மகிழ்ச்சி வீணாகிறதில்லை; அர்த்தமும் அழிகிறதில்லை; கௌரவமும் அழிகிறதில்லை; இந்த மூன்றும் நல்லோர்களிடம் நிலைத்திருப்பதால் அவர்கள் காப்பவர்களாகிறார்கள்" என்று சொன்னாள். இயமன், "பதிவிரதையே! அறங்களோடு கூடியதும் மனத்திற்கு அனுகூலமானதுமான வசனத்தைச் சொல்லச்சொல்ல எனக்கு உன்னிடத்தில் உத்தமமான பக்தி உண்டாகிறது. நிகரில்லாத வரத்தைப் பெற்றுக்கொள்வாயாக" என்றான்.

சாவித்திரி, "தரும பூபதி! எனக்கு நூறு மக்கள் உண்டாகும் வரத்தை நீர் கொடுத்தீர்; எனது பதியை நீர் கொண்டுபோனால் எனக்கு மக்கள் எவ்வாறு தோன்றும்? உமது வார்த்தையைக் காப்பாற்றவேண்டுமானால் எனது நாயகன் பிழைக்கவேண்டும்; என்னுடைய நாயகனில்லையேல் நான் மரித்தவள் போன்றவளே; கணவனைத் தவிர சுகத்தையும் சுவர்க்கத்தையும் உயிரையும் நான் விரும்பமாட்டேன்; அறக்கடவுளே! சத்தியம் உயிரினுக்கும் சிறந்ததன்றோ? நீர் புத்திர வரத்தைக் கொடுத்தீர்; அந்த சத்தியவாக்கை நிறைவேற்றுமாறு என்பதியை வழங்குவீர்; உமது வசனம் சத்தியமே ஆகுக" என்றாள்.

சாவித்திரியின் பொருளடங்கிய வசனத்தைக்கேட்ட கூற்றுவன் மனமகிழ்ந்து, அந்த பாசத்தை அவிழ்த்துவிட்டு, சாவித்திரியே! உன் பதியைக்கொடுத்தேன்; நல்லபொருளோடும் தருமத்தோடுங் கூடிய நின் இனிய மொழிகளால் உள்ளம் மகிழ்கிறேன்; உன் கணவனை அழைத்துக்கொண்டு போ; உன்னோடு நானூறு ஆண்டுகள் சுகமே வாழ்வான். யாகங்களைப் புரிந்து தேவர்களுக்கும் தருமங்

களைப்புரிந்து உலகத்திற்கும் மகிழ்ச்சியைத்தந்து பொன்றாத புகழையடைவான், உன்னிடத்தில் நூறு குமாரர்களை உண்டாக்குவான். அந்த நூறு புத்திரர்களும் பிள்ளை பேரன்களுள்ளவர்களும், பிரசித்தியுள்ளவர்களும் சாவித்திரர்களென்றும் உன் பெயருள்ளவர்களுமாக நிலைபெற்றிருப்பார்கள். உன் பிதாவுக்கு உன் மாதாவான மாளவியிடத்தில் நூறு பிள்ளைகள் உண்டாவார்கள். உன்னுடைய தம்பிமார்கள் "மாலவர்கள்" என்னும் பெயருடன் புத்திர பௌத்திர பாக்கியங்களைப்பெற்று தேவதைகளுக்கு நிகரான "திருவாளர்களாக விளங்குவார்கள" என்று தரும வேந்தன சாவித்திரிக்கு நல்வரங்களை நல்கி, அவளைத் திரும்பிச்செல்லுமாறு செய்து தன்னுடைய இருக்கை சென்றான்.

அறக்கடவுளிடம் விடைபெற்ற சாவித்திரி தன் கணவனுடைய உயிரில்லாத உடம்பிருக்கிற இடம் சென்றாள். தரையில் கிடந்த கணவனுடலைக் கட்டியெடுத்துத் தன் மடியில் அவன் தலையை வைத்துக்கொண்டு பூமியில் அமர்ந்தாள். சத்தியவான் உயிர்ப்புற்று நினைவையடைந்து, தேசாந்திரம் போய்த் திரும்பிவந்தவன்போல் சாவித்திரியை அடிக்கடி நிமிர்ந்து பார்த்து, "நெடுநேரம் தூங்கிவிட்டேன், என்ன காரணத்தால் என்னை நீ எழுப்பவில்லை? என்னை இழுத்த கறுத்த புருஷன் எங்கே?" என்று வினவினான். சாவித்திரி, "அரசகுமாரரே! நீர் நெடுநேரம் என்மடியில் தூங்கினீர். உயிர்களை அடக்கும் அந்த யமபகவான் போய்விட்டார், களைப்பாறிவிட்டீர்; கூடுமானால் எழுந்திரும்; இருளடர்ந்த இரவு வந்திருப்பதைப் பாரும்" என்றாள்.

சத்தியவான் சுகமாகத்தூங்கி எழுந்தவனைப் போல் எழுந்திருந்து எல்லாத்திசைகளையும் வனங்களையும் பார்த்து, "நல்ல இடையுள்ளவளே! பழங்களைவேண்டி புறப்பட்டுவந்தேன்; கட்டையைப் பிளந்து தலைவலியுற்று நிற்கமுடியாமல் உன் மடியில் உறங்கினேன்; பிறகு கோரமான இருட்டையும் ஒளியுள்ள ஒரு புருடனையும் பார்த்தேன்; அது என்ன? சாவித்திரி! கனவா? உண்மைதானா? உனக்குத் தெரிந்தால் சொல் என்று வினவினான்.

சாவித்திரி, "விரத சீலரே! இரவு அதிகப்பட்டு வருகிறது; எல்லாவற்றையும் நடந்தபடி உமக்கு நாளைக்குச் சொல்வேன்; எழுந்திரும்; உமக்கு மங்களம்; தாய் தந்தையர்களைப் பார்ப்போம்; நடு

ந் போய்விட்டது, இதோ அசுரர்கள் களிப்புடன் பயங்கரமாகப் பேசிக்கொண்டு உலாவுகிறார்கள்; மிருகங்களுடைய கால்களால் மிதிக்கப்படுகின்ற சருகுகளின் சத்தங்களும் கேட்கிறது; இதோ நரிகள் என்னுடைய மனத்தை நடுங்கச்செய்து தென்மேற்குத் திசையை அடைந்து கோரமாக ஊளையிடுகின்றன, வாரும்" என்றாள். சத்தியவான், "இருள்மூடி வனம் பயங்கரமாக இருக்கிறது, உனக்கு வழியுந் தெரியாது, நடக்க வலியற்றிருக்கிறாய்" என்றான். சாவித்திரி, 'காதல' இவ்விடத்திலிருக்க உமக்கு விருப்பமில்லையானால் அதோ ஒரு மரம் எரிந்துகொண்டிருக்கிறது; அங்கிருந்து நெருப்பைக்கொணர்ந்து நாற்புறமும் இந்த விறகுகளால் மூட்டி எரியச் செய்வேன், வருந்தாதீர்; உம்மை நோயுள்ளவராகக் காணுகிறேன்; நாளை காலை ஆச்சிரமம் செல்லுவோம், உமக்கு விருப்பமிருந்தால் இந்த இரவை இவ்விடத்தில் கழிப்போம்" என்றாள்.

சத்தியவான், 'தலைவலி போய்விட்டது; உடம்பு நல்ல நிலையிலிருக்கிறது, தாய்தந்தைகளை உன் உதவியால் அடைய விரும்புகிறேன், அகாலத்திலிருந்து ஒருபோதும் நான் ஆச்சிரமத்தினின்று சென்றதில்லை, மாலைக்காலம் வாராமலிருக்கும்பொழுதே என்னுடைய தாய் என்னைத்தடுப்பாள்; பகலிற்கூட நான் வெளியிற்போயிருந்தால் என் தாய் தந்தைகள் வருந்துவார்கள்; என் பிதா ஆச்சிரமத்திலுள்ளவர்களோடு என்னைத் தேடுவார். முற்காலத்தில் மிக்க துக்கத்தை அடைந்திருக்கிற தாய் தந்தைகளால் "நீ தாமதித்து வருகிறாய்" என்று பலவாறாக நிந்திக்கப்பட்டிருக்கிறேன்; இப்பொழுது நம்மைப் பற்றி அவர்கள் எவ்வாறு வருந்துகிறார்களோ என்று கவலைப்படுகிறேன். முன்பு ஒருகாலத்தில் முதியோர்களான மாதா பிதாக்கள் இருவரும், இரவில் கண்களில் நீர் பெருகுகின்றவர்களும் அதிக துக்கமுள்ளவர்களும் அன்புள்ளவர்களுமாகி "அருமைக்குழந்தாய்! உன்னைவிட்டு ஒரு முகூர்த்தகாலங்கூட நாங்கள் ஜீவித்திருக்கமாட்டோம்; புத்திர! நீ உயிரோடிருக்கும் வரையில்தான் நாங்கள் உயிர் வாழ்வோம். முதுமைப்பருவமுற்று குருடர்களான எங்கள் இருவருக்கும் நீ தான் கண்; உன்னால் நமது குலம் விருத்தியடைய வேண்டும்; எங்களிருவருக்கும் பிண்டமும் கீர்த்தியும் சந்தானமும் உன்னைச் சார்ந்திருக்கின்றன" என்று என்னைப் பார்த்துப் பலமுறை சொன்னார்கள். தாய் முதியவள்; தந்தையும் முதியவர்; அவ்விருவருக்கும் நானல்லவோ ஊன்றுகோல். அவ்விருவரும் இந்த இரவில்

என்னைப்பாராமையால் எவ்வாறு வருந்துவரோ? எந்த நித்திரையால் என் தாயும் தந்தையும் ஐயமுற்றார்களோ? நானும் பெரும் ஆபத்தை அடைந்தேனே அந்த நித்திரையை வெறுக்கிறேன். தாய்தந்தையரைவிட்டு நான் உயிரோடிருக்க விரும்பவில்லை கண்ணில்லாத என் பிதா மனங்குழம்பி ஆச்சிரமத்திலுள்ள ஒவ்வொருவரையும் என்னைப் பற்றி விசாரிப்பார், இது நிச்சயம், கல்யாணி! நான் தாய்தந்தைகளை கவனிப்பதுபோல் என்னுடைய க்ஷேமத்தையுங்கூட கவனிப்பதில்லை. முன்னறி தெய்வங்களாகிய என் அன்னையும் பிதாவையும் காப்பாற்றுவதற்காகவே நான் உயிரோடிருக்கிறேன். அவர்கள் எனக்கு முக்கியமான தெய்வங்கள். என்னால் எப்பொழுதும் வழிபடத்தக்கவர்கள். அவர்கள் விஷயத்தில் இப்படிப்பட்ட இந்த பழமையான விரதமானது எப்பொழுதும் எனக்கு இருக்கிறது" என்றான்.

தர்மாத்மாவும் குருபக்தியுள்ளவனுமான அந்த உத்தமன் இவ்வண்ணம் உரைத்து பெருந்துன்பத்தால் மூடப்பட்டவனாய் இரு கைகளையும் உயர எடுத்துக்கொண்டு உரத்த குரலுடன் அழுதான். துக்கப்பட்டு அழுகின்ற திரனாகிய தன் கணவனைப்பார்த்து சாவித்திரி தன்னிரு கைகளாலும் கணவனது கண்ணீரைத் துடைத்து "என்னால் தவமானது செய்யப்பட்டிருந்தால், என்னால் தானமும் ஓமமும் செய்யப்பட்டிருந்தால், என்னுடைய மாமியாருக்கும் மாமனாருக்கும் பதிக்கும் இந்த இரவானது நன்மையைத் தருவதாகுக. விளையாட்டுக்களிலும் இதற்குமுன் பொய் சொன்னதாக எனக்கு நினைவில்லை. அந்த சத்தியத்தால் என் மாமியாரும் மாமனாரும் உயிரோடிருக்கவேண்டும்" என்று சொன்னாள். சத்தியவான், "மாதா பிதாக்களுடைய தரிசனத்தை விரும்புகிறேன்; தாமதிக்காமல் வருவாய். என் தாய்தந்தை உயிரோடிருக்கப்பார்ப்பேனோ? தாய்க்காவது தந்தைக்காவது ஏதாவது தீங்கு நேர்ந்திருக்கக்கண்டால் நான் உயிரோடிருக்கமாட்டேன். என்னைத்தொட்டு சத்தியம் பண்ணுகிறேன். உனக்கு எண்ணமிருந்தால், நான் உயிரோடிருக்க விரும்பினால் எனக்குப் பிரியத்தைச் செய்யவேண்டுமென்ற எண்ணம் உனக்கு இருந்தால் விரைவாக ஆச்சிரமம் செல்வோம் புறப்படு" என்றான்.

உத்தமியான சாவித்திரி, பிறகு எழுந்திருந்து கூந்தலை முடிந்து கணவனை இருகைகளாலும் தழுவித்தூக்கி நிறுத்தினாள். சத்தியவானும் எழுந்திருந்து கையினால் அங்கங்களைத் துடைத்துக்கொண்டு எல்லாத் திசைகளையும் பார்த்துப் பழக் கூடையைப் பார்த்தான்.

உ

கார்த்திகேயன் துணை.

# நாம் ஏன் பிறந்தோம்?

சச்சிதானந்தம்.

எத்தனையோ ஊழிகாலமாக எண்பத்துநான்கு லக்ஷ யோனி வாய்தோறும் உழன்று பிறந்திறந்து உழன்று பரிக்கின்ற நாம் இப்பொழுது பெறுதற்கரிய பிறவியாகிய மனிதப்பிறவியைப் பெற்றுள்ளோம். அதிலும் சிவாலயங்களில்லாத நாடுகளில் பிறக்காமல் சிவமணங் கமழும் பாரத நாட்டில் பிறந்தோம். அதிலும் கடவுள் இல்லையென்ற மரபில் பிறக்காமல் தெய்வ சிந்தனையையுடைய மரபில் பிறந்தோம் அதிலும் கொலை களவு காமம் பொய் முதலிய துற்குணங்களில்லாத நற்றவத்தோரிடம் பிறந்தோம் அதிலும் ஆண்டவனால் அருளப்பட்ட கனத்த செந்தமிழை வளர்க்கும் பாரத புத்திரர்களிடம் பிறந்தோம்.

---

சாவித்திரி, நாயகனை நோக்கி, நாளை இந்தப் பழங்களைக் கொண்டு போவீர்; இந்த கோடாலியை நான் கொண்டுவருவேன்" என்று கூறி, பழம் நிறைந்த கூடையை ஒரு மரக்கிளையில் தொங்கவிட்டுக் கோடாலியை எடுத்துக்கொண்டு பதியருகில் வந்து, இடத்தோளில் பதியின் கரத்தை வைக்கும்படிச்செய்து, வலக்கரத்தால் அவனைக் கட்டிக்கொண்டு சென்றாள். சத்தியவான், "பயந்தவளே! நடந்து பழக்கமிருப்பதால் எனக்கு வழி தெரிகிறது; மரங்களின் நடுவில் காணப்படுகிற நிலவினாலும் வழி தெரிகிறது; கல்யாணி! எந்த வழியாக வந்தோமோ அந்த வழியில் வந்தபடி செல்வாயாக; ஆலோசியாதே இந்தப் பலாசமரங்களடர்ந்த தோப்பில் வழியானது இரண்டாகப்பிரிகிறது; அதற்கு வடக்கில் எந்த வழியிருக்கிறதோ அந்த வழியில் விரைவாகச்செல் நான் சுகமாக இருக்கிறேன்; மாதா பிதாக்களை நான் பார்க்கவிரைகிறேன்" என்று சொல்லிக்கொண்டே பத்தினியுடன் விரைவாக ஆச்சிரமத்தைநோக்கிச்சென்றான்.

(தொடரும்).

அதிலும் மூகதகத்தின் இரகசியம், விகடம், மந்திரி கதை, இராஜா கதை, நாவல் முதலிய அறிவையொழித்து நரகத்திலுள்ளாக்கும் நூல்களைக் கற்காமல் பெரியோர்கள் கூறிய திருப்புகழ், தேவாரம், திருவாசகம், அருட்பா முதலிய முத்தியை நல்கும் நூல்களைக்கற்ற புண்ணியசீலர்களிடம் பிறந்தோம். அதிலும் (1) பாசப்பெயர், (2) பசுப்பெயர்களில்லாமல், (3) பதிப்பெயரையுடையவர்களுடைய வயிற்றில் பிறந்தோம். இவ்வருமையான பிறவியை நாம் எதற்காகப் பெற்றோம்? இப்பிறவியை நாம் அடைவதற்கு எவ்வளவோ சிரமத்தை யடைந்தோம். வடகடலிலுள்ள நுகத்துளையுள் தென் கடலிலுள்ள ஏர்க்கொம்பு காற்றின் வேகத்தினாலும் அலையின்வேகத்தினாலும் ஒன்றாகச்சேருவது எப்படி அருமையிலும் அருமையோ அதுபோல், நாம் மானிடப்பிறவியை பெறுவதற்கு புல்லாய், புழுவாய், மரமாய், கல்லாய், பாம்பாய், இன்னோரன்ன பிற உயிர்களாகப் பிறந்து, சிறிது சிறிதாகப் புண்ணியத்தைச் செய்து, கிடைப்பதற்கரிய இம்மானிட யாக்கையைப் பெற்றோம். "நூறுகோடி ஜன்மங்களில் நன்றாய் அநுஷ்டிக்கப்பட்ட புண்ணிய காமங்களாலன்றி கிடைப்பதில்லை

..... ...ஸதகோடி ஜன்மஸுக்ருதை புண்யைர் விநாப்யதே

என்று ஆதிசங்கரர் கூறியிருக்கின்றார். மனித தேகத்தால்தான் ஆண்டவனைக்காணமுடியும்; மனித தேகத்தால்தான் பவசாகரத்தை கடக்கமுடியும்; ஆண்டவன் புகழைக் கூறவும் முடியும். வல்லீதேவசேனாகாந்தனுக்குப் பணிவிடைசெய்வதற்குச் சாதகமாகவிருப்பதும் இம்மானிடப் பிறவியேதான்,

இத்யாதி காரணங்களால் தாயுமானாரும்.

எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவிதா
னியாதினு மரிதரிது கா
ணிப்பிறவி தப்பினா லெப்பிறவி வாய்க்குமோ
யாது வருமோ வறிகிலேன் — என்றும

ஔவையார்—

"அரிதரிது மானிட ராதல் அரிது" — என்றும

---

(1) உலகத்தில் அழிதற்பாலனவாகிய பெயர்கள், (2) பிறத்தலை இறத்தலையுடைய சிறுதெய்வப்பெயர்கள், (3) அறுமுகனுடைய பெயர்களும் அவனடியார்களுடைய பெயர்களுமாம்

அறநெறிச்சாரத்தில்—
" மக்க ளுடம்பு பெறற் கரிது " என்றும்
பதிபசுபாசவிளக்கத்தில்—
" மக்க ளாக்கையிற் பிறந்தலே யரிது " என்றும்
" அரிது மானிட யாக்கையிற் பிறத்தல் " என்றும்
திருமந்திரத்தில்—
" பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும் " என்றும்
சிவஞான சித்தியாரில்—
அண்டசஞ் சுவேத சங்கள் உற்பிச்சம் சராயுசத்தோ(டு)
எண்தரு நாலெண்பத்து நான்குநூ றாயிரத்தால்
உண்டுபல் யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல்
கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரியங் காண்
என்றும்
நம் அருணகிரிநாத சுவாமிகள் (அலங்காரத்தில்)—
' பெறுதற் கரிய பிறவியைப் பெற்று" என்றும்
வராஹோபநிஷத் அத்தியாயம் 2—ல்—
" துர்லபம் ப்ராப்ய மானுஷ்யம் " என்றும்
பிரம்மபுராணம் : அத்யாயம் 119-ல்—
" கதம் லப்தே ஜன்ம தேஹம் மானுஷ்யகம்" என்றும்
கருடபுராணம் : உத்தரகாண்டம் அத்யாயம் 2-ல்—
" .........புத்தி மத்ஸு நரா: சிரேஷ்டா " என்றும்
சங்கரர்: விவேகசூடாமணியில்—
" ஜந்தூநாம் நரஜன்ம துர்லபமத: " என்னும்
மிகமிகச் சிறப்பித்தனர்.

மற்ற பிராணிகள் குறுக்காக வளர்கிறது; அவைகளுக்கு திரியக்கு ஜந்து என்று பெயர். மனிதர் மட்டும் மேல்நோக்கி வளர்கின்றனர். இதனாலேயே மனித ஜன்மம் உயர்வென்று அறியலாம். ஆகவே இவ்வரும் பிறவியை எதற்காக நாம் பெற்றோம்? எதற்காக மனத்தை யடைந்தோம்? எதற்காகக் கரத்தைப்பெற்றோம்? ஏனைய பிராணிகளுக்கு மனம் இல்லை. மனிதனென்றால் மனத்தையுடையவன் என்று ஒரு பொருள். எதற்காக ஆண்டவன் நமக்குமட்டும் இந்த உறுப்புக்களை படைத்திருக்கிறானென்று நாம் யோசிப்பதே கிடையாது. ஒரு எஜமானனானவன் ஒரு வேலைக்காரனிடத்தில் ஏர்க்

காலைத்தந்து உழுது பயிர்செய்து ஜீவிப்பாய் என்று உத்தரவிட்டான். அந்த வேலைக்காரனானவன் அக்கலப்பையை எடுத்துக்கொண்டு அதனால் ஆய பயனை அடையாமல் அக்கலப்பைக்கு நல்ல பட்டுவஸ்திரம் கட்டினான், நல்ல பூஷணங்களைப் பூட்டினான், நல்ல வாசனைத்திரவியங்களைப் பூசினான்; அக்கலப்பையைக் காரில் வைத்துக்கொண்டு ஊர்வலமாக வந்தான். பெரியோர்கள் அவனைப் பித்தன் என்று கூறி சிரிக்கமாட்டார்களா? எஜமானன் சினந்து ஆட்களைவிட்டு தண்டனை செய்யமாட்டானா? அதுபோல் நாம் இருக்கின்றோம். எஜமானனாகிய ஆண்டவன் வேலைக்காரனாகிய ஆத்மாவிடத்தில் ஏர்க்காலாகிய மனித ஜன்மத்தைத் தந்து அன்பு என்கிற நிலத்தையுழுது தருமம் என்ற விதையையூன்றி அதனால் விளைந்த சிவானுபோகத்தையுண்டு பிறப்பிறப்பாகிய பசியை நீக்கிக்கொள்வாயென்று கட்டளையிட்டால் நாம் அதை மறந்து இம்மனித சரீரத்துக்கு நல்ல பட்டுவஸ்திரத்தைச் சாத்தி, பூஷணங்களையணிந்து, செனட், அத்தர் முதலிய வாசனைத் திரவியங்களைப்பூசி, ரிக்ஷா, கோச்சு, மாரிஸ்மைனர் (Maurice Minor) முதலிய வாகனாதிகளிலேறி ஊர்வலம் வருகின்றோம். பற்றற்ற பெரியோர்கள் ஏன் நம்மைப்பார்த்து சிரிக்கமாட்டார்கள்? எஜமானனாகிய ஆண்டவன், தூதுவனாகிய இயமனைவிட்டு தண்டனை புரிவான். அந்தோ! மாமிசம், இரத்தம் இவைகளாற் பூசப்பட்டதாயும், தோலினால் மூடப்பட்டதாயும், நாற்கந்தம் உள்ளதாயும், மலமூத்திரங்கள் நிறைந்ததாயும்; கிழத்தனம், துன்பம், வியாதிகளையுடையதாயும், அழியத்தக்கதாயும், அழுக்குள்ளதாயும் இருக்கிற இந்த சரீரத்தை போஷிப்பதிலேயே வாளாநாளைக் கழிக்கலாமா? பாழுங் கிணற்றிலிருக்கிற தவளையைப்போலல்லவோ நாம் சம்சாரத்தில் அழுந்தியிருக்கின்றோம். இதற்காகவா கிடைப்பதற்கரிய பிறவியைப் பெற்றோம்? ஐயோ! வாழைக்குருத்தைப்போல் இம்மனித சரீரத்தை உபயோகமற்றதாக்கி விடுகின்றோம். "சிறந்ததாகிய மானிடப்பிறப்பையடைந்தும் நல்ல நிலைமையிலுள்ள பொறிகளைப் பெற்றிருந்தும், யார் ஆன்மாவுக்கு நன்மையான காரியத்தை யறியவில்லையோ அவன் ஆன்ம பகைஞனாகிறான்.

பிரம்மதர்மத்தில்—

"ப்ராப்ய சாப்யுத் தமம் ஜன்மலப்த்வா சேந்த்ரிய ஸௌஷ்டவம்" என்று கூறப்பட்டிருக்கிறது.

இச்சரீரம் நமக்குச் சொந்தமென்று எவரும் மோசம்போகப் படாது. இச்சரீரம் இரவலாக வாங்கிக்கொண்டு வந்திருக்கிறோம். சரீரத்திற்குடையவன் ஒரு நாளைக்குத் திருப்பி வாங்கிக்கொண்டுபோய் விடுவான். ஆகவே சரீரத்திற்குடையவன் கேளாமுன்னம் மனித சரீரத்தை எதற்காக இரவல் வாங்கிக்கொண்டு வந்தோம். இதனால் என்ன காரியம் செய்யவேண்டும் என்பதை ஒவ்வொருவரும் யோசிக்க வேண்டும். நாம் இதனைச் சுத்தமாகவே மறந்துவிட்டோம்! ஒருவன் மற்றொருவனிடமிருந்து சாமவேதோபநிஷத்து வியாக்யான புத்தகத்தை இரவலாக இரண்டு நாளையில் தருவதாக வாங்கிக்கொண்டு போனான். அப்புத்தகத்தில் நான்கு வரிகளைப்படித்தபின்பு "ஹா! ஹா! இப்புத்தகம் நன்றாக இருக்கிறது, இதற்குக் கடுதாசி அட்டையா கப்போடுவது" என்று அக்கடுதாசி அட்டையை நீக்கிப் பட்டு அட்டை போடுவித்தான்! மறுபடியும் தனக்குத்தானே சொல்லிக்கொள்ளுகிறானவன்—"கிரந்தங்களுக்கெல்லாம் மேலானது உபநிஷத்து! அதற்கு உயர்ந்த அட்டையே இருக்கவேண்டு" மென்று எழுந்திருந்தான்; ஆயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டு தட்டான்வீட்டுக்குப்போய் "இப்புத்தகத்துக்குத் தங்கத்தினால் அட்டையும் அவ்வட்டையின்மேல் விலையுயர்ந்த ரத்தினங்களையும் பதிக்கவேண்டு" மென்று தட்டானிடம் ஆயிரம் ரூபாய் தந்தான். வேலை யாரம்பித்து நடத்திக்கொண்டுவர நாளை மூன்றாயிற்று; அப்போது இரவல் கொடுத்தவன் "இரண்டு நாளையில் திருப்பிக்கொடுக்கிறேன் என்று கூறினானே; இன்னும் வரக்காணோமே" என்று தானே அவன் வீட்டிற்குப் போக, அவன் வீட்டிலில்லாமையால் தட்டான் வீட்டில் சந்தித்தான். பணத்தைச் செலவழித்துத் தன் புத்தகத்தை அலங்கரித்துக்கொண்டிருப்பதையும் பார்த்தான்; ஓகோ! புத்தகத்திற்கே மோசம் வந்துவிட்டாற்போலிருக்கிறதே! என்று நினைத்து இரவல் வாங்கினவனுடைய கையில் அரைகுறையாய் வேலைமுடித்திருக்கிற தன் புத்தகத்தைப் பறித்துக்கொண்டு போய்விட்டான். அப்பொழுது இரவல் வாங்கிக்கொண்டுவந்தவன் யாது நினைக்கின்றான் "இரவலாக வாங்கிக்கொண்டுவந்த புத்தகத்தை இரவல் என்பதை மறந்துவிட்டேன்; எதற்காக இப்புத்தகத்தை வாங்கிக்கொண்டு வந்தோமென்பதையும் மறந்துவிட்டேன், இரவல் புத்தகத்தைச் சொந்தமென்றெண்ணி, அதற்கு அலங்கரித்துக்கொண்டிருந்தேன்; புத்தகத்திலுள்ள கூடார்த்தங்களைத் தெரிந்துக்கொள்ளாமற் போனேன்; இனி என்ன நம்பி

இரவல் கொடுக்கமாட்டான்" என்று பலபல எண்ணி ஏங்குகின்றனன். இத்தன்மைபோல அருமையான மானிடச் சரீரத்தை இரவலாகப்பெற்றிருக்கிற நாம் இச்சரீரம் இரவல் என்பதனை மறந்துவிட்டோம். எதற்காக சரீரத்தை இரவலாக வாங்கிக்கொண்டு வந்தோமென்பதையும் மறந்துவிட்டோம்!

"பரோபகாரார்த்தம் இதம் சரீரம்" மோக்ஷ சாதனத்திற்காகவே இச்சரீரமென்பதனை மறந்து இச்சரீரத்தைத் தனதாக எண்ணி இச்சரீரத்தையே அலங்கரித்துக்கொண்டிருக்கின்றோம். இச்சரீரம் போனால் மறுபடியும் மானிட சரீரம் கிடைக்காது. ஏனெனில் முன் இரவல் கொடுத்து மோசம் போனவன் மறுபடியும் இரவல் கொடுக்கமாட்டான். ஆகையால் இம்மானிட ஜன்மத்தையடைய முடியாமற்போகிறோம். ஆகவே, இந்த யாக்கை இருக்கும்பொழுதே நற்கருமங்களைச்செய்யவேண்டும். காயம், வாக்கு, மனம் என்ற திரிகரணங்களாலும் எப்பொழுதும் பாபத்தைச்செய்யப்படாது. பிறரது பொருளையடையவேண்டுமெனனும் விருப்பம், பிறரது கேட்டைக் கருதுதல், பரகதியும், கடவுளும் இல்லை என்ற கருத்து, இம்மூன்றும் மனதினால் செய்யும் பாபங்களாகும், கடுஞ்சொல், பொய், புறங்கூறுதல், பயனில்சொல், இந்நான்கும் வாக்கினால்செய்யும் பாபம்; கொடாத பொருளைக் கவர்தல், உயிர்களைக் கொல்லுதல், பிறர் மனைவியோடு சேருதல் இம்மூன்றும் உடலினால் செய்யும் பாபம்! இதனை பிராம்மதருமத்தில் முறையே

பரத்ரவ்யேஷ்வபித்யாநம் மநஸா(அ)நிஷ்டசிந்தனம்
விததாபி நிவேஃஸ்ஸச த்ரிவிதம் கர்மானசம் எனவும்

பாருஷ்ய மன்ருதந்சைவ பைசுன்யந்சாபிசர்வச. அசம்
பத்தப்ரலாபஸ சவாங்மயம் ஸ்யாச்சதுர்விதம் என்றும்

அதத்தானுமுபாதானம் ஹிம்சாசைவாவிதானத.
பாதாரோபசேவாசசாரீரம் த்ரிவிதம் ஸ்ம்ருதம் எனவும்

கூறப்படுகிறது.

மனதினால் கெட்ட நினைவை நினைத்துப் பாவத்தை செய்கின்றோம். வாயினால் பொய் பேசி பாவத்தை செய்கின்றோம். உடலினால் பிறமாதரைத் தழுவுதல் முதலிய கெட்ட காரியங்களைச் செய்து பாவத்தை சம்பாதித்துக்கொள்ளுகிறோம். இதற்காகவா மனம்,

வாக்கு, காயங்களை நடத்த ஆண்டவன் தந்திருக்கின்றார். வம்புகளும் பொய்களும் பேசினால் "வாக்கைக்கொடுத்துப்பயன் இல்லை" என்று வாயில்லாத ஜந்துக்களாகப் பிறக்கவைப்பான். ஆகவே, நம ஆயுள் உள்ளவரை நல்ல காரியங்களைச் செய்யவேண்டும். நமக்கு ஆண்டவனால் தரப்பட்ட ஆயுள் நூறு வருடமாகும். வேதத்தில் 'சதாயு: புருஷ:' நூறு வயதுடைய மனிதன் என்றும் பர்த்ருஹரி ஆயுர் வர்ஷ சதம் நிர்ணம்.......... என்றும் கூறியிருக்கின்றார். நமக்கு ஆயுள் இருக்கும்போதே மனித சரீரத்தினால் அடையவேண்டிய பேற்றை அடைந்தேதீரவேண்டும். ஏனெனில

'இப்பவோ பின்னையோ மத்யகாலத்திலோ
இரவிபடும் நேரமதிலோ
இரவிலோ பகலிலோ உதயகாலத்திலோ
எந்தெந்த நேரமதிலோ
அப்பிலோ தீயிலோ நாயிலோ பேயிலோ
அரவிலோ இடியதனிலோ
ஆறாத புண்ணிலோ அடர்நோவு தன்னிலோ
ஆயுத வகைகள் எதிலோ
செப்பரிய வீட்டிலோ மேட்டிலோ காட்டிலோ
தெருவிலோ திண்ணை தனிலோ
செகந்தன்னில் எந்தெந்தவிட மதனிலோ
சீவன் விடுகின்ற நேரம்
........ ... . .."

என்று கூறினாற்போல்

எப்போ தாகிலும் கூற்றுவன் வருவான்
அப்போ தந்தக் கூற்றுவன் தன்னைப்
போற்றினும் போகான் பொருளொடும் போகான்
சாற்றவும் போகான் தமரொடும் போகான்
நல்லா ரென்னா னல்குர வறியான்
தீயா ரென்னான் செல்வரென் றுன்னான்
தரியா னொருகணம் தறுகணாளன்
உயிர்கொடு போவா னுடல்கொடு போகான்

ஆகவே இயமன் வந்து உடல் கொடுபோவதற்குமுன் மனதினால் நல்லகாரியங்களைச்செய்யவேண்டும். ஆண்டவருடைய ஆறெழுத்

தைச்சிந்திக்கவேண்டும், மனதைத்தந்த மஹானுபாவனுடைய பாதத்தைத் தியானம் செய்யவேண்டும். தியானம் எப்படிச் செய்யவேண்டுமெனபதனை யஜுர் வேதத்தில் அமிர்தநாதோபநிஷத்தில்

அந்தவத்ப ஸ்யரூபாணி சப்தம்பதிரவச்ருணு
காஷ்டவத்பஸ்ய வைதேஹம் ப்ராசாந்தஸ்யேதிலக்ஷணம்

(இதன் பொருள்) (குருடனைப்போல் ரூபங்களைப்பார்ப்பான், செவிடனைப்போல் சப்தங்களைக்கேட்பான், கட்டையைப்போல் சரீரத்தைப் பார்ப்பான் இதுவே சாந்தியை அடைந்தவனுக்கு லக்ஷணம்).

வாக்கை எதற்காகப்பெற்றோம்? ஆண்டவனுடைய புகழைப் பேசுவதற்காகவே. தோத்திரம் செய்யவேண்டும், சத்தியத்தைச் சொல்லவேண்டும்.

உடம்பை எதற்காகப்பெற்றோம்: கோயிலுக்குப்போய் வலம் வருவதற்காக, கண்களால் அவன் அழகைப்பார்க்கவேண்டும், கரங்களால் மலர்களைக் கொண்டு ஆண்டவனை அர்ச்சிக்கவேண்டும்

பீடுறு மானிடப் பிறப்பு வாய்ந்துநல்
லேடவிழ் மலரினா லிறையைப் பூசியார்
பாடமை நாளெலாம் பாழுக் கிறைப்பவர்
மூடரை எண்ணுங்கால் முந்தி நிற்பரோ.

—பிரபுலிங்கலீலை.

நாம் ஒரு பச்சிலையைக் கோழிக்கொடியோன் பாதத்தில் சாத்தினால் உடனே மோக்ஷ உலகம் உண்டாகும். பிரமோத்ரகாண்டத்தில்:

பத்ர மாத்ரேண சந்துஷ்டோ யோததாதீ நிஜ:
பதம் அஹோ ஈஸ்வர பூஜாயா மஹாத்மியம் விஸ்மயாவஹம்

(இ-ள்) 'ஒரு பச்சிலையால் பிரியமடைந்த ஈச்சுரன் தனது பதத்தையளித்தருளுகின்றான். ஐய! பரமேஸ்வரனுடைய பூசையின் மான்மியம் வியப்பாயிருக்கிறது) எனவே கரங்களினால் மலர்களைக் கொண்டு வாருலேயனைப்பூசித்து வந்தனைசெய்யவேண்டும் அதுதான் கரம் படைத்ததன் லாபமாகும். சுருங்கக்கூறுமிடத்து ஆவி; பொருள், உடம்பு மூன்றையும் ஆண்டவனுடைய விஷயத்திலேயே உபயோகித்தல் வேண்டும். அப்பொழுதுதான் ஆன்ம லாபத்தையடை

வோம். இனிப் பிறவா நெறியைப் பெறுவோம். இதற்காகத்தான் நாம் பிறந்தோம்,

சிந்தனைநின் றனக்காக்கி நாயினேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்காக்கி
வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கி யைம்புலன்களார
வந்தனை யாட்கொண் டுள்ளேபுகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே இரண்டு மிலி தனியனேற்கே.

—வாதவூரர்.

---

## உபதேசம்

பிறரிடத்திற் பேசும்போது இனிமையாகப் பேசு, கடிந்து பேசாதே. உன்னிடத்தில் பிறர் கடிந்து பேசுங்கால் உன் மனம் எவ்வாறு வருந்துகிறது? அதுபோல் நீயும் கடிந்து பேசுங்கால் பிறர் மனம் வருந்தும். பகைவரிடத்திலுங்கூட இனிமையாகப் பேசு. உன்னுடைய இனிய மொழிகளால் பகைவருள்ளமும் கரைந்துவிடும்.

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருக்கக் காய கவர்ந் தற்று.

என்ற உத்தரவேத சத்திய வாக்கை ஆழ்ந்து நோக்குக. நீ பேசுகின்ற ஒவ்வொரு சொல்லிலும் அமிர்தம் கலந்திருக்கட்டும். விடங் கலந்த வார்த்தையை எப்போதும் மறந்தும் பேசாதே. தாழ்ந்தவரிடத்தும், புதியவரிடத்தும், மற்றெல்லோரிடத்திலும் இனிமையாகப் பேசு.

உ

ஓம் குஹாயநம:

# திருப்புகழமிர்தம்.



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 2 Vol. 2 | ஈஸ்வர ௵ மாசி ௴ 1உ பிப்ரவரி—1938 | இதழ் 11. No. 11.

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

உருக்கம் பேசிய நீலியர் காசுகள்
பறிகுந் தோஷிகள் மோகவி காரிகள்
உருட்டும் பார்வையர் மாபழி காரிகள் மதியாதே
உரைக்கும் பீரிகள் கோளர வாமென
உடற்றுந் தாதியா காசள வேமனம்
உறைக்குந் தூரிகள் மீதினி லாசைகள் புரிவேனோ
அருக்கன் போலொளி வீசிய மாமுடி
யனைத்துந் தானழ காய்நல மேதர
அருட்கண் பாாவையி னலடி யாாதமை மகிழ்வோடே
அழைத்துஞ் சேதிகள் பேசிய காரண
வடிப்பந் தானென வேயெனை நாடோறும்
அதிக்கஞ் சேர்தர வேயரு ளாலுட னினிதாளாய்
இருக்குங் காரண மீறிய வேதமும்
இசைக்குஞ் சாரமு மேதொழு தேவர்கள்
இடுக்கண் தீர்கன னேயடி யாாதவ முடன்மேவி
இலக்கந் தானென வேதொழ வேமகிழ்
விருப்பங் கூர்தரு மாதியு மாயுல
கிறுக்குந் தாதகி சூடிய வேணிய னருள்பாலா

திருக்குந் தாபதா வேதிய ராதியர்
துதிக்குந் தாளுடை நாயக னாகிய
செகச்செஞ் சோதியு மாகிய மாதவன் மருகோனே
செழிக்குஞ் சாலியு மேகம ளாவிய
கருப்பஞ் சோலையும் வாழையு மேதிகழ்
திருச்செந் தூர்தனில் மேவிய தேவர்கள் பெருமாளே.

## பதவுரை.

இருக்கும் - இருக்குவேதமும், காரணம் மீறிய வேதமும் - காரணங்களைக் கடந்து நிற்கும் (தனிப் பெருஞ்சிறப்புடைய) தமிழ் வேதமும், இசைக்குஞ்சாரமும் - அவ்வேதங்களில் மறைந்துள்ள உட்கருத்துக்களைத் தெளிவாக விளக்கிக்கூறும் வேதசாரமாகிய ஆகமங்களும், (ஏ - பிரிநிலை) தொழ - தொழுதுவழிபட நின்றவரும், தேவர்கள் இடுக்கண்தீர் - தேவர்களுடைய துன்பத்தைத் தீர்த்தருளியவருமாகிய, கனனே - கண்ணியமுள்ளவரே!, தவமுடன் மேவி - தவவொழுக்கத்துடன் வந்து, இலக்கந்தான் என - இலட்சக்கணக்கான, (ஏ - அசை) அடியார் தொழ - அடியார்கள் தொழுது வழிபட, மகிழ் விருப்பம் கூர்தரு - மகிழ்ந்து அவ்வடியார்கள்மீது அன்புகொள்ளும், ஆதியுமாய் - முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருளுமாய், உலகு இறுக்கும் - உலகங்களை எல்லாம் (சர்வசங்காரகாலத்தில்) சங்கரிக்கும் தனிப்பெருந்தலைவராய், தாதகி சூடிய வேணியர் - ஆத்திமலரையணிந்துகொண்டுள்ள சடைமுடியுடையவராய் எழுந்தருளியுள்ள சிவபெருமான், அருள்பாலா - அருளிய திருக்குமாரரே! திருக்கும் தாபதர் - அறிவுக்கண்ணுடன் விளங்கும் முனிவர்களும், வேதியர் ஆதியர் - வேதங்களையுணர்ந்த அந்தணர் முதலியோர்களும், துதிக்கும் தாளுடை நாயகன் ஆகிய - தோத்திரம் புரியும் திருவடிகளையுடைய தேவர்களுக்குத் தலைவரும், செகச் செஞ்சோதியும் ஆகிய மாதவன் - செவ்விய செகச்சோதியாய் விளங்குபவருமாகிய திருமாலினது, மருகோனே - மருகரே! செழிக்கும் சாலியும் - செழிப்புடன் வளர்ந்துள்ள நெற்பயிரும், மேகம் அளாவிய கருப்பஞ் சோலையும் - மேகமண்டலத்தை அளாவிவளர்ந்துள்ள கருப்பஞ்சோலையும், வாழையும் - வாழைமரங்களும், (ஏ - அசை) திகழ் - எங்கும் விளங்கப்பெற்றுள்ள, திருச்செந்தூர்தனில் மேவிய - திருச்செந்தூர் எனும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, தேவர்கள் பெருமாளே - தேவர்களுக்குத் தேவ

ராக விளங்குபவரே! உருக்கம் பேசிய நீலியர் - மனம் உருகும்படி நயமாகப் பேசுகின்ற கொடியவரும், காசுகள் பறிக்கும் தோஷிகள் - பணத்தைப் பிடுங்கும் பாவிகளும், மோகவிகாரிகள் - மோகத்தால் மனோவிகாரமுள்ளவர்களும், உருட்டும் பார்வையர் - சமயத்திற்குத் தக்கபடி கீழும் மேலும் பக்கமுமாகக் கண்களை உருட்டிப்பார்க்கும் தன்மையுடையவர்களும், மாபழிகாரிகள் - பெரிய பழிகளைக் கூறுபவர்களும், மதியாதே உரைக்கா பீரிகள் - ஒருவரையும் மதியாமற்படி அலறிச்சத்தமிட்டுப் பேசுகின்றவர்களும், கோள ஆரவார என - விடத்தையுடைய பாம்பைப்போல உடற்றும் சாதியர் - வருத்துகின்ற சாதிகளும், காசு அளவே மனம் உறைக்கும் தூரிகள் மீதினில் - அவரவர்கள் தரும் பணத்திற்குத் தக்க அளவிலேயே மனத்தை வைக்கும் துன்மார்க்கருமாகிய விலைமகளிர்மேல், ஆசைகள் புரிவேனோ - இனி அன்பு கொள்வேனோ? (கொள்ளேன்) அருக்கன்போல் - சூரிய பகவானைப் போல், ஒளிவீசிய - பிரகாசிக்கின்ற, மாமுடி அனைத்தும் தான் - பெருமைமிக்க இரத்தின கிரீடங்கள் யாவும், அழகாய் நலமே தர - காண்பவர்களுக்கு அழகாக விளங்கி நன்மையையே வழங்க, அருள்கண் பார்வையினால் - கருணை பொழியும் திருக்கண்பார்வையால், அடியார்தமை மகிழ்வோடே அழைத்தும் - அடியார்தமை மகிழ்ச்சியுடன் வலிய அழைத்தும், சேதிகள் பேசிய காரண - ஞானச் செய்திகளைப் பேசுகின்ற காரணப்பொருளே!, வடிப்பம் தான் என (ஏ-அசை) செப்பம் என்று சொல்லும்படி, நாள்தொறும் அதிக்கம் சேர்தர - (அடியேன்) மென்மேலும் மேன்மையடையும் வண்ணம், அருளால் உடன் - தமது திருவருளால் இக்கணத்திலேயே, எனை இனிது ஆள்வாய - அடியேனை இனிது ஆட்கொண்டருள்வீர்.

## பொழிப்புரை.

இருக்கு வேதமும் காரணங்களைக் கடந்துநிற்கும் பெருஞ் சிறப்புடைய தமிழ் வேதமும், அவ்வேதங்களில் மயங்கக்கூறிய உண்மைப் பொருள்களைத் தெளிவுறக் கூறும் வேதசாரமாகிய ஆகமங்களும் தொழுது வழிபாடுசெய்ய நின்றவரும், தேவர்களது துன்பத்தை நீக்கி யருள்பவருமாகிய கண்ணியமுள்ளவரே! தவ வொழுக்கத்துடனடைந்து இலட்சக்கணக்கான அடியார்கள் வணங்க மகிழ்ந்து, அவர்கள்மீது அன்பு கொள்ளும் ஆதி பராபரவஸ்துவாக விளங்குபவ

ரும், சர்வ சங்காரகாலத்தில் உலகத்தைச சங்கரிப்பவரும், ஆத்தி மலரைச் சூடிய சடாமுடியை யுடையவருமாகிய சிவபெருமானருளிய திருக்குமாரரே !, அறிவுக்களைகள விளங்கப்பெற்ற முனிவர்களும் வேதியர முதலிபவரும் துதிக்கும திருவடிக்கமலங்களையுடைய தேவ சிரேட்டரும, செகசசெஞ் சோதியுமாகிய நாராயணரது மருகரே ! செழிப்புடன் வளர்ந்துள்ள செந்நெற்பயிரும மேகமண்டலம்வரை வளம்பெறறோங்கிய கருப்பஞ்சோலையும வாழையும் நெருங்கி விளங்கிக்கொண்டிருக்கும் திருச்செந்தூர என்னும திவ்ய க்ஷேத்திரத்தில் எழுந்தருளிய தேவர்களுக்குத தேவரே ! உருக்கமாகப்பேசி மனத்தைக்கவரும நீலிகளும, பணத்தைப் பறிக்கும தோஷிகளும், மோகத்தால் விகாரத்தன்மையுற்றவர்களும, மேலும் கீழும் பக்கமுமாக விழிகளை உருட்டிப்பார்க்கும் பார்வையுடையவர்களும, பெரிய பழியைச் சுமக்கும் பழிகாரிகளும், ஒருவரையும் மதியாமற்படி வேகமாகப் பேசுபவர்களும, நச்சுப்பற்களையுடைய அரவத்தைப்போல் பிறரைத் துன்புறுத்தும தாசிகளும், அவரவர்கள தரும் பணத்தின் அள வாகவே மனத்தைச் செலுத்தும் துன்மார்க்கிகளுமாகிய பொருட் பெண்டிர்மீது அடியேன் இனி ஆசைவைபபேனோ ? (ஒருபோதும் வையேன்) சூரியனைப்போல் ஒளிவீசுகின்ற பெருமைமிக்க மணி மகுடங்கள் அனைத்துமே அழகாகப் பார்ப்பவர்களுக்கு நன்மையே வழங்க, திருவருள்பொழியும் திருக்கண்பார்வையால் அடியார்களைச் சந்தோஷத்துடன் வலிய அழைத்தும் ஞான வுரைகளைப் பேசுகின்ற காரணவஸ்துவே ! நடுநிலைமை என்று சொல்லும்படி அடியேனை தினந்தோறும் மென்மேலும் மேன்மையை அடையுமாறு தமது திருவருளால் உடனே அடியேனை இனிது ஆட்கொண்டருள்வீர்.

## விரிவுரை.

அருக்கன்போல் . . . . . நலமேதர :—

முருகப்பெருமானுடைய ஆறு திருமுகங்களிலுமுள்ள எல்லா மணிமகுடங்களும் மிக்க ஒளியுடன் ஆறு இளங்கதிர்களைப்போல் பிரகாசித்துக்கொண்டு தெரிசிப்போர்களுக்கு நலன்களையே வழங்கிக் கொண்டிருக்கின்றன.

அருட்கண்பார்வை :—

குமாரக்கடவுளது பன்னிரண்டு விழிகளிலும் கடலைப்போல் அருள்வெள்ளம் வழிந்துகொண்டேயிருக்கிறது.

"மறுவறு கடலென மருவப ணிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தோருபால்" —வகுப்பு.
"துங்கரிள் பனனிரு கருணை விழிமலரும்"
—திருப்புகழ்.

அக் கருணைபொழுகுங் கடைக்கணபாாவை ஒருமுறை நமது மேல் சறறுபட்டவுடனே மும்மலங்களும வெநது நீறுகிவிடுகின்றன; மெய்ஞ்ஞானம மிளிர்கின்றது; அப பார்வையின் பெருமைதான என்னே! என்னே! அதனைபபெறற பாம குருமூாததியாகிய அருணகிரியடிகளின் பாக்கியந்தான் எனனே!

"ஆணவ அழுக்கடையும ஆவினைய விளககியநு
பூதியடை விததோரு பாாவைக்காரனும்"
—வகுப்பு.

"கனகத்தினு நோக்கினி தாயடி
யவாமுததமி ழாறபுக வேபர
கதிபெறறிட நோககிய பார்வையு மறவேனே"
—திருப்புகழ்.

கந்தப்பெருமானுடைய அக் கடைக்கண் அருட்பாாவையால் இவை இவையுண்டாகுமென ஆசிரியர் பிறிதோரிடததில் கூறுமாறுங் கண்டு மகிழ்க.

"அலைகடல் வளைந்துடுத்த எழுபுவி புரந்திருக்கும்
அரசென நிரந் தரிக்க வாழலாம்
அளகையர சனறனக்கும் அமாரா சன்றனக்கும்
அரசென அறஞ்செலுத்தி யாளலாம்
அடைபெறுவ தேன்றமுததி அதிமதுர செந்தமிழ்க்கும்
அருள்பெற நினைந்த சித்தி யாகலாம்
அதிரவரு மெனறுமுட்ட அலகில்வினை சண்டைநிற்க
அடலெதிா புரிந்து வெறறி யாகலாம்
இலகியந லஞ்செய்புட்ப கமுமுடனிறம் வெளுத்த
இபவர சேனும் பொருப்பு மேறலாம்
இருவரவா நினறிடத்து மேவரேவ ரிருந்திடத்தும்
ஒருவனிவ னென்றுணாச்சி கூடலாம்
எமபடர்தோ டாந்தழைககில் அவருட னெதிர்ந்துளுட்க
இடியென முழங்கி வெற்றி பேசலாம்
. . . . . . . . . . . . ,
பாருளீர் . . . வேலிருன். . . கடைக்கணியலையும்
நினைந் திருக்க வாருமே"

**அடியார்தமை மகிழ்வோடே அழைத்தும் :—**

கருணைக் கடவுளாதலால் கந்தப்பெருமான் அடியார்களை மகிழ்ந்து வலிய அழைத்து நல்லுரைகளைஉபதேசித்து அருள்புரிகிறார்.

"அடியவ ரிச்சையில் எவைஎவை யுற்றன
அவைதரு வித்தருள் பெருமாளே"
—திருப்புகழ்.

காரண :—

உலகங்களுக்கும், சிருட்டியாதி யைந்தொழில்களுக்கும், பிற வற்றிற்கும் காரணமாய் நின்ற முழுமுதற் கடவுள் முருகப்பெருமானேயாவர் இதனை, அப்பெருமானது திருவருட்டுணை கொண்டு ஞானவிழியால் நோக்கிய சூரபன்மன் வாயார வாழ்த்தி வழுத்துதலைக்கண்டு தெளிக.

கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்
மாலயன் றனக்கு மேனை வானவர் தமக்கும் யார்க்கு
மூலகா ரணமாய நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ.

இருக்குந் . . . . தொழு .—

குகமூர்த்தி வேதாகமங்களால் தொழப்பட்டவர் என்பதை
"ஆலமுண்ட கோனகண்ட லோகமுண்ட மால்விரிஞ்சன்
ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாளும்" —திருப்புகழ்.

தேவர்கள் இடுக்கண் தீர்த்தனனே :—

சூராதியவுணர்களால் நூற்றெட்டுயுகங்களாக தேவர்கள் துன்புற்று இனி இன்புறுங்காலமும் எய்துமோ? என்று ஏங்கி இளம் பூரணனாகிய எம்பெருமானிடம் தமதுகுறைகளை முறையிட, அறுமுகக் கடவுள் போந்து அவுணர்களது மறச் செயலையழித்து அறநெறியை வளர்த்து அமரர்கள் அல்லலை நீக்கி என்றுமழியா இன்பத்தை வழங்கினர்.

"அடியவர் வினையும் அமரர்கள் துயரும்
அறஅரு ளுதவு பெருமாளே.
"வானுடரசாளும்படிக்கு வாவா வெனவா வெனறழைத்து
வானோர் பரிதாபந் தவிர்த்த பெருமாளே"

## கருத்துரை.

வேதாகமங்களால் தொழப்பட்டவரே! தேவர்துயர்தீர்த்த கனம் பொருந்தியவரே! ஆதிபராபரமுதல்வரும் சர்வசங்காரகர்த்தரும ஆத்திமலரணிந்த வேணியருமாகிய சிவகுமாரரே! முனிவர் மறையோர் முதலியோர் துதிக்கும் செகச்சோதியாகிய திருமகள் கொழுநர் மருகரே! திருச்செந்திலாதிப! தேவதேவரே! பொருள். பறிக்கும் இருமனப் பெண்டிராகிய விலைமகளிர்மீது அன்பு கொள்வேனோ? கொள்ளேன்); மென்மேலும் நன்மையடையுமாறு அடியேனை உடனே யாட்கொள்வீர்.

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(300-ம் பக்கத் தொடர்ச்சி.)

जनित्री पिता च स्वपुत्रापराधम्
सहेते न किं देव सेनाधिनाथ ।
अहं चाति बालो भवान् लोकतातः
क्षमस्वापराधं समस्तं महेश ॥

(30) ஜனித்ரீ பிதாச ஸ்வபுத்ராபராதம்
ஸஹேதே நகிம் ? தேவ ஸேனாதி நாத |
அஹஞ் சாதி பாலோ பவான் லோகதாத:
க்ஷமஸ் வாபராதம் ஸமஸ்தம் மஹேச ||

## பதவுரை.

ஹே தேவ ஸேனாதி நாத! மஹேச! - ஓ தேவர்களுக்குச் சேனாபதியாகிய மஹேசுவரனே!

ஜனீத்ரீ பிதாச ஸ்வபுத்ராபராதம் - தாயும் தந்தையும் பிள்ளையின் குற்றத்தை

நஸஹேதே கிம்? - பொறுக்கின்றார்களா? இல்லையா?

அஹம் ச அதிபால: - நானோ சிறுகுழந்தை,

பவான் லோக தாத: - தேவரீரோ உலகத்திற்குத் தந்தை,

அத: அபராதம் ஸமஸ்தம் க்ஷமஸ்வ - ஆகையினால் குற்றம் யாவும் பொறுத்தருள வேண்டும்.

## பொழிப்புரை.

ஓ தேவ ஸேனாதிபதியாகிய பரமேசுவரரே! தாய் தந்தைகள் பிள்ளைகளின் பிழைகளைப் பொறுப்பது இயற்கையாதலால் உலகத்திற்கெல்லாம் தந்தையாகிய தேவரீர் சிறுவனாகிய அடியேனுடைய பிழைகளைப் பொறுத்துக் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கிறீர்.

இதனால் முருகக்கடவுளே உலகத்திற்கு முதற்காரணரெனத் தெளிவாகக் கூறப்பட்டது.

नमः केकिने शक्तये चापि तुभ्यम्
नमस्छागतुभ्यं नमः कुक्कुटाय ।
नमःसिन्धवे सिन्धुदेशाय तुभ्यम्
पुनःस्कन्दमूर्ते नमस्ते नमोऽस्तु ॥

(31) நம: கேகினே சக்தயே சாபி துப்யம்
நமஸ் சாக! துப்யம் நம: குக்குடாய।
நம: ஸிந்தவே ஸிந்துதேசாய துப்யம
புன: ஸ்கந்தமூர்த்தே! நமஸ்தே நமோஸ்து ॥

## பதவுரை.

கேகினே நம: சாக துப்யம நம: - சுவாமியின் வாகனங்களாகிய மயிலுக்கும் ஆட்டிற்கும நமஸ்காரம்,
சக்தயே சாபி துப்யம - வேலாயுதத்திற்கும் நமஸ்காரம்.
குக்குடாய நம: - கொடியாகிய கோழிக்கும நமஸ்காரம்,
ஸிந்தவே நம: - சமுத்திரத்திற்கும நமஸ்காரம்,
ஸிந்துதேசாய துப்யம நம: - சுவாமி வாசமபண்ணும சமுத்திரக்கரைக்கும் நமஸ்காரம,
ஹே ஸ்கந்தமூர்த்தே - ஓ ஸ்கந்தமூர்த்தியே,
தே புன: நம: அஸ்து நம: அஸ்து - தேவரீருக்கும் மீண்டும்மீண்டும் நமஸ்காரம்,

## பொழிப்புரை.

முருகக்கடவுளின் வாகனங்களாகிய மயிலையும் ஆட்டினையும் வேலையும் கொடியாகிய கோழியையும், எதிரில் விளங்கும் சமுத்திரத்தையும், சுவாமியின் வாசஸ்தலமாகிய சமுத்திரக்கரையையும், சுவாமியையும் மீண்டும் மீண்டும் நமஸ்கரிக்கின்றேன்.

இதனால் முருகக்கடவுளை அடுத்தவர்களும் அனைவர்களாலும் வணங்குதற்குரியவர் எனத் தெரிவிக்கப்பட்டது.

(தொடரும்).

உ

ஓம் கந்தாய நம:

# கந்தர் திருவிளையாடல்

(300-ம் பக்கத் தொடர்ச்சி.)

## முருகக்கடவுள் விஸ்வரூபம்.

இந்திரன் முதலிய இமையவர்கள் இவ்வாறு விண்ணப்பம்புரிய எந்தை கந்தவேள் அது கேட்டு, "நம்மை நீங்கள் ஒரு பாலன் என்று நினைந்து பொருதீர்கள், நமது வன்மையையும் பெருமையையும், இன்னும் நீங்கள் உணரும்வண்ணம் காட்டுவோம்" என்று திருவாய்மலர்ந்து எட்டுத்திக்குகளும், பதினாறு உலகங்களும், எட்டு மலைகளும், ஏழு கடல்களும், புறக்கடலும், சக்கரவாளகிரியும், வெவ்வேறண்ட நிரைகளும், சருவான்மாக்களும், பிரமவிட்டுணு உருத்திரர்களும் அடங்கிய பரமேசுர ரூபத்தைக்கொண்டருளினர்.

எண்டிசையு மீரேழு திறத்துலகு மெண்கிரியு மேழு கடலுந்
தெண்டிரையு நேமிவரை யும்பிறவும் வேறுதிரி பாகியுள சீர்
அண்டநிரை யானவு மனைத்துயிரு மெப்பொருளு மாகி யயனும்
விண்டுமா னுஞ்செறிய வோருருவு கொண்டனன் விறற் குமரனே.

ஏழு பாதாள லோகங்கள் திருவடியிலும், ஏழு தீவுகளின் புடவி கணைக்காலிலும், ஏழுகடல்கள் உடுத்த உடையிலும், திசைகள் புயங்களிலும், ஆகாயம் நாபியிலும், தியுவென்னும் சுவர்க்கஞ் சென்னியிலும், சந்திரன் சூரியன் அக்கினி என்பன அழகிய மூன்று கண்களிலும், மேலாய மேகங்கள் கேசங்களிலும், விண்மீன்கள் அக்கேசாலங்கிருத மலர்நிலைகளிலும், சிவபரம்பொருள் ஆன்மாவிலும் (சிவசத்தியாகிய) கௌரி மதியிலும், (விட்டுணுவாகிய) சனார்த்தனர் இடப்பாரிசத்திலும், பகவானாகிய பிரமதேவன் வலப்பாரிசத்திலும், பாரதி வேதவாக்கிலும், இலக்குமி திருநிலையிலும், பிராணன்முதலிய பத்து வாயுக்களும் வாயுநிலையிலும், காலாக்கினி ருத்திரன் சீற்ற நிலையிலும், அக்கினிதேவன் சாடராக்கினியிலும், அனந்தாதி மாநாகங்கள் நூபுரம் முதலிய காலணிகளிலும், ஓடதியனைத்தும் உரோமங்களிலும், அண்டகோடிகளெல்லாம் அவ்வுரோமங்களின் மேய பேன்

முட்டை நிலையிலுடாகக் காணப்பட்டுச் சுடர்கோடி பகற்கதிரெனக் குளிர் கோடி இராக்கதிரென, மின்னிர்கோடி காலாக்கினியெனப் பிரகாசியாநின்ற தனது பரமாற்புத வுருவுள்ள அப்பரமேசுவர வடிவினை அளப்பரு மகிமையுடைய அருதாராகிய சுப்பிரமண்யமூர்த்தி காட்டியருளினார். அவ்வடிவினொளியினால் தரிசித்த தேவர்களது விழிகள் (கணப்போது) பார்வையின்றி மாழ்கின. சுரர்களாகிய பிரமவிட்டுணுக்கள முதலிய தேவசிரேட்டரனைவரும் கந்தக்கடவுளது அளவிலாத் தேஜோ மண்டபத்தில் ஆயிரத்தில ஓரமிச அளவேயறிந்தனர். (அதிகமறிய வலியிலராயினர்).

ஸப்த பாதாள பாதந்தம் ஸப்தத்வீ போர்விஜங்கமம் |
ஸப்தார்ணவ பரீதாங்கம் திக்பாஹும் வ்யோம நாபிகம் ||
த்யுசிரச் சந்த்ர ஸூர்யாக்நி நயநத்ரய போசலம் |
பாத்ஜல தகேசாந்தம் தாராதலோம துப்திதம் ||
சிவச்சாத்மா மதீர்கௌரீ வாமபார்ச்வம் ஜநார்த்தந: |
தக்ஷிணம் பகவாந்ப்ரஹ்மா பாரதீ வைதிக்சவாக் ||
லக்ஷ்மீர் லக்ஷ்மீச்சபவனம் ப்ராஹ்ருதி தாபேதபாத் |
மந்யு காலாக்நி ருத்ரோக்நிர் ஜாடரஸ் ஸமுதாஹ்ருத: ||
அநந்தாதி மஹாநாகா பாததாபுர ஹம்சா. |
ரோமாண்யோஷத யோபூரி பூதாண்டாந்யண்டகோடய. ||
தத்கோடி ஸூர்யஸங்காசம் கோடிசந்த்ராம்சுசீதளம் |
கோடி காலாக்நி தேஜஸ்கம் பரமம் பரமாத்புதம் ||
அநர்சயதமேயாத்மா ப்ரஹ்மணோ ஹ்யாஸம்பவ |
தேஜஸாதஸ்ய தேவாநாம் சக்ஷூம்ஷ்யபூத்தி க்ருதாந்யஹோ ||
ததஸ்தே விபுதேந்த்ராத்யா ப்ரஹ்ம விஷ்ணவாதயஸ்ஸுரா: |
தந்தேஜோ மண்டலஸ்யைதே ஸஹஸ்ராம்சம லோசயந் ||

இவ்வாறு ஆயிரத்தில் ஓரமிசத்தை அவனருளாற் காணுந திவ்விய விழிகளைப்பெற்ற விட்டுணுமுதலிய தேவர்கள் முழந்தாள்வரையிலுமுள்ள உரோமங்கள் ஒரோவொன்றிலும் ஆயிரக்கணக்கான பலகோடி பொன்முட்டைகள அடுக்கடுக்காயச் செறிவுற்றிருத்தலையும் பிரமாண்டகோடிகளாம், அம்முட்டைகளுள் உலகங்களையும், அவையவற்றுள் அதனையதனைச்சார்ந்த இறப்பு நிகழ்வு வரவு என்னுங் காலங்கட்குரிய பலபுவனங்களையும், மன்பதையினையும், பிரமவிட்டுணுக்கள் முதலிய தேவர்களையும், அவ்வவ்வாவரணங்களையும் கண்ணுற்று, "ஆ! ஆ!! இவை யென்னே? இஃதெனனே?" என இறும்பூதுற்றுப் பெரிதும் அஞ்சிநின்று, வேதவாக்கியங்களால் எண்

ணிலாத தோத்திரங்களைச் செய்து வணங்கி, "ஞானானந்தவடிவாகிய முழுமுதற்கடவுளே! அடியேங்கள் முன் நீர் கொண்டருளிய விசுவரூபத்தை முற்றுந் தரிசித்திலேம், அடியேங்கள் முற்றுந் தரிசிக்கும் வண்ணம் காட்டியருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். பெருங்கருணைக்கடலாகிய குமாரக்கடவுள் திருவுளமிரங்கித் தேவர்களுக்குத் திவ்விய நேத்திரத்தைக்கொடுத்து, அநந்தகோடி சூரியர்கள் திரண்டாற்போலப் பேரொளியை வீசிநின்ற தமது பரமேசுரரூபத்தைக் காட்டியருளினார். தேவர்கள் ஆறுமுகக்கடவுளுடைய திருவுருவமுற்றையும் அடிமுதல் முடிவரையும் அவரது திருவருளினாலே தரிசித்து ஆனந்த பரவசர்களாய் வணங்கினார், "எம்பெருமானே! பிருதிவியண்டமுதலிய அண்டங்களும், அங்கங்குள்ள தேவர்களும், உயிர்ப்பொருள்களும் உயிரில் பொருள்களும், பிரமா விட்டுணு உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளும், உமது திருமேனியில் இருப்பக்கண்டேம். உமது திருமேனியா அகிலமும் இருப்பது? விசுவமெல்லாம் நீரேயாய் இருக்கும் உண்மையை அடியேங்கள் இந்நாள்காறும் அறிந்திலேம், தேவரீரே வந்து அறிவித்தமையால் இப்பொழுது அறிந்தேம், உமது திருமேனியேயன்றிப் பிறிதொரு பொருளையும் காணேம். உமது திருவடிவத்தைச் சிறியேங்கள்காண வல்லமா? ஒரு பிரமன் இறந்தபோது விட்டுணு பேருருவங்கொண்டு திருப்பாற்கடலிலே துயில்செய்யும் அகந்தையை ஒழிக்கும்வண்ணம் சிவபெருமான் அண்டங்களெல்லாம் ஆபரணங்களாக ஒரு திருமேனி கொண்டருளினார் என்னும் தன்மையை உமது திருமேனியிற் கண்டேம். எம்பெருமானே! உமது திருவுருவம் பிரமாவும் திருமாலும் பலகாலமுந்தேட, அவர்களுக்குத் தோன்றாது அக்கினி வடிவாய் நின்ற சிவபெருமானது திருவுருவமேபோலும். எம் பரமபிதாவே! இதனை யாவரும் அறிகிலர். எங்களைப்போல உமது திருவருளைப் பெற்று அடியையும் முடியையும் தெரிந்தவர் யாவர்? திருமாலும் திசைமுகனும் உலகத்தோடும் ஒருவரை யொருவர் விழுங்கி உந்தியாலும் முகத்தாலும் தோற்றுவித்து இருவரும் மாறுபடும்பொழுது எடுத்த பேருருவங்கள், நீர் கொண்டருளிய திருவுருவத்துக்கு மிகச் சிறியனவேயாம். ஆதலால், எம்பிரானே! நீர் அருவமும் உருவமுமாய் நின்ற ஏகநாயகரேயாம். அடியேங்கள் செய்த தவத்தினாலே சூராதியவுணர்களைக்கொன்று அடியேங்களுடைய துன்பத்தை நீக்கும்பொருட்டுப் பாலராய் திருவவதாரஞ் செய்தருளினீர். எவ்வுரு

வங்களுக்கும் ஒரிடமாயுள்ள உமது திருவுருவத்தைத் தரிசித்துச் சிறப்படைந்தேம். இருவினைப்பயன்களை நுகர்தற்கெடுத்த சரீரத் துன்பம் நீங்கிவிடுவேம். இனி நாங்கள் பிறவித்துன்பமடையாது நிரதிசய முத்தியின்பத்தை அடைவேம்'' என்று விண்ணப்பஞ்செய் தார்கள். பிறகு, முருகக்கடவுளுடைய விசுவரூபத்தை நோக்கி மனம் மிக வெருவச் சரீரம் அலமரப்பெற்று, 'எம்பெருமானே! உமது திருவுருவம் அளப்பில்லாத ஒளியையுடையது; இனிப் பார்க்கும் ஆற்றலில்லை; கண்கள் ஒளி மழுங்கின; அன்றியும் இதன் பெருமையை நோக்கி அஞ்சுகின்றேம். அடியேங்கள் உய்யும் வண்ணம் முன்னைத்திருவுருவங்கொண்டு எளியேங்களை ஆண்டருள்வீர்'' என்று வேண்டினார்கள்.

குமாரக்கடவுள் தமது விசுவரூபத்தை ஒழித்து, ஆறுதிருமுகங்களோடும் முன்னைவடிவங்கொண்டு நிற்க, இந்திரன் வணங்கித் துதித்து, "பெருங் கருணாநிதியே! சூரன் முதலிய அசுரர்களைக் கொன்று, அடியேனும் தேவர்களும் தொண்டுசெய்யச் சுவர்க்கத்தைத் தேவரீர் அரசுசெய்துகொண்டிருத்தல்வேண்டும்'' என்று பிரார்த்தித்தான். தம்மை வழிபடும் அடியார்களுக்கு அவரவர் வேண்டியவாறே இம்மை மறுமை வீடுகளைக்கொடுத்தருளும் பெருங்கருணைக்கடலாகிய அறுமுகக்கடவுளுக்கு, இந்திரன் தன்னரசைக் கொடுப்பதாகச்சொல்லிய வாசகம் அக்கினிதேவனுக்கு ஒரு தீபம் கொடுக்க எண்ணியதைப்போலும். கந்தப்பெருமான் இந்திரனை நோக்கி நகைத்து, "நீ நமக்குத்தந்த அரசை நாம் உனக்குத்தந்தேம்; நீங்கள் சேனைகளாக நாமே சேனாதிபதியாகி அசுரர்கள் எல்லோரையும் கொல்வேம், வருந்தாதொழி'' என்று அருளிச்செய்தார். இந்திரன் அதுகேட்டுத் தேவர்களோடும் மகிழ்ச்சியுற்று, முருகக்கடவுளை நோக்கி, "எந்தையே! இவ்வண்டத்துள்ள மலைகள், கடல்கள், உலகங்கள், உயிர்கள் முதலியனவெல்லாம் இந்நாளில் உம்மாலே முறை பிறழ்ந்தன. அவைகளையெல்லாம் முன்புபோல நிறுவியருளும்'' என்று வேண்டினன். எம்பெருமான் இளநகைபுரிந்து, "இவ்வண்டத்தில் நம்மாலே முறைபிறழ்ந்தன எல்லாம் பண்டைய நிலையை அடையக்கடவன'' என்று திருவாய்மலர்ந்தருள, அவையெல்லாம் உடனே முன்னை நிலைமை அடைந்தன. அனைவரும் அதுகண்டு அற்புதமடைந்து நின்றார்கள்.

அப்பொழுது இந்திரன் கந்தவேளை வணங்கி மூவர் தேவாதிகள் தம்பிரானே! வேதமுடிவிலே விளங்காநின்ற உம்முடைய திருவடிகளைப் பூசிக்க விரும்புகின்றேம். அது செய்யுமவண்ணம் திருவருள் புரிக" என்று வேண்டினான் முருகக்கடவுள் அதற்கிசைந்து, தேவர்களபின்தொடர நடந்து, மகாமேருமலையை நீங்கி, திருக்கயிலை மலைக்கு அணித்தாயுள்ள ஒரு மலையைஅடைந்தார் அப்பொழுது தேவதச்சனை நினைக்க, அவன் இந்திரன் முன்வந்து கைதொழுது நிற்க, இந்திரன அவனை நோக்கி, "நீ இங்கே ஒரு திருக்கோயில் செய்யக்கடவாய்" என்றான். தேவதச்சன் அங்கே நவமணிகள் பதித்த ஒரு செம்பொன்னாலயமும், அதனுள்ளே ஒரு திவ்விய சிங்காசனமுஞ்செய்தான். தேவர்கள் பலர் இந்திரனுடைய ஏவலினாலே திருமஞ்சனம், சந்தனம், நறுமலர், தூபம், தீபம், நிவேதனப் பொருள்கள் முதலிய பூசோபகரணங்களையெல்லாம் கொணடுவந்தார்கள் அப்பொழுது இந்திரன் கந்தப்பெருமானை வணங்கி, "சுவாமி! தேவரீருடைய திருவடித்தாமரைகளை அடியேங்கள் பூசித்து உய்யும் பொருட்டு இப்பொன்னெடுங்கோயிலுக்குள் எழுந்தருள்க" என்று பிரார்த்தித்தான். வேதப்பொருளாகிய முருகப்பெருமான் அது கேட்டு, அமரர்களை அனைவருந் துதிப்பத் திருக்கோயிலினுள்ளே புகுந்து, மணித்தவிசின் மீது வீற்றிருந்தருளினார். அப்பொழுது இந்திரனும் ஏனைய தேவர்களும், "ஞானநாயகரே! அடியேங்கள் உமக்குச் சேனையாக நீர் சேனாதிபதியாகுக" என்று ஆகாய கங்காசலத்தினால் திருமஞ்சனமாட்டி, செம்பட்டு ஆடைசாத்தி, சந்தனக் குழம்பு மட்டித்து, திவ்வியாபரணங்கள் அணிந்து, நறுமலர் மாலைகள் சூட்டி, தூபதீபங்காட்டி, பூசைசெய்து வலஞ்செய்து, வணங்கித் தோத்திரம்பண்ணினார்கள். அதன்பின் முருகக்கடவுள் அங்குநின்று மறைந்து, திருக்கைலாசமலையை அடைந்தார். கந்தசுவாமி தேவர்கள் பூமாரி பெய்து பூசிப்ப எழுந்தருளியிருந்தமையால் அம்மலை கந்தவெற்பெனப் பெயர்பெற்றது கந்தவெற்பை நீங்கி, இந்திரன் மனோவதி நகரத்தை அடைந்தான்; மற்றைத்தேவர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் தானத்திற் சென்று முன்போலிருந்தார்கள் திருக்கைலாச மலையை அடைந்த முருகக்கடவுள், இலக்கத்தொன்பது வீரர்களும் பூதர்களும் சேவிப்ப, அங்கே எழுந்தருளியிருந்தார்.

(தொடரும்).

---

ஓம் குஹாய நம:

# கற்பு

## சாவித்திரி

(612-வது பக்கத் தொடர்ச்சி)

இதே சமயத்தில், த்யுமத்சேனன் சிறந்த வன்மையையும் கண்பார்வையும் பெற்று எல்லாவற்றையும் பார்த்தான். அவன் பத்தினியாகிய சைப்பையுடன் எல்லா ஆச்சிரமங்களிலும் சென்று புத்திரனைத் தேடி அதிகமான துக்கத்தை அடைந்தான். அந்தத் தம்பதிகளிருவரும் அந்த இரவில் ஆச்சிரமங்களிலும் நதிகளிலும் வனங்களிலும் தடாகங்களிலும் போய்த் தேடினார்கள். ஏதாவது சத்தத்தைக் கேட்டால் புத்திரனுடைய சத்தமோ என்கிற சந்தேகத்தால், அந்தச்சத்தமுண்டான இடத்தை நோக்கி, "சாவித்திரியோடு சத்தியவான் வருகிறான்" என்று பேசிக்கொண்டார்கள். தர்ப்பங்களும் முட்களும் உடம்பைக்கிழிக்க, கால்கள் தேய்ந்து உதிரமுண்டாகி வருந்த பித்துப்பிடித்தவர்களைப்போல் ஓடினார்கள். அவ்வனத்துள்ள முனிவர்கள் இவர்களது பரிதாபநிலையைக்கண்டு மனம்வருந்தி அவர்களைத்தேற்றி ஆச்சிரமத்தில் அழைத்துக்கொண்டுவந்துவிட்டார்கள். முனிவர்கள் அந்த மன்னனைச்சூழ்ந்து இருந்து பண்டையரசர்களுடைய ஆச்சர்யகரமான கதைகளைச் சொல்லி சமாதானப்படுத்தினார்கள். வயது சென்றவர்களான அவ்விருவர்களும் ஆறுதலையடைவிக்கப்பட்டும் புத்திரனைப் பார்க்கவேண்டுமென்கிற விருப்பத்தால், அவனுடைய இளமைப்பருவந்தொட்டுள்ள அழகிய சரித்திரங்களையும், சாவித்திரியின் குணாதிசயங்களையும் ஒருவருக்கொருவர் நினைப்பூட்டிக்கொண்டு துன்பக்கடலில் மூழ்கித்தவித்தார்கள். துயரத்தால் மிகவும் வாடிய அவ்விருமுதுகுரவர்களும், "ஆ! புத்ரா! எங்கே இருக்கிறாய்? ஆ! மருமகளே! ஆ! பதிவிரதையே! எங்கே இருக்கிறாய்?" என்று ஓவென்று இரக்கமாகக் கதறிக்கொண்டு அழுதார்கள்.

அங்கிருந்தவர்களுள், சத்தியமான வாக்குள்ள சுவர்ச்சஸ ஒரு வேதியர் அவ்விருவரையும்பார்த்து, "இந்தச் சத்தியவானுடைய

மனைவியான சாவித்திரியம்மை தவமும் இந்திரிய நிக்கிரகமும் ஆசாரமுமுள்ளவளாக இருத்தலால், இவன் உயிரோடிருக்கிறான்" என்றார். கௌதமர், "வேதங்களையும் அங்கங்களையும் ஓதியுணர்ந்திருக்கிறேன், பெரியதவம் செய்திருக்கிறேன், கௌமாரத்தைத்தொடங்கிய பிரமசரியவிரதத்தை யனுஷ்டித்திருக்கிறேன், குருவையும் அக்கினியையும் திருப்திசெய்திருக்கிறேன்; மனவடக்கத்துடன் எல்லா விரதங்களையும் அனுஷ்டித்திருக்கிறேன்; எப்பொழுதும் காற்றைப் புசித்துக்கொண்டு உபவாசமாக இருக்கிறேன், இவ்விதமான ஒழுக்கத்தாலும் தவத்தாலும் பிறர்செய்ய விரும்பிய எல்லாவற்றையும் நான் அறிகிறேன்; "சத்தியவான் உயிரோடிருக்கிறான்; என்ற எனது வசனத்தை உண்மையென்று அறியுங்கள்" என்றார். சீடன், எனது குருநாதருடைய வாக்கிலிருந்து வெளிப்பட்ட சொல்லின்படியே சத்தியவான் சுகமாக இருக்கிறான், இது ஒருபோதும் பொய்யாகாது" என்று சொன்னான். இருடிகள், "இந்த சத்தியவானுடைய மனைவியான சாவித்திரி சௌமங்கலியத்தை உண்டுபண்ணுகிற எல்லா நல்லிலக்கணங்களோடும் கூடியிருத்தலால் உமது மகன் ஜீவித்திருக்கிறான்" என்றார்கள். பாரத்துவாசர், "சாவித்திரிதேவி மகாபதிவிரதையாயிருத்தலால் இவன் உயிரோடிருக்கிறான்" என்றார். தால்ப்யர் "உமக்கு கண்கள் விளக்கமுற்றமையாலும், சாவித்திரி விரதத்தைச்செய்து ஆகாரஞ்செய்துக்கொள்ளாமலே கானகஞ்சென்றமையாலும், சத்தியவான் யாதொரு தீங்குமின்றி சுகித்திருக்கின்றான்" என்றார். ஆபஸ்தம்பர், எதனால் மிருகங்களும் பறவைகளும் தெளிந்திருக்கிற திசையில் உமக்குப் பூமிசம்பந்தமான பெருக்கத்தைச்சொல்லுகின்றனவோ அதனால் சத்தியவான் உயிரோடிருக்கிறான்" என்றார். தௌம்யர், "எல்லா நற்குணங்களும் ஜனங்களுக்குப் பிரியமானவனும் நல்லிலக்கணங்களுள்ளவனுமாக இருத்தலால் உம்முடைய புத்திரன் தீர்க்காயுளுள்ளவனாக இருக்கிறான்" என்றார்.

சத்தியவாக்குள்ள அந்தத்தவசிகளால் 'இவ்வண்ணம் தேற்றப்பட்ட தியுமத்சேனன், அத்தருமவசனங்கள் முழுமையும் ஆராய்ந்து உறுதியுள்ளவன்போலானான். பிறகு ஒரு முகூர்த்தகாலத்திற்குப் பின், சாவித்திரி தனது கணவனுடன் மிக்கமகிழ்ச்சியுடன் அந்த இரவிலேயே வந்து ஆச்சிரமத்தில் புகுந்தாள் அங்கிருந்த எல்லாரும் பார்த்தவுடன் எழுந்திருந்தார்கள், மகிழ்ந்தார்கள், சத்தியவானு

டைய தாய்தந்தைகள் அவனுடைய கழுத்தைக்கட்டிக்கொண்டு அழு தார்கள், மறையோர்கள், "வேந்தே! புத்திரனோடு சேர்ந்தவனும் கண்களை அடைந்தவனுமான உன்னைப்பார்த்து நாங்கள் எல்லோரும் உன்னுடைய க்ஷேமத்தை வினவுகிறோம; குணசீல! புத்திரனது வரவு, சாவித்திரியின் தரிசனம, கணொளியைப்பெறறது இந்த மூன்றினாலும் நீ வளர்ச்சியை அடைந்திருக்கிறாய, எங்களெல்லோ ராலும் எது சொல்லப்பட்டதோ அது அப்படியேயாகும், இதில் ஐய மில்லை. மேலும மேலும செல்வப்பெருக்கமானது உனக்கு விரை வாகவே உண்டாகும" என்றார்கள் பிறகு அந்த அந்தணர்கள் அனைவரும அங்கு அக்கினியை நன்றாகப் பிரகாசிக்கச்செய்து நியமத சேனனருகில் உட்கார்ந்தார்கள. சைப்யையும சத்தியவானும் சாவித்திரியும் ஒருபுறத்தில நின்றாரகள அவாகள் துன்பம் நீங்கி எல்லாராலும் அனுமதிகொடுக்கபபட்டு உட்கார்ந்தார்கள்.

அரசனுடன உட்கார்ந்திருந்த முனிவர்கள் ஆவலுடன் மன்னர் மகனை நோக்கி, "அரசகுமார! யாது காரணத்தால் பத்தினியுடன் முன்னரே வரவில்லை? என் நடுநிசியில் வந்தாய்? உனக்கு என்ன தடை ஏறபட்டது? பிரபுவே! மாதாவும பிதாவும் நாஙகளும் வருத்தத்தையடைந்தோம்; உனது தாமதத்தின் காரணத்தை யறி யோம்; அதனை நீ யுரைப்பாய்" என்று வினவினார்கள். சத்திய வான், "பிதாவினால் அனுமதிகொடுக்கப்பட்ட நான் சாவித்திரியுடன் சென்றேன், வனத்தில் விறகுகளைப் பிளக்கும்பொழுது எனக்குத் தலைவலியுண்டாயிற்று; வேதனையினால் நான் நெடுநேரம் தூங்கிவிட் டேனென்று எண்ணுகிறேன்; இதற்குமுன் ஒருபொழுதும் நான் அவ்வளவுநேரம் தூங்கினவனல்லேன், உங்களனைவருக்குமே சந்தா பம் உண்டாகவேணடாமென்கிற காரணத்தினால் நடுநிசியில் நான் இங்கு வந்தேன். இந்த விஷயத்தில் வேறு காரணம் இல்லை" என்றான்,

கௌதமர், "சத்தியவானே! நின் தநதைக்குத் திடீரென்று கண் கிடைத்திருக்கின்றது; இதற்குக் காரணத்தை நீ அறியாய; சாவித்திரி சொல்வதறகுத் தகுதியுள்ளாள. சாவித்திரி! ஒளியினால் உன்னை சாவித்திரிதேவியைப்போலவன்றோ அறிகிறேன்? இந்த சம்பவத்தின் காரணத்தை நீ அறிவாய்; ஆகையால், உண்மையைச் சொல்" என்று வினவினா சாவித்திரி, "நீர் அறிந்தது சரிதான்; உங்களுடைய எண்ணம் வேறுவிதமாகாது, எனக்கு ரகசியம் ஒன்று

மில்லையன்றே? உண்மையையுரைப்பேன், மகாத்துமாவான நாரத முனிவர் எனது பதியின் மரணத்தைக்கூறினர். அன்று தொடங்கி யான் நியமத்துடன் விரதங்களையனுஷ்டித்து என்பதியின தீர்க்கா யுளைவேண்டித் தவவொழுக்கத்துடனிருந்தேன். நாரதர் குறிப்பிட்ட அந்த நாள இன்றுவந்துவிட்டது; அதனால இன்று நான் இவரைத் தனியாக விடவில்லை; உறங்கிக்கொண்டிருக்கிற என் கணவரது பக்கத்தில் அறக்கடவுள் வந்தார், அவா இவரைப் பாசத்தாற் கட்டிக் கொணடு பிதுருக்களாலடையப்பட்ட திசையில கொண்டுபோனர்; நான் அவரைத் தொடர்ந்துபோய் சத்தியமான வசனத்தால் அந்த யமபகவானைத் துதித்தேன்; அவர் எனக்குத் தனித்தனியாக ஐந்து வாங்களை வழங்கினர், எனது மாமனருக்குக் கண்களும் இராஜய மும் உண்டாகுமாறு இருவரமும், எனது பிதாவுக்கு நூறுபுத்திரர் களும் எனக்கு நூறு புத்திரர்களும் உண்டாகுமாறு இருவரமும, என் கணவர் நானூறு வருடம சுகித்திருக்க ஒரு வரமுமாகும. பதி யினுடைய உயிரை விரும்பி இநத விரதத்தை நான் உறுதியுடன்செய் தேன். இதுதான் நடந்த சம்பவம. இந்த எனது துன்பம் முடிவில் இன்பமாய் முடிந்தது என்றுள்

இருடிகள், "கற்பிற சிறந்த காரிகையே! நற்குலத்திற் பிறந்த வளும் நல்லொழுக்கமும் விரதமும புண்ணியமும் பொருந்தியவளு மான உன்னல் இருளமயமான மடுவில் முழுகுவதும் துன்பமாகிய மிருகத்தால் தூரத்தப்பட்டதுமாகிய அரசனுடைய குலமானது மீண் டுமே கைதூக்கி மேலேவிடப்பட்டது. பாக்கியவதியே! உன்னல் பிறந்த வீடும் புகுநதவீடும் பெருமையுற்றன" என்றூர்கள். ஒன்று சேர்ந்திருக்கிற மாதவர்கள் மகாபதிவிரதையாகிய அந்த உத்தமியை பலவாராகப் புகழ்ந்தும் பூசித்தும் மன்னனிடம் விடை பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியுடன் தங்கள் வீடுகளுக்குச் சுகமாகச் சென்றூர் கள்.

அந்த இரவுகழிந்து சூரியன் உதித்தவுடன் அந்த எல்லாத்தவசி களும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஒன்றுகூடினர்கள். தியு மத்சேனனும் சைப்யையும் மருமகளது பெருமையை நினைந்து வாயார வாழ்த்திக் கொண்டாடினர்கள். மகரிஷிகள் சாவித்திரியி னுடைய மகிமையை தியுமத்சேனனுக்கு அடிக்கடி சொல்லியும் இன் னும் சொல்லவேண்டுமென்ற விருப்பமே கொண்டார்கள். பிறகு சால்வதேயத்திலிருந்து எல்லா ஜனங்களும் அரசனிடம் வந்தார்கள்.

அவனுடைய திருவடியில் விழுந்து வணங்கி, "தங்களுடைய மந்திரியார் அந்தப் பகைவனைக் கொன்றுவிட்டார், அரசரே! பகைவனுடைய படை பயந்து ஓடிவிட்டது, எல்லா ஜனங்களும் "கண்ணுள்ளவரோ கண்ணில்லாதவரோ அந்த தியுமத்சேனரே நமக்கு அரசராக இருக்கவேண்டும்" என்று ஒரே எண்ணமாக இருக்கிறார்கள்; இந்த நிச்சயத்துடன் ஜனங்களால் அனுப்பப்பட்டோம். இதோ வாகனங்களும தங்களுடைய நால்வகைச் சேனைகளும் வந்திருக்கின்றன. மண்டலேசுவரரே! புறப்படுவீராக, உமக்கு மங்களம்- உமமுடைய ஜயமானது நகரத்தில் முழக்கப்பட்டது. உமது மூதாதைகள் பரம்பரையாக அரசுசெயதுவநத அரியணையில் வீற்றிருந்து நெடுங்காலம் அரசு செயவீராக" என்று சொல்லி மலர்ந்த கண்களுடன் அரசனைத் திருமபவும் வணஙகினார்கள்.

பிறகு, மன்னன், அந்தத் தவ வனத்திலுள்ளவர்களும் வயது முதிர்ந்தவர்களுமான எல்லா முனிவர்களிடமும் பிரியா விடைபெற்றுக்கொண்டு நகரத்தைக்குறித்துச் சென்றான. சைப்யையும சாவித்திரியோடுகூட சேனையினால் சூழப்பட்டவளாக நல்ல விரிப்புகளுள்ளதும் ஒளிவீசுவதும் மனிதர்களால் தூக்கப்பட்டதுமான பொறபல்லக்கிலூர்ந்து தனது நகரஞ் சேர்ந்தாள். நல்ல நாளில் புரோகிதர்கள் சகலவைபவங்களுடன் தியுமத்சேனனுக்கு மகுடாபிஷேகஞ் செய்தார்கள். ஒப்பற்ற வீரனாகிய சததியவானுக்கு இளவரசு பட்டாபிஷேகம் புரிந்தார்கள். இந்த நற்செய்திகளைக்கேட்டு சாவித்திரியின் பிதாவாகிய அச்சுவபதிமன்னன் பரிவாரங்களோடுவந்து, சம்பந்தியையும் மருமகனையும் மகளையும் பார்த்து கொண்டாடி, மகளது அற்புதச்செயல்களைக்கேட்டு, உடலும் உளமும் பூரித்து, குலத்தைவிளக்க வந்த கொடியிடையாளை வாழ்த்தினான்.

சில நாட்களுக்குப்பின், சாவித்திரிக்குப் புகழை வளர்க்கிற தேவகுமாரர்களைப்போன்ற நூறு புதகிரர்கள் பிறந்தார்கள். அப்படியே மத்திரதேசாதிபதியாகிய அச்சுவபதிக்கு மாளவியிடம் சூரர்களும் போரில் பின்வாஙகாத வீரர்களும் மிக்க பலசாலிகளுமாகிய நூறு குமாராகள் பிறந்தார்கள். சாவித்திரியினால் தான், தகப்பன், தாய், மாமியார், மாமனார், கணவன், குலம் ஆகிய அனைவரும் கரையேற்றப்பட்டார். மகா பதிவிரதா சிரோன்மணியாகிய அவ்வுத்தமியால் தந்தையின் குலமும் தனது கணவனது குலமும் வளர்ச்சியுற்

உ

காரதகிகேயன துணை.

# வானப்பிரஸ்தம்.

(159-வது பக்கத்தொடர்ச்சி)

இந்த வானப்பிரஸ்த ஆச்சிரமத்தைப்பற்றி முற்காலத்தில் மகானுபாவராகிய வியாசமுனிவர் தமது புத்திரராகிய சுகருக்குச் சொல்லியுள்ளார். புண்ணியமிகுந்தவர்களும் நன்மலாபத்தையடைய விழைகின்றோரும இதனை அன்புடன் மேற்கொளவர். இது மனிதனுக்கு மூன்றாவது நிலை, கிருகஸ்தனானவன் எப்பொழுது உடலில தோல் சுருக்கத்தையும நரையையும பௌத்திரனையும பார்ப்பானோ அப்பொழுதே வனத்தை யடையவேணடும. வானப்பிரஸ்த நிலையை யடையுங்கால் தன் மனைவியைப் புத்திரனிடத்தில் வைத்துவிட்டாயினும், தன்னோடு கூட்டிக்கொணடாயினும வனத்திறசெல்லவேண்டும். அவ்வாறு வனத்திற்சென்று மனத்தையடக்கித் தவஞ்செய்தல் வேண்டும். ஆயுளின மூன்றாவது பாகத்தில் இதனை மேற்கொள்ள வேண்டும். சடையும் தாடியும் மீசையும் நகமும் வளர்த்துக்கொண்டும், மரவுரி மானதோல் முதலியவைகளை உடுத்திக்கொண்டும், தழைகளினாற் செய்யப்பட்ட குடிசைகளில் வாசஞ்செய்தல்வேண்டும தெய்வ வழிபாடும் நியமமுடையவனாயிருக்கவேண்டும். ருசியைக் கருதாது பசித்தபோது கிடைத்த உணவை உண்ணல்வேண்டும். ஆறாவதுகாலத்தில் (பகல் பதினெட்டேமுக்கால் நாழிகை, $1\frac{1}{2}$மணி) உணவருந்தலவேண்டும். தவறு செய்யாமல் தவநிலையிலேயே காலங் கழித்தல்வேண்டும். அதிதிகளுக்கு அன்னமிடுவதற்காகவும் தனது பசியை யாற்றுவதற்காகவும் சிலர் அந்த அந்தச் சமயத்திலேயே

---

றன. எல்லோருக்கும மகிழ்ச்சியைததந்து இன்றும் என்றும் அழியாத புகழுடம்பைப்பெற்று நிலவுகிறாள்,

பெண்மணிகள் இக்கற்பரசியின் உத்தமமான சரித்திரத்தை அன்புடன் ஊன்றிப்படித்து, அவ்வண்ணம நல்லொழுக்கததை மேற்கொண்டு பிறந்த வீட்டையும் புகுநத வீட்டையும் வளர்ச்சியுறச் செய்து பொன்றாப்புகழைப் பெறுவார்களாக. அங்ஙனமே "என துளமேவிய ஸ்ரீ வள்ளிநாயகியார்" திருவருள்புரிவாராக.

(தொடரும).

தேடி உடனே செலவழிக்கிறார்கள் ; சிலர் ஒரு மாதத்திற்கும், சிலர் ஒரு வருடத்திற்கும், சிலர் பன்னிரு வருடத்திற்கும் தேடிவைத்துக் கொள்ளுகிறார்கள். ஊரில் உண்ணத்தக்க உணவுகளைவிட்டு வனத்திலுள்ள கனி கிழங்கு முதலியவைகளையே உணணல்வேணடும், அவை கிடையாதொழியின், மறறை வானப்பிரஸ்தரிடத்திலேனும வனவாசஞ்செய்யும கிருகஸ்தரிடத்திலேனும பிக்ஷையேறறு உண்ணலாம். அவாகளுட இல்லாதபோது ஊரிறபோய எட்டுக்கவள அன்னம் வாங்கிப புசிக்கலாம் மழைக்காலத்தில் ஆகாய வெளியிலும் பனிக்காலத்தில் தணணீரிலும், வேனிறகாலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலும இருந்துகொண்டு தவஞ்செயதல்வேண்டும். தரையில் படுத்தல்வேண்டும. சிலா கால்நுனிகளால் நினறும், பலவகை ஆசனங்களைப்போட்டுக்கொணடும இருந்து தவமபுரிகின்றனர். சிலர் பறகளையே உரலாக உடையவாகள், சிலர் கல்லினால் தேய்த்து அரிசியாக்குகிறாாகள். சிலர் சுக்லபக்ஷத்தில் ஒருவேளை சூடுள்ள கஞ்சியைப் பானஞ்செய்கிறார்கள். சிலா கிருஷ்ணபக்ஷத்தில் அவ்விதமே பானஞ்செய்கிறார்கள் அலலது முன்வழக்கப்படி அன்னத்தையாவது புசிக்கிறார்கள், முப்பொழுதும ஸ்நானாதி அக்கினிகாரியங்களைச்செய்து விரதங்களை அனுஷ்டித்தல்வேண்டும. வேத சிரசுகளாகிய உபநிடதங்களையே பாராயணஞ்செய்தல் வேணடும். அகத்தியர், சப்த இருடிகள் மதுச்சந்தா, அகமர்ஷணர், ஸாங்க்ருதி, ஸுதிவாதண்டி, யதாவாசர், அக்ருதச்ரமர், அகோரவீர்யர், காவ்யர், தாண்டியா, மேதாதிதி, புதர், பலவான், கர்ணநிர்வாஹா, சூன்யபாலா, கிருதச்ரமர் முதலியோர் இவ்வானப்பிரஸ்த தருமத்தில் இருந்து பாகதிபெறறார்கள். வானப்பிரஸ்தனுக்கு புணர்ச்சி கூடாது. கோபமும் மோகமும், நட்பும் பகையும் இல்லாமல் சர்வபிராணிகளுக்கும் இதத்தையே செய்துக்கொண்டு சாந்தமுள்ள மனததுடன் இருத்தல்வேண்டும். காமாதி யறுபகைவரையும் வென்று, இநதிரிய அடக்கத்துடன் இருத்தல் வேண்டும். இவ்வாறு நியமத்துடனும் உறுதியுடனும் இந்த வானப்பிரஸ்த நிலையில் நிற்பவன் அழிவிலலாத மோக்ஷவுலகை யடைகின்றனன். அவனுடைய தவவொளியானது விண்ணுட்டை அலங்கரிக்கும். அவனுக்கு நிகரானவர் மூவுலகிலுமில்லை. அவனுக்கு அடையத்தகாதபொருள் எந்த உலகத்திலுமில்லை. இகபரசித்தியை யடைகின்றனன்.

---

ஓம் குஹாய நம:

# நான்கு இரத்தினங்கள்

(1) தான்செய்த தருமத்தைப்பற்றி தானே புகழாமலிருத்தல்; (2) ஒருவருக்கு ஒன்றைக்கொடுத்தபின் அது விஷயத்தில் மனம் வருந்தாமலிருத்தல், (3) ஒரு பொருளை ஒருவன் கேட்கும்போது "எல்லாம் உங்களுடையதே" என்றுகூறி ஏமாற்றாமலிருத்தல்; (4) அளவுக்கு மீறிய பொறுமை; இந்த நாற்குணங்களும் நம்மால் அவசியம் அனுஷ்டிக்கத்தக்கவை.

(1) அநேகர் தாங்கள் செய்த தருமத்தைப் பலரறியுமாறு தாமாகவே சொல்லிக்கொள்ளுகிறார்கள். "இந்தக்கோயில நான் கட்டிவைத்தது; இந்த தருமச்சாலை என சொந்த செலவில் கட்டப் பட்டது; எங்கள் வீட்டில தினம் 10 பேர் சாப்பிடுகிறார்கள்; என்று இப்படி தாங்கள் செய்யும் தருமத்தைத் தாமாகவே புகழ்ந்து கூறுவதால் அத்தருமத்தின பலன் குறைகிறது. ஆதலால் தருமஞ்செய்யும் உத்தமசீலர்கள் இந்த விஷயத்தில் கவனிப்புடன் தம்முடைய தருமங்களைத்தாமாக மிகமிக அவசியம் என்று தோன்றாத காலங்களிலெல்லாம் புகழ்ந்து கூறாமலிருத்தல் வேண்டும்.

(2) சிலர் தருமத்தைச் செய்துவிட்டு பின், "அதிகங்கொடுத்து விட்டோம" "நம்மை ஏமாற்றி வாங்கிவிட்டார்கள்" "தொந்தரையாகிவிட்டது" என்று பலவாறுகூறி மனம் வருந்துகிறார்கள். அதனால் தாம் செய்த தருமத்தின் பலன் பாதிக்குமேல் குறைந்துவிடுகின்றது. அப்படி வருந்தியதால் என்ன பயன்? ஏதாவது பொருள் வருமா? தருமத்தையுஞ் செய்துவிட்டு பலனையும் இழந்துவிடுகின்றார்கள். ஆதலால் தருமத்தில் விருப்பமுடைய அன்பர்கள் இந்த விஷயத்தில் ஞாபகஞ்செலுத்தி தருமஞ் செய்துவிட்டு "ஏன் கொடுத்தோம்" "அதிகம் தந்துவிட்டோம்" என்று வருந்தாதிருக்கவேண்டும்.

(3) சிலர் தங்களை யாராவது ஒரு பொருளைக்கேட்டால், "இது மட்டுமா? "எல்லாம் உம்முடையதே, உங்களுடைய பொருளை நான் என்ன தருவது? இந்தவீடும் தங்களுடையதே" என்று மிகவும் நய

யாகவும் உபாயமாகவும்பேசி முடிவில் அந்தப் பொருளைக் கொடுக்காமலே தந்திரஞ்செய்து விடுகிறார்கள். அது அறிஞர்களால் வெறுக்கத் தக்கது ஆதலால் ஒருவன் ஒரு பொருளைக்கேட்டால "உமதுடையதே" என்று நயபுரமாறு கூறி அலைக்காமல் அவனை அலையவிடாமல் முதலிலேயே "இது தருவதற்கில்லை" என்று கூறிவிடுவது உத்தமம்.

(4) என்ன துன்பம் நேர்ந்தாலும், பெரியோர்கள் எதை எப்படி கேட்டாலும், தன்னை எப்படி நிந்தித்தாலும் அன்னியர்களால் என்ன இன்னல் வந்தாலும் பொறுமையுடனிருப்பது இந்த வகையான பொறுமை மேற்கொண்டவனை யுகமுடிவில் தோன்றும் சண்டமாருதத்தாலும் அசைக்கமுடியாது அவனை யாராலும் அழிக்க முடியாது. அவனிடம் சகல தேவர்களும் தானே வந்து திருவருள் புரிவார்கள். இந்த நான்கு நீதிகளை விளக்கும் பூர்வ சரித்திரம் ஒன்றை ஈண்டு விளக்குதும் அன்பர்கள் இதனை நன்கு ஓதியுணர்ந்து அவ்வண்ணம் ஒழுகுவார்களாக

பூர்வத்தில் புகழ்பெற்ற அஷ்டக னென்ற ஒரு அரசனிருந்தான். அவன் விஸ்வாமித்திரருடைய மைந்தன். அம்மன்னர்பெருமான் ஒரு பெரும் வேள்வியைச் செய்தான். அந்த அசுவமேதயாகத்திற்கு எல்லா அரசர்களும் சென்றார்கள். அந்த அஷ்டகனுடைய சகோதரர்களான பிரதர்த்தனன், வஸுமனஸ் உசீனரதேசாதிபதியாகிய சிபி என்பவர்களும் சென்றிருந்தார்கள். மந்திரமுறைப்படி யாகம் நிறைவேறியது. முடிவில் அஷ்டகன் தன் சகோதரர்கள் மூவருடன் இரதத்திலூர்ந்து செல்லலானான். யாழ்வல்லோராகிய நாரதர் எதிர்ப்பட்டார் அவரை அந்த நால்வர்களும் வணங்கி, தாங்களும் இந்தத் தேரில் ஏறிக்கொள்ளவேண்டும" என்றார்கள். நாரதர், "அப்படியே" என்று சொல்லி விமானத்திலேறினார். பிறகு அவர்களுள் ஒருவன், தேவரிஷியாகிய நாரதரைப்பார்த்து "பகவானே தேவரீரை ஒரு விஷயத்தைக் கேட்க விரும்புகிறேன்; கருணைகூர்ந்து சொல்லியருளவேண்டும்" என்று சொன்னான். நாரதர் அவனைப் பார்த்து "எந்த விஷயத்தைப்பற்றியும் கேள்" என்றார்.

அவன், "வீணை முனிவரே! நாம் ஐவர்களும் நீண்ட ஆயுளுள்ளவர்கள், நற்குணமுடையவர்கள், நெடுங்காலம் அனுபவிக்கத்தக்க சுவர்க்க லோகமானது நால்வரால்." மட்டும் செல்லத்தக்கதாயிருந்தால் ஐவர்களாகிய நம்முள் யார் இறங்கவேண்டும்?" என்று கேட்

டான். நாரதர், "இந்த அஷ்டகன், இறங்கவேண்டும்" என்றார். அவன், "என்ன காரணம்" என்றான். நாரதர், 'நான் ஒரு சமயத் தில் அஷ்டகனுடைய அரண்மனையில் வசித்தேன; அவன் என்னை ஒருநாள் தேறில் ஏற்றிக்கொண்டு உலாவினான், பிறகு தனித்தனி யாக நிறத்திறகுத்தக்கபடி பிரிக்கபபட்டிருக்கிற ஆயிரக்கணக்கான பசுமாடுகளை நான் பார்த்தேன். நான அவனைப்பார்த்து, "இவை யாருடைய பசுக்கள் ? என்று கேட்டேன். அஷ்டகன், "இவைகள் என்றால் தானஞ்செய்யபப்பட்டவை" என்று சொல்லிய அதனாலேயே தானே தன்னைப் புகழ்ந்துகொண்டான்; ஆதலால இவன் இறங்க வேண்டும" என்றார்.

பிறகு முன்கேட்டவன், "மூவரால்மட்டும் போகத்தக்கதா யிருந்தால் இப்பொழுது யார் இறங்கவேண்டும் ? என்று கேட்டான். நாரதா, "பிரதர்த்தனன் இறங்கவேண்டும்" எனறார். கேட்டவன், "அந்த விஷயததில யாது காரணம்?" என்று கேட்க, நாரதா, "பிரதர்த்தனுடைய வீட்டிலும் நான் வாசஞ்செய்திருக்கிறேன்; அவனும் நானும் ஒருநாள் தேரின்மீது ஏறிச் சென்றோம்; வழியில் ஒரு பிராம்மணன், "எனக்கு நீ ஒரு குதிரையைக்கொடுக்கவேண்டும" என்று யாசித்தான். அரசன் பிராம்மணனை நோக்கி, "நான திரும்பி வந்து கொடுப்பேன்" எனறான். வேதியன், "விரைவாகவே கொடுக்கக்கடவாய்" என்று கேட்டான். அவன், "அப்படியே" என்று சொல்லி வலப்பக்கத்தில் தேரிற்பூட்டிய குதிரையை விரை வாகவே அவிழ்த்து பிராமணனுக்குக் கொடுத்தான். பிறகு மற் றொரு பிராம்மணன் வந்து ஒரு குதிரையை யாசித்தான். அரசன், "அப்படியே" என்று சொல்லி இடப்பக்கத்திற்பூட்டிய குதிரை யைக்கொடுத்தான். வேறொரு வேதியன் வந்து ஒரு குதிரையைக் கேட்டான். இன்னொரு குதிரையையும் அவிழ்த்துக்கொடுத்தான். திரும்பவும் மற்றொரு மறையவன்வந்து, "சீக்கிரம ஒரு குதிரையைக் கொடு" என்றான். மன்னன், "அப்படியே தருகிறேன்" என்று நாலாவது குதிரையையும் அவிழ்த்துக்கொடுத்துவிட்டு, தேரின் நுகக் கொம்பைத் தானே தாங்கிக்கொண்டு, "பிராம்மணாகளுக்குத் தக்கது தகாதது என்கிற ஆலோசனை சிறிதும இல்லை" என்று சொன்னான். கொடுத்துவிட்டு அஸூயை அடைகிற இந்தப் பிரதர்த்தன்; அப்படிப் பட்ட அந்த வசனத்தினால் விமானத்திலிருந்து இறங்கவேண்டும் என்று கூறினார்.

கேட்டவன், "முனிநாதரே! இருவரால்மட்டும் செல்லத்தக்கதாயிருந்தால் யார் இறங்கவேண்டும்? என்று வினவ, நாரதர் "வஸுமனஸ் இறங்கவேண்டும்" என்றார். கேட்டவன், "காரணம்யாது?" என்று கேட்க, நாரதர், "நான் உலகங்களில் சஞ்சரித்துக்கொண்டு வஸுமனஸினுடைய வீட்டையடைந்தேன். அப்பொழுது அவன் அவன்வீட்டில் மங்களகாரியம ஒன்றின் தொடக்கத்தில் மந்திரங்களைச்சொல்லி அக்ஷதையிறைப்பதாகிய ஸ்வஸ்திவசனங்கள் நடந்து கொண்டிருந்தன. காடு மலை கடல் முதலிய இடங்களில் தடைப்படாது செல்லக்கூடிய புஷ்ப ரதத்தை விரும்பி அவனை அனுசரித்தேன். பிராம்மணர்கள் ஸ்வஸ்தி வசனம சொல்லிய பிறகு, அவர்களுக்குத் தன்னிடமுள்ள புஷ்பரததைக் காட்டினன். அந்த ரதத்தை நான் புகழ்ந்தேன், அரசன், "தவமுனிவராகிய தங்களால் இந்த ரதம புகழப்பட்டது, இது தங்களுடையதே; தங்களுடையதே," என்று சொன்னன். பிறகு ஒருகால் நான் வஸுமனஸை அணுகினேன்; மறுபடியுமே எனக்குப் புஷ்ப ரதத்தால் காரியம் ஆக வேண்டியிருந்தது. அரசன் "சிறப்புடையதான புஷ்ப ரதம் பகவானுடையது" என்று கூறினன். மூன்றுவது முறையும் நான் அதை வேண்டிப்போயிருந்தேன். அப்போதும் அவன் "இது தங்களுடையதே" என்று அதனைக் கொடுக்காமலே மோசவார்த்தை கூறினன். புஷ்பரதத்தைக் கொடாமல் இந்த மோசவார்த்தை சொல்லியதால் இவன் கீழே இறங்கவேண்டும" என்றார்.

கேட்டவன், பிறகு, "பகவானே! ஒருவரால்மட்டும் செல்லத் தக்கதாக இருந்தால் யார் இறஙகவேண்டும்" என்று வினவ, நாரதர், "சிபி செலலக்கடவன்; நான் இறங்கவேண்டும்" என்று சொன்ஞர். கேட்டவன, "இந்த விஷயத்தில் காரணம் என்ன?" என்று வினவ, நாரதர், "நான் சிபிக்கு நிகரானவனல்லேன், என்னைவிட சிபி உயர்ந்தவன்; ஏனென்றல் பிராம்மணனொருவன் இந்தச் சிபியைப்பார்த்து "சிபியே! நான் அன்னத்தை விரும்புகிறேன்" என்று சொன்ஞன். சிபி, பிராம்மணனை நோக்கி, "என்னசெய்யவேண்டும்? நீர் கட்டளையிடும்" என்று சொனனன். பிராம்மணன், சிபியை நோக்கி, "பிருஹத்கர்ப்பன் உன்னுடைய புத்திரனைக் கொல்லவேண்டும்; அப்படிக்கொல்லப்பட்ட இவன் மாமிசத்தைப் பக்குவஞ்செய்து அன்னத்துடன் சித்தஞ்செய்வாயாக; பிறகு என்னை போஜனத்திற்கு எதிர்பார்க்கவேண்டும்" என்று சொன்ஞன். பிறகு, அரசன் சிறி

தேனும் தயங்காமலும் மூகம் வாடாமலும் புத்திரனைக் கொன்று பக்குவஞ்செய்து முறைப்படி சித்தஞ்செய்து ஒரு பாத்திரத்தில் வைத்து, அதைத் தலையினால் தூக்கிக்கொண்டு பிராம்மணனைத் தேடினான். சிபி வேதியனைத் தேடிக்கொண்டிருக்கும்பொழுது, ஒருவன் ஓடிவந்து, "இந்தப்பிராம்மணன் உன் நகரத்தில் நுழைந்து கோபங்கொண்டு உன் அரண்மனைப்புற தனசாலையையும் ஆயுதசாலையையும் அந்தப்புரத்தையும் குதிரைச்சாலையையும் யானைச்சாலையையும் எரிக்கின்றான்" என்றான். சிபி, அப்படியே நிறம்மாறாத முகத்துடன் நகரத்தில் நுழைந்து அந்தப் பிராமமணனைப்பார்த்து அன்புடன், "பகவானே! அன்னம் சித்தமாயிருக்கிறது" என்று சொன்னான். பிராம்மணன ஒன்றும் பேசாமல் அவன் பொறுமையின் பெருமையைக்கண்டு ஆச்சரியத்தால் தலைகுனிந்து நின்றான். பிறகு, அரசன் "பகவானே! தாங்கள் சொல்லியபடி செய்திருக்கிறேன்; புசிக்கலாம்" என்று மிகவும் பணிவுடன் வேண்டினான். பிராம்மணன் ஒரு முகூர்த்தகாலத்திற்குப் பிறகு, சிபியை நிமிர்ந்துபார்த்து, "நீயே இதனைப்புசிப்பாயாக" என்றான. அப்பொழுது சிபி, "அப்படியே ஆகட்டும்" என்று கூறி மனத்தில் அருவருப்பில்லாதவனாகப் பிராம்மணனைப்பூசித்து, தலையினமேல் வைத்திருந்த மாம்சத்தை எடுத்து புசிக்க எத்தனித்தான். உடனே, பிராம்மணன் இவனுடைய கையைப்பிடித்துக்கொண்டு "நீ கோபத்தை வென்றவனாக இருக்கிறாய், பெரியோர்களுக்காக விடத்தகாதது உனக்கு யாதொன்றுமில்லை" என்று சிபியை மிகவுங்கொண்டாடினான். உடனே சிபி தேவகுமாரனைப்போன்ற தன் குமாரனை எதிரில் நல்ல அழகுடன் கண்டான் நல்ல மணமுடனும நல்ல அலங்காரத்துடனும் விளங்கும் தன் மகனைப்பார்த்து, சிபி அதிசயித்தான். உடனே பிராம்மணன் மறைந்தான். உலகங்களைப் படைக்கும பிரமதேவரோ இந்த சிபியைச் சோதிப்பதற்காக அப்படிவந்தார. அவர் மறைந்தவுடன் மந்திரிகள் அரசனை நோக்கி, "எல்லாவற்றையும் அறிந்தவராகிய தாங்கள் எதை அடையவிரும்பி இவ்வாறு செய்தீர்" என்று வினவினார்கள். சிபி, "இதை நான் புகழுக்காகவாவது பொருளுக்காகவாவது கொடுக்கவில்லை; சுகத்தை அனுபவிப்பதிலுள்ள ஆசையினாலும் கொடுக்கவில்லை. இந்த வழியானது பாவிகளால் அடையப்படாதது" என்று இவ்வாறு. இவ்வனைத்தையும் செய்கிறேன். சாதுக்களால் எப்போதும் அனுஷ்டிக்கப்பட்டதே சிறந்தது. ஆத

உ

ஓம் குஹாய நம:

# தர்மம்

சச்சிதானந்தம்.

தர்மம் என்பது திரி என்ற தாதுவிலிருந்து பிறந்தது. திரி என்றால் காப்பாற்று 'தர்மம், தரித்தல், ஆன்மாவைத் தரிக்குதல் அதாவது ஆன்மா நிம்மதியாக விருக்கக்கூடியவிதம்.' ஆன்மலாபத்திற்கு உபாயம் தர்மம் எனப்படும். மானுடப்பிறவியின் கடமையை முடித்தலின் பெயர் தருமம். தமது விஷயத்தில் தாம் செய்யவேண்டிய கடமை, மாதா பிதாக்கள் விஷயத்தில் தாம் செய்யவேண்டிய கடமை, பத்தினி விஷயமாயும் மக்கள் விஷயமாயும் தாம் செய்யவேண்டிய கடமை, அயலார் விஷயமாயும் பந்துக்கள் விஷயமாயும் செய்யவேண்டிய கடமை, ஏழைகள், தரித்திரதிசையிலுள்ளோர், திக்கற்றவர் இவர்கள் விஷயமாய்ச் செய்யவேண்டிய கடமை; ஸ்வதேசத்தைப்பற்றிச் செய்யவேண்டிய கடமை; இவை யனைத்தையும் முடித்தலின் பெயர் தருமம். தருமத்தைவிடச் சிறந்ததொன்றுமில்லை. தர்மம் மூன்று உலகத்தையும் பிரகாசிக்கச் செய்கிறது. தர்மம் எல்லா உயிர்களுக்கும் இனிமையானது; தர்மம் மண்ணுலகம் விண்ணுலகம் இரண்டிலும் சுகத்தைக்கொடுக்கிறது; உலகம் நிலையற்றது; தர்மம் நிலைபெற்றது; தர்மத்தினால்தான் நற்கதியடையமுடியும்; தர்மம் இறைவனுடைய மூத்த குமாரனாகும்; தர்மம் மோக்ஷ உலகத்திற்கு ஏணியைப்போன்றிருக்கிறது; தர்மத்தினால் பாபம் கெடுகின்றது. சுருதியில் :

தர்மேண பாபநுததி — எனறும்

காஞ்சிப்புராணத்தில் :

அறமே மறங்கணீ ழுழதளிக்த மறமே கடவு ளுலகேற்றும்
அறமே சிவனுக் கொருவடிவ மாதஞ் சிவனை வழிபடுவோர்க்

---

லால், என்புத்தியானது சிறந்ததையே பற்றுகிறது" என்று கூறினான். ஆதலால் சிபியினுடைய இந்தப் பெருந்தன்மையை அறிகிறேன்" என்று நாரதர் சொல்லிமுடித்தார்.

கறமே யெல்லாப் பெறும்பயனு மளிக்கும் யார்க்கும் எவ்விடத்தும்
அறமே யச்சந் தவிர்ப்பதென வறைந்தான் சாதா தபழனிவன்

என்றும், விநாயக புராணத்தில்:

தேங்குவன் போகமுஞ் சிறந்த முத்தியும்
ஈங்குறு மார்க்கமு மீன்று நல்கலால்
ஓங்கிய வறத்தினை யுளமுன் மூன்றினும்
பாங்குற நிந்தலும் பரிந்து செய்தியால்

என்றும், திருக்கூவப்புராணத்தில்:

தரும மேயினை யில்பொரு டாரயிடைத் தகை சால்
ஒருமை யன்பினை யுதவிவன் றுலகினு முடன் போய்
அருமை இன்பமுய்ந் தந்தகப் செறுமேனி யறமே
இருமை யுந்துணை யாதுவ தன்றிமற் றில்லை

என்றும், கந்தபுராணத்தில்:

தருமமென் றேநபொரு ளுளது தாவிலா
இருமையி னின்பமு மேனிதி ளுக்குமால்
அருமையில் வரும்பொரு ளாத மன்னதும்
ஒருமையி னேர்க்கலா லுணர்தப் கோண்ணுமோ

என்றும், நீதிசாஸ்திரத்தில்:

ஸர்வரீதி பகஸசந்த்ர: ப்ரபாதோத் தீபகோரவ.
த்ரைலோக்யதீபகோ தர்மஸ்ஸுபுத்ர குலதீபக:

என்றும் கூறப்பட்டுளது. ஆகவே தர்மத்தையனுஷ்டிக்கவேண்டும். தைத்திரியம், சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 1-வது வாக்கியத்தில்:

தர்மஞ்சர தர்மாத்பரம் நாஸ்தி
ஸர்வேஷாம் பூதானும் மது!

ஆகவே ஒருபொழுதும் தருமத்தைவிட்டு வழுவலாகாது. தருமமார்க்கத்தில் நடப்போமாயின் நமக்குச் சிரச்சேதமுண்டாயினும் உண்மையான உயிர்ப்பைப்பெற்று அழிவற்ற பதவியை யடையவல்லோம்.

"தன்னைக் கொடுத்தாவது தர்மத்தைத் தேடவேண்டும்"

என்று பெரியோர்கள் மொழிகின்றனர். இதனுல்தான் ஔவையும் "அறஞ்செய விரும்பு" என்றுள். தர்மானுஷ்டானமின்றி உள்ளம் பரிசுத்தமாவதில்லை; கடவுளுடைய அருளுங் கிடைப்பதில்லை. மதங்கொண்டவன், அஜாக்கிறதையுடையவன், பித்தன், களைப்படைந்தவன், கோபத்தையுடையவன், பசித்தவன், அவசரக்காரன், லோபி, பயந்தவன், காமி இப்பதின்மரும் தர்மத்தையறிகிறதில்லை. ஆகவே

இவர்களுடன் பழகாமல் தர்மவழியில் நின்ற பெரியோர்களுடன் கூடி தர்மத்தைச் செய்வதற்கு முயலவேண்டும். தர்மவழியாகவே தான் பணத்தைச் சம்பாதிக்கவேண்டும்; தர்மவழியில்லாமல் வருகின்றபணம், இன்பம், புகழ் முதலியவைகள் பயன்படமாட்டாது; சேதுபுராணத்தில் :

திருவு மின்புஞ் சிறப்பும் புகழுமற்
றொருவ ராக்கலு நீக்கலு முள்ளவோ
மருவும் புண்ணிய மாந்தர்க் கவையெலாந்
தரும மின்றேனிற் றமே சிதையுமால்

என்றனர். தருமத்தின் வழியாக நடந்தால் யாவரும் துணைசெய்வர். தர்மத்திற்கு விரோதமானவழியில் நடந்தால் உடன்பிறந்தவர்களும் துணைசெய்யார். தாசரதி தர்மத்தின்பா லொழுகவேண்டுமென்று தன் அருமையான நாட்டையும் துறந்து காட்டிற்குச்சென்றார். அதனால் அவருக்கு மிருகங்களும் துணைசெய்தன. தசக்கிரீவன் தர்மத்திற்கு விரோதமானவழியில் சென்றதினால் சகோதரர்களும் துணை செய்யவில்லை. ஆகவே தர்மத்தின் வழியாகவே நடக்கவேண்டும். ஏழைகள் விஷயமாய் தர்மஞ்செய்யவேண்டும் அந்தோ! கலிகாலத்தில் கிழிந்ததுண்டையும் வறியோர்கட் கீவதற்கு மனம் வாராமல் கந்தைவஸ்திரத்தையுந்தந்து பாத்திரம் வாங்குகிறார்கள். (இது என அன்பிற்குரியவொருவர வாங்கவுங்கண்டேன்.) பசுவுக்காக அன்னப்பாலையும் (கஞ்சி) தருவதுகிடையாது; பசுவையுடையோர் கஞ்சியைக் கேட்டாலும் சாணம் தந்தால்தான் தருவோம்; சாணம் தருகின்றீர்களா? என்று கேட்கிறார்கள். இவர்களை நோக்கித்தானோ மாதாறு பங்கியுட

ஆவிந்த நீரோன் றிறப்பினு நாவிற்
கிரவி னிளி வந்ததில் என்றனர்.

மெய்யன்பர்களே! தர்மத்தின்பா லொழுகாததினாலல்லவோ பிறமதஸ்தர்களும் ஒப்புயர்வில்லாச் செப்பரும் நம் சைவமதத்தை ஈனமாகக் கருதி தூடணைசெய்கிறார்கள். சைவசமயத்தூடணஞ் செய்தால் நம்மை வலிந்தாட்கொள்ளும் தயாநிதியாகிய அறுமீன் காதலனை நிந்தித்ததுபோலல்லவோ? உலகத்தில் பெண்களுக்கு மாங்கல்யதாரணம் செய்தவன் நாயகன்; புருஷர்களாகிய நமக்கு நாயகன் வாகுலேயன். நம் கணவனுக்கு நிந்தையைத் தேடிவைக்

கின்றோம். நம்பதியை நிந்திக்கும்பொழுது செவிசாய்க்கின்றோம். அதர்மம் என்ற வாளைக்கொண்டு தர்மஸ்வரூபியாகிய நம்பதியை வெட்டுகின்றோம்! ஆ! இதுவா நமது கற்பு? நம சைவசமயத் திற்கு நிந்தையைத் தேடலாமா? தூஷிக்கும்பொழுது நாம செவி சாய்க்கலாமா? நாம் தர்மத்தினவழி நடக்காததினாலல்லவோ செவி சாய்க்க நேரிடுகிறது; ஆகவே தர்மவழியாகவே நடக்கவேண்டும். தானஞ்செய்யவேண்டும்; தானஞ் செய்யாமல் சாப்பிடப்படாது. தானஞ்செய்யாமல் தின்கிறவன் விஷத்தையுண்டவனாகிறான்!

. "அஸ் நாதா சீமலம் புங்தேஹ்ய ஜப. பூயசோணிதம்
அஹுத்வாச் கிருமிம்புங் தேஹ்யதா விஷமஸ்நுத இதி"

—அத்திரி.

(இ-ள்)—ஸ்நானஞ் செய்யாமல் சாப்பிடுகிறவன மலத்தைத் தினகின்றவனாகின்றான்! ஜபஞ்செய்யாமல் புசித்தவன் இரத்தம் சீழ் புசித்தவனாகின்றான்! ஓமம செய்யாமல் புசித்தவன புழுக்களை யுட்கொண்டவனாகின்றான்! தானஞ்செய்யாமல் புசித்தவன் விஷத் தையுண்டவனாகிறான்! என்று அத்திரி கூறுகின்றார் ஆகவே ஏழை களுக்கு உதவிசெய்யவேண்டும; "அஹிம்ஸா பரமோ தர்ம:" ஹிம்சை-என்றால் தொந்தரவு, அஹிம்சை என்றால் தொந்தரவு இல் லாமை; ஆகவே பிறவுயிர்களுக்கு துன்பத்தைச் செய்யாமல் இருப் பதுவே சிறந்த தர்மம். அஹிம்ஸையே சிறந்த தர்மமாக நினைக்கும் ஜெயினர்கள் தேன் சாப்பிடுவது கிடையாதாம; ஏனெனில் தேனீ யானது புஷ்பிக்கும காலங்களில் சிறிதேனும் சோம்பலில்லாமலும் சிரமம் பாராமலும் புஷ்பந்தோறுஞ்சென்று அலைந்தலைந்து தேனைத் துளித்துளியாகச் சேர்த்து புஷ்பமில்லாத காலத்தில் தங்களுடைய ஆகாரத்திற்காக வைத்திருக்கிறது. அந்தத்தேனை மனுஷ்யன் சாப் பிடுவதாயிருந்தால் ஆயிரக்கணக்கான தேனீக்களைக்கொன்று தேனைக் கொள்ளையடித்துதான் சாப்பிடவேண்டும். ஆகவே, தேன் சாப் பிடப்படாதென்பது ஜெயினர்களுடைய கொள்கையாம். ஜெயின மதக்கிரந்தமாகிய "உதாஜ ஜைனம்" என்னும கிரந்தத்தில் "ஒரு துளிதேன் சாப்பிட்டவன் ஏழுகிராமங்களை எரித்து சாம்பலாக்கினவ னுக்குச் சமமான பாபியாகிறான்" என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகவே அஹிம்ஸை என்ற தர்மத்தை ஒவ்வொருவரும் கைக்கொள்ள வேண்டும். சொற்சுத்தம், மனச்சுத்தம் என்னும் இரண்டு தர்மங் களே மேலான தர்மம் "ஸத்யாந நாஸ்தி பரோ தர்ம:" ஸத்யத்தை

விட மேலான தர்மம் இல்லை என்று பெரியோர்கள் கூறுகிறார்கள். பிரம தர்மத்தில் ' ஸதயத்தைவிட்டு வழுவலாகாது, தாமத்தைவிட்டு வழுவலாகாது, நற்செய்கையைவிட்டு வழுவலாகாது

ஸத்யாந் நப்ர மதி தவ்யம் தர்மாந் நப்ர மதிதவ்யம்
குசலாந் நப்ர மதி தவ்யம்

என்று கூறுகிறது செகசாப்போதரும வாய்மை என்ற அதிகாரத்தில

பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று ! என்றனர்.

ஆதலினால் சொறசுத்தமிருப்பதுதான் சிறந்த தருமமாகும். நாம் தர்ம வழியில் நடந்தால்தான துயர்கூர் பிறவியினின்று உயவோம். பிரபு லிங்கலீலையில்

எய்தற் கரிய யாக்கைதனக் கெய்திற் றென்று லதுகொண்டு
செய்தற் கரிய வறங்கள்பல செய்து துயர்கூர் பிறவியினின் [தில்
றுய்தற் கொருமை பெறவேண்ணு துழல்வோ னுடம்பு பொற்கலத்
தெய்தற் கரிய பாலகமிற் பெய்த தொக்து மென்பரால்

என்பதுபோல் மானிடசரீரம எடுத்ததின்பயன் அறமார்க்கத்திலேயே ஒழுகல்வேண்டும ஏனெனில் மனுஷ்ய சரீரம ஒரு நாளைக்கு அழிந்துபோய்விடும். ஆகவே மானிடசரீரம் இருக்கும்பொழுது தர்மத்தின்பால் நின்று ஆன்மலாபத்தை யடைந்தேதீரவேண்டும.

தவத்துறை மாக்கள் மிகப்பெருந் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றப் பாலகர்
முதியோ ரென்னு னிளையோ ரென்னான்
கொடுந் தொழிலாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய் சுடலை தின்னக் கண்டுங்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவா ருண்டோ
இளமையு நில்லா யாக்கையு நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
மிக்க வறமே விழுத்துணை யாவது.

—மணிமேகலை.

ஓம் தத் ஸத்:

# இரவல்

"இரவல்" என்பது யாவருக்கும் இன்றியமையாததென்பது பெரும்பாலோர் அபிப்பிராயம்; ஆயினும், சுயமரியாதையுள்ள ஒவ்வொருவனும், இழிவான இவ்விரவலை மேற்கொள்ளான். இரப்பதைப்பற்றி

பல்லெலாம் தெரியக் காட்டி பருவரல் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாம் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி
இல்லலா மிரந்த லந்தோ இழிவு, இழிவு

என்று பெரியோர் கூறியிருக்கின்றார். இதனாற்றான் இரவல் கேட்கும் பெரியோர்கள், பல்லெல்லாம் காட்டி மாயா இழிப்புடன் உடனேயோ, அடுத்த நிமிஷத்திலேயோ, தாம் பெற்றுப்போகும் சாமான்களைக் கொடுத்துவிடுவதாகச் சொல்லி வாங்கிப்போய், அவர்கள் சௌகரியப்படி உபயோகித்துக்கொண்டு திருப்பிக் கொடுப்பதை வழக்கமாய் வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். இதைக் கௌரவமான பிச்சை என்றுதான் சொல்லவேண்டும். இரவல்! இரவல்!! அப்பா!!! இதில எத்தனைவிதம்? வருஷக்கணக்கில் வர்ணித்தாலும் இது ஒரு முடிவிற்கு வாராது என்று நிச்சயமாகச்சொல்லலாம். இக்கொடியவியாதியால் கணக்கற்ற புத்தகங்களும், பத்திரிகைகளும சாமான்களும் மாள்கின்றன. இந் நோயைத்தீர்க்க ஒரு L. M. P. யும் ஏற்படாதது விந்தையே.

நாம் ஒரு புத்தகத்தையோ அல்லது பத்திரிக்கையையோ அல்லது பேப்பரையோ வாசித்துக்கொண்டிருக்கும்போது நமக்குத் தெரிந்த ஒருவர் வந்து சம்புவைப்போல்பேசி, பத்து நிமிஷங்களில் கொடுத்துவிடுவதாக வாங்கிக்கொண்டு போய்விடுகின்றனர். நமது புத்தகம் உருமாறி மூலைகளில் மடிக்கப்பட்டு "நாய்க்காது" களுடன் நம்மிடம் திரும்பிவருவதுமுண்டு; நம்புத்தகம் ஆரோக்கியத்துடன் இருக்கும்பொருட்டு, அப்பியங்கஸ்நானஞ் செய்துவைத்து அனுப்புமற்றொருவிதம்; இன்னுஞ்சிலர் "அயேஸ்" சங்கத்தின் அங்கத்தி

னர்கள் நம் கண்களுக்குக்காட்டாமலே வாயில் போட்டுக்கொள்வது இன்னொருவிதம்; சிலர் (நம புத்தகம) இரவல்கொடுத்து நம் புத்தகத்திலுள்ள படங்களையும் இனியவிஷயங்களையும அபேஸ் செய்துவிட்டு மிகவும் பத்திரமாய அனுப்புவது இன்னொருவிதம இம்மாதிரி வருடமெல்லாம் இரவல் வாங்கிப்படித்துக்கொண்டிருக்கும தனவானகள் காசுபோட்டு வாங்கிப் படிப்பதுதான் எப்பொழுது ?

உடைகளை இரவல் கேட்பது ஒரு புதிதன்று; நமது நண்பர் நான் நாளை காலை 3-30-க்கு புகைவண்டிக்கு மதராஸ் போகிறேனென்றாவது அல்லது மாமியார் வீட்டுக்குப் போகிறேனென்றாவது சொல்லிவிட்டு நமது உடுப்புகளைப் பெற்றுப்போகிறார்கள்; இவர்கள் இவற்றைத் திருப்பிக்கொடுப்பது துர்லபமே. அப்படித் திருப்பிக்கொடுத்தாலும் ஏதாவது ஒன்றில்லாயினும் ஒரு எக்ஸ்பெரிமெண்டல் போஸ்ட் ஆபீஸாவது அல்லது கடவுளாலும் அழிக்கமுடியாத சில முத்திரைகளாவது இல்லாமல் போகாது.

பேனா இரவல் கேட்பது ஒரு ஆச்சரியமானதென்று நினைப்பது கூடாது; தபாலாபீஸுக்கு அருகில் நம் பேனாவைக் காட்டிவிட்டால் கடிதம் எழுதவேண்டுமென்றும் மணியார்டர் எழுதவேண்டுமென்றும் நம் பிராணனை வாங்கிவிடுவார்கள், ஐயா நான் அவசரமாக புகைவண்டித்தொடர் நிற்குமிடத்திற்குப் போகவேண்டும் என்று கூறினால் நீங்களாவது எழுதிக்கொடுத்துவிடுங்கள் என நம்மிடம் வேலை வாங்கிக்கொண்டு சுமார் ஒருமணி நேரம் தாமதித்து அனுப்பிவிடுவார்கள். பேனாவை அவர்களிடம் கொடுத்துவிட்டாலோ மண்வெட்டி பிடித்த தங்களுடைய கையால் தாங்கள் இஷ்டப்படி எழுதியபிறகு நாம எழுதமுடியாதபடி திருப்பிக்கொடுத்துவிடுவார்கள். அதிகாரிகளின் முன் காட்டிவிட்டாலோ விசிட் எழுதிவிட்டுத் தருகிறேன் என்று வாங்கி எழுதியபிறகு இது என்ன பேனா ? கூர்மையாக நன்றாய் எழுதுகிறதே என்று பேனாவின் பெயரைப் பார்த்துவிட்டு (the Krishna) தங்களுடைய கோட் பையில் போட்டுக்கொண்டு போய் விடுவார்கள். நாம் பேனாவைக் கொடுங்களென்று கேட்க முடியாமல் வடையை இழந்த காக்கையைப்போல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதுதான். இம்மாதிரி பேட் புத்தகம் முதலானவைகளையும் வாங்கிக் கொண்டுபோய்விடுவார்கள். இவைகளுக்குப் புது மாதிரியான இரவல் ராஜதிருடு எனப் பெயரிடலாமே.

(தொடரும்)

உ

சிவ குஹாயநம

# திருப்புகழமிர்தம்.



" திருப்புகழை மேவுகின்ற சொற்றவனை நாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

| மலர் 2 Vol. 2 | ஈஸ்வர ஹு பங்குனிமீ 1உ மார்ச்சு—1938 | இதழ் 12. No 12. |
|---|---|---|

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

(26) அறிவழிய மயல்பெருக வரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே
செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே
சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே
நெறிதவறி யலரிமதி நடுவனமக பதிமுளரி
நிருதிநிதி பதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே
மறிபரசு கரமிலகு பரமனுமை யிருவிழியு
மகிழமடி மிசைவளரு மிளையோனே
மதலைதவ ழுததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே.

## பதவுரை.

சிவனை நிகர் - சிவமூர்த்திக்குச் சமானமானவரும், பொதிய வரை - பொதிய மலையில் வசிப்பவருமாகிய, முனிவன் - அகத்திய முனிவர், அகமகிழ - உள்ளம் மகிழ்ச்சியடையவும், இரு செவி குளிர - அவருடைய இரண்டு செவிகளும் குளிர்ச்சியடையவும், இனிய தமிழ். இனிமையான தமிழ் மொழியை அம் முனிபுங்கவருக்கு, பகர்வோனே — உபதேசித்தருளியவரே!, நெறி தவறி - அற நெறியினின்று வழுவி, அலரி - சூரியன், மதி - சந்திரன், நடுவன் - இயமன், மகபதி - நூறு அசுவமேதங்களுக்குத் தலைவனாகிய தேவேந்திரன், முளரி - அக்கினி, நிருதி - தென்மேற்றிசைக்கு அதிபனாகிய நிருதிதேவன், நிதிபதி - நிதிகளுக்கு அதிபதியாகிய குபேரன், கரிய வனமாலி - கருமை நிறம்பொருந்திய திருமேனியை யுடையவரும் துளபமாலையை யணிந்துள்ளவருமான நாராயணர், நிலவுமறையவன்- நிலைபெறுபவராகிய பிரமதேவர், இவர்கள் அலைய-இத்தேவர்களனைவரும் வருந்தி ஏவல்புரிந்துத் திரியுமாறு, அரசு உரிமைபுரி - அரசாட்சி செய்துகொண்டிருந்த, நிருதன் உரம் அற - அசுரனாகிய சூரபன்மனது மார்பு பிளக்குமாறு, அயிலை விடுவோனே - வேலாயுதத்தைப் பிரயோகித்தவரே!, மறி பரசு கரம இலகு - மான்குட்டியையும் மழுவையும் கரத்தில் தாங்கிக்கொண்டருள்புரியும், பரமன் - பரமபதியாகிய சிவபெருமான், உமை - உமாதேவியார், இருவிழியும் - இரண்டு கண்மலர்களும், மகிழ - மகிழ்ச்சியடைய, மடிமிசை வளரும் - உமைப்பட்டையாரது திருமடியின்மீது வளர்கின்ற, இளையோனே - என்றும் மாறாத இளங் குமாரரே!, மதலை தவழ் - மரக்கலங்கள் தவழுகின்ற, உததியிடைவரும் - சமுத்திரத்தில் தோன்றும், தரளமணி - முத்துமணிகள் புளினம் மறைய உயர் - மணற்குன்றுகள் மறையுமாறு அதனினும் உயர்ந்துள்ள, கரையில் உறை - சமுத்திரக்கரையாகிய திருச்சீரலைவாயிலே எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையின் மிக்கவரே!, அறிவு அழிய - (அடியேனுக்கு மரணவஸ்தையுண்டாகிற காலத்தில்) அறிவுநிலை கலங்கி அழியவும், மயல் பெருக - மயக்கம் பெருகவும், உரையும் அற - (கைகால்களின் அசைவு நீங்குவதோடு) பேசுவதும் நீங்கவும், விழிசுழல - கண்கள் சுழலவும், அனல் அவிய - உடம்பிலுள்ள அக்கினி தணியவும், மலம் ஒழுக - மலம் தானாக நீர்போல் ஒழுகவும், அகலாதே - அடியேனைவிட்டு நீங்காமல்,

அன்னையும் - தாயாரும், மனை - மனைவியும், அருகில் உற - சமீபத்தில் அமர்ந்து, வெருவி அழ - பயந்து ஓவென்று கதறியழவும், உறவும் அழ - சுற்றத்தார்களும் அழவும், அழலின் நிகர் மறலி - அக்கினி போற் கொதிக்கின்ற கூற்றுவன், அழையாதே — அடியேனை தனது நரகலோகத்திற்கு வாவென்று அழையாவண்ணம், செறிபட இருவினை - அடியேனை நெருங்கியுள்ள நல்வினை தீவினைகளாகிய இருவினைகளும், காரணம் - அதற்குக் காரணங்களும், மருவு புலன் ஒழிய - பொருந்தியுள்ள ஐம்புலன்களும் செயலற்று நீங்க, உயர் திருவடியில் அணுக - தேவரீரது சிறந்த திருவடித்தாமரைகளில் அடியேன் சேருமாறு, வரம் அருளவாயே - அடியேனுக்கு வரத்தை வழங்கியருளுவீர்.

## பொழிப்புரை.

சிவபெருமானுக்கு நிகர் என்று எல்லோராலும் கருதப்படுகின்றவரும் பொதியாசலத்தில் தவம்புரிந்துகொண்டு வீற்றிருப்பவருமாகிய அகத்தியமுனிவருக்கு அவருடைய உள்ளம் மகிழவும், இருசெவிகளும் குளிரவும், இனிமையான தமிழ் மொழியை உபதேசித்தருளியவரே!. அறநெறி தவறி சூரியன், சந்திரன், இமயன், இந்திரன், அக்கினி, நிருதி, குபேரன், துளபமாலையைத் தரித்துக்கொண்டுள்ள கரிய திருமேனியையுடைய திருமால், நிலைபெற்றுள்ள பிரமதேவர், இவர்கள் (சிறைப்பட்டு) நெடுநாளாக ஏவல்புரிந்துகொண்டு ஏங்கியலையுமாறு அரசாட்சிசெய்த சூரபன்மன் மனது மார்பு பிளந்தழியுமாறு வேலாயுதத்தை விடுத்தருளியவரே! மான் மழுவைக் கரத்தில் தாங்கிக்கொண்டுள்ள சிவபெருமானும் உமையம்மையாரும் கண்களிக்க உமாதேவியார் திருமடித்தலத்தின்கண் வளருகின்ற இளைய பிள்ளையாரே! மரக்கலங்கள் தவழுகின்ற சமுத்திரத்தில் தோன்றுகின்ற முத்துமணிகள் மணற்குன்றுகள் மறையுமாறு உயர்ந்துள்ள கடற்கரையாகிய திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள பெருமையின் மிக்கவரே! மரணகாலத்தில் அடியேனுடைய அறிவு அழியவும், மயக்கம் உண்டாகவும், (கை கால்கள் அசைவற்றதோடு) பேசுவதும் ஒழியவும் கண்கள் சுழலவும், உடம்பிலுள்ள உதராக்கினி தணியவும், தன்னாலே மலம் நீராகி ஒழுகவும், இந்நிலையிலும் என்னைவிட்டு நீங்காமற்படிக்கு தாயாரும் மனைவியும் அருகிலிருந்து பயந்து ஓவென்று கதறியழவும், சுற்றத்தார்களும அழவும், நெருப்பைப்போல் கொதித்துக்கொண்டு வருமபடியான கூற்றுவன் என்னைத்தனது நரகலோ

கத்திருந்து அழைக்காவண்ணம், அடியேனை நெருங்கியுள்ள நல்வினை தீவினைகளாகிய இருவினைகளும், அந்தக்கரணங்களும், பொருந்தியுள்ள ஐம்புலன்களும் செயலற்று நீங்க தேவரீரது திருவடி மலர்களில் அடியேன் சேருமாறு வரமருள்புரிவீர்.

## விரிவுரை.

அறிவழிய . . . . மலமொழுக :—

*ஆன்மா பிரியுங்காலத்தில் அறிவுகெட்டு மயக்கமுற்று நாவுகுழறி அவயவங்கள் அசைவற்று புலன்கள் கலங்கி துன்புறுவார்கள்.*

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட
டைம்மே லுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வா
னமருங் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர
மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந்
திருவையாறே

—(சம்பந்தர்) தமிழ்மறை.

அனையுமனை . . . உறவுமற :—

*தாய மனைவி மக்கள் முதலியோர் உயிர்பிரியும்போது கதறியழுவார்களேயன்றி உயிர்க்கு உறுதிபயக்கும் தன்மையைத் தேடமாட்டார்கள். இயமனுடைய பாசக்கயிற்றினின்றும் விடுவிக்கவும் ஆற்றலற்று வாளா வருந்துவார்கள். அம்மரணகாலத்தில் காப்பாற்ற வல்லவர் முருகவேள் ஒருவரேயாவர்.*

"முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகாலர் தூதாகெட
முடுகுவதும் அருணெறியி லுதவுவதும்"

— வகுப்பு.

"ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன்றன் அடைக்கலமே"

—அலங்காரம்.

அழலினிகா மறலியெனை யழையாதே :—

*தீவினையைச் செய்த பாவிகளை இயமதூதுவர்கள் வடவாமுகாக்கினிபோற் கொதித்துப் பாசக்கயிற்றால் இறுக்கிக்கட்டிக்கொண்டு*

தமது யமபுரம் கொண்டுபோய்த் துன்புறுத்துவார்கள். புண்ணியஞ் செய்தவர்களை இயமதூதுவர்கள் உபசரித்து சுகமான வழியில் கொண்டுபோவார்கள்.

யமலோகத்திற்கும் மனிதலோகத்திற்கும் இடையிலுள்ள வழி எண்பத்தாறாயிர யோசனை தூரமாகும். அவ்வழியானது காடாகவும் கோரமாகவும் கற்பாறைகளிலும் தணியாத வெயிலாகவும் இருக்கிறது. அந்த வழியில் மரங்களின் நிழல் கிடையாது; தண்ணீருமில்லை; களைப்படைந்தவனும் இளைத்தவனுமான மனிதன் இளைப்பாறத்தக்க வீடுகளுமில்லை. யமனுடைய கட்டளையைச் செய்கின்ற யமதூதர்களால் ஆடவரும் மகளிரும் அப்படியே பூமியிலுள்ள மற்றவைகளும் அந்தவழியில் பலாத்காரமாகக் கொண்டுபோகப்படுகிறார்கள். எந்த மனிதர்கள் ஏழைகளுக்கு யானை குதிரை முதலிய வாகனங்களைக்கொடுத்து உதவிசெய்கின்றார்களோ அவர்கள் அந்த வாகனங்களின்மேல் அந்தவழியில் துன்பமில்லாமற் செல்லுகிறார்கள். குடையைத்தானஞ்செய்தவர்கள் குடையினாலே வெய்யிலைத் தடுத்துக்கொண்டு செல்லுகிறார்கள். அன்னதானஞ் செய்தவர்கள் அந்த வழியில் அன்னத்தைப் புசித்துக்கொண்டு பசியின்றி செல்லுகிறார்கள். வஸ்திரங்களைக் கொடுப்பவர்கள் வஸ்திரமுள்ளவர்களாகவும், வஸ்திரம் கொடாதவர்கள் ஆடையின்றி நிர்வாணராகவும் செல்லுகிறார்கள். பொன்னைக் கொடுத்தவர்கள் அலங்கரிக்கப்பட்டவர்களாக சுகமாகச் செல்லுகிறார்கள். பூதானஞ் செய்பவர்கள் விரும்பின எல்லாவற்றையும் அடைந்து இன்புற்று இனிது செல்லுகிறார்கள். தானியங்களைக் கொடுக்கிற மனிதர்கள் துன்பமின்றிச் செல்லுகிறார்கள். வீட்டைத் தானஞ்செய்கிற மனிதர்கள் விமானங்களில் மிக்க சுகமாகச் செல்லுகிறார்கள். தண்ணீரைத் தானஞ் செய்தவர்கள் தாகமில்லாதவர்களாகவும் மிக மகிழ்ந்த மனமுள்ளவர்களாகவும் செல்லுகிறார்கள்; விளக்குதானஞ் செய்பவர்கள் பிரகாசமுள்ள வழியில் பிரகாசமுள்ள உருவத்துடன் செல்லுகிறார்கள்; கோதானஞ் செய்தவர்கள் எல்லாப் பாவங்களாலும் விடுபட்டு சுகமாகச் செல்லுகிறார்கள். ஒரு மாதம் உபவாசமிருப்பவர்கள் அன்னங்கட்டிய விமானத்தின்மீது செல்லுகிறார்கள். ஆறுநாளுக்கொருதரம் உபவாசமிருப்பவர்கள் மயில்கள் பூட்டின விமானங்களின்மேல் செல்லுவார்கள். எந்த மனிதன் ஒருவேளை சாப்பிட்டுக் கொண்டு மூன்று இரவுகளைக் கழிக்கிறானோ? இடைவேளைகளில்

சாப்பிடுகிறதில்லையோ அவனுக்கு அழிவற்ற லோகங்கள் கிடைக்கின்றன. தண்ணீர்ப்பந்தல் வைத்து கோடைக் காலத்தில் தண்ணீரால் வாடும் மக்களுக்குத் தண்ணீரும மோரும கொடுத்து உதவிய உத்தமர்களுக்கு அந்த யமலோகத்தில் புஷ்போதகை என்ற நதியை யுண்டாக்கிக் கொடுப்பார்கள் அந்த நதியில் அவர்கள் அமிர்தம் போன்ற குளிர்ந்த தண்ணீரைக் குடித்துக்கொண்டு சுகமே யிருப்பார்கள். எவர்கள் தீவினைகளைச் செய்தவர்களோ அவர்களுக்கு அந்த நதியில் சீயானது குடிப்பதற்கு ஏற்படுத்தப்படுகிறது மாமிசங்களை தின்றவர்கள் யமலோகத்தில் தமது மாமிசத்தைத் தாமே யுண்டு தங்களுடம்பில் வடியும் உதிரத்தைக் குடித்துக்கொண்டு தீவாய் நரகத்தில் மல்லாக்கப்படுத்த வண்ணமாகப் பெருந் துன்பத்தை யனுபவித்துக் கொண்டிருப்பார்கள். இவற்றையெல்லாம் உணர்ந்து நாம் நல்வழிப்படுமாறு நமது பரம குருமூர்த்தியாகிய அருணகிரிநாத சுவாமிகள் நம்மீதுள்ள பெருங் கருணையால் உபதேசிக்குமாறு காண்க.

> கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி
> இழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்
> குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ ணூர்க்குச் செல்லும்
> வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.
>
> —அலங்காரம்.

செற்பு மிருவினை கரண . . . . . அணுகலாம்:—

இருவினையொப்பு, மலபரிபாகமுற்று சக்திநிபாதமடைந்த பக்குவ ஆன்மாக்களே இறைவன் திருவடியில் இரண்டறக்கலந்து அத்துவித முத்தியின்பத்தை நுகர்ந்து பிறவாநிலையைப் பெறுவார்கள். அவ்வரத்தை ஆண்டவன்பால் வேண்டுகின்றனர்.

சிவனை நிகர் பொதியவரை முனிவன் .—

பருவத வேந்தனுக்கு அவன் செய்த தவங்காரணமாகத் திருமகளாகத் தோன்றி வளர்ந்த உமாதேவியாரைச் சிவபெருமான் திருமணஞ் செய்துகொள்ளும்பொருட்டு இமயமலையில் எழுந்தருளிய ஞான்று, திருக்கல்யாணத்தைச் சேவிக்கும்பொருட்டு எப்புவனத்திலுமுள்ள யாவரும் வந்து கூடினமையால் இமயமலை நடுங்கியது. பூமியின் வடபால் தாழ, தென்பால் மிக உயர்ந்தது. உடனே தேவர்கள்முதல் அனைவரும் ஏங்கி, ‘என் செய்வது’ என்று துன்புற்று “சிவா சிவா” என்று ஓலமிட்டார்கள். சிவபெருமான் அது

கண்டு திருமுறுவல்செய்து, அவர்களது குறையை நீக்கத் திருவுளங்கொண்டு, திருநந்திதேவரை நோக்கி "அகத்திய முனிவனை இங்கு அழைத்துவா" என்று பணித்தருளினார். நந்திதேவர் வணங்கிக்கொண்டுபோய் அகத்திய முனிவரைக்கூவ", அவர் அங்கு வந்தார். அவரை அழைத்துக்கொண்டுபோய்ச், சிவபெருமான் திருமுன்பு விடுப்ப, அகத்தியர் ஆலமுண்ட அண்ணலை வணங்கி அஞ்சலியத்தராய் நிற்ப, சிவபெருமான் திருமுனிவரை நோக்கி, 'முனிவனே" இங்கே யாவரும் வந்து கூடினமையால், 'வடபால்' தாழ்ந்து தென்பால் உயர்ந்துவிட்டது, இதனால் உயிர்கள் மிகவும் வருந்துகின்றன ஆகலால் நீ இமயமலையினின்று நீங்கித் தென்னாட்டிற் சென்று பொதியை மலையின்மேல் இருக்கக்கடவாய்; நின்னைத்தவிர இதனைச் செய்பவரல்லவர், வேறு யாருளர்? நீ ஒருவனே பொதியாசலஞ் சேர்ந்தால் பூமி சமனாகும்" என்று பணித்தருளினார். அதுகேட்ட அகத்திய முனிவர் அச்சமுற்று, "பரமகருணாநிதியாகிய பரமபதியே! அடியேன் யாது குற்றஞ்செய்தேன்? தேவரீரது திருமணக்கோலத்தைக் காணவொட்டாமல் கொடியேனை விலக்குகின்றீர்; எந்தையே! திருமாலிருக்க, திசைமுகன் முதலிய தேவர்களிருக்க, எளியேனை விலக்குவது யாது காரணம்?" என்று பணிந்து உரைத்தார். சிவபெருமான், "மாதவ! உனக்கு ஒப்பான முனிவர்கள் உலகத்தில் உண்டோ? இல்லை; பிரமனும் மாலும் நினக்கு நிகராகார்; ஆதலால் நீ நினைந்தவை யாவையும் தவறின்றி முடிக்கவல்லை; இவ்வரிய செய்கை மற்றைத் தேவர்களாலேனும் முனிவர்களாலேனும் முடியுமா? யாவரினும் மேலாகிய உன்னாலே மாத்திரம் முடியும்; செல்லக்கடவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அகத்திய முனிவர், 'எமது பரம பிதாவே! தங்களுடைய திருமணக்கோலத்தை வணங்காது பிரிதலாற்றாமையால் என்மனம் மிகக் கவல்கின்றது" என்ன, கைலாசபதி, "குறுமுனிவ! நீ கவலாது பொதியமலை செல்லுதி; நாம் அங்குவந்து நமது கல்யாணக்கோலத்தை காட்டுவோம்; நீ மகிழ்ந்து தரிசிக்கக்கடவை, நீ நம்மைத் தியானித்துக்கொண்டு அங்கு சிலநாட் டங்கியிருந்து, பின்பு முன்போல் நமது பக்கத்து வருவாயாக" என்று அருளிச்செய்தார்.

அகத்திய முனிவர் அதற்கியைந்து, அரனாரை வணங்கி விடைபெற்று, பெருமூச்செறிந்து அரிதினீங்கி, தென்றிசையை நோக்கிச் சென்று பொதிய மலையை யடைந்து, சிவமூர்த்தியைத் தியானித்

தென்னாடு தம் பொதியமலையில் எழுந்தருளியிருந்தார்; பூமியுஞ் சமமாயின. ஆன்மாக்கள் துன்பம் நீங்கி இன்புற்றன. என்னே! அம்முனிவரின் பெருமை? மாலயனாதி வானவராலும் முனிவர்களாலும் செய்தற்கரிய அரிய செயலைச் செய்ததனால் இங்கே நம் அருணகிரியார் "சிவனை நிகர் பொதியவரை முனிவன்" என்று ஓதியருளினார். வடபாகத்தில் கைலாயமலையில் சிவபெருமான் எழுந்தருளியிருப்பதுபோல தென்பாகத்தில் அகத்தியமுனிவர் எழுந்தருளியிருப்பதால் "பொதியவரை முனிவன்" என்ற குறிப்பும் உணர்த்தற் கிடமாயமைந்துள்ளன.

இனிய தமிழ் பகர்வோனே.—

அகத்தியருக்கு முருகப்பெருமான் இனிய தமிழ் மொழியையும் அதன் இலக்கணத்தையும் உபதேசித்தருளினார். இதனால் தமிழ் மொழி ஏனைய மொழிகளினும் உயர்ந்த மொழியென்பதும், அதனை ஆசிரியர் முருகப்பெருமானே என்பதும், அதனை உலகிற்கு உபகரித்த சந்தானாசாரியர் அகத்தியர் என்பதும் நன்கு புலனாகின்றன

நெறிதவறு . . . . . அயிலை விடுவோனே —

சூரபன்மன் சிவமூர்த்தியிடம் பெரா வரம்பெற்று, உள்ளந்தருக்கி இந்திரன் முதலிய இமையவர்களை மீன் பிடிக்கவும், வருணனை தண்ணீர் தெளிக்கவும், பிரமனை நாள் கோள் முதலியவற்றைச் சொல்லவும், திருமாலை கேட்ட வரங்களை நல்கவும், வாயு வீதிகளைக் கூட்டவும், சூரியனை தன் மண்டலத்திற் செல்லாது வீரமாமகேந்திரபுரியில் தேரைவிட்டிறங்கி குளிர்ந்த கிரணங்களை வீசிக்கொண்டு நடந்து செல்லவும், சந்திரனை எந்த நாளிலும் பூரணகலைகளுடன் பிரகாசித்துக்கொண்டிருக்கவும், இமனை எந்த உயிரையும் பற்றாமலிருக்கவும், அக்கினி கனன்றுமே எரியவும், பிறதேவர்கள் தத்தமக்குரிய வேலைகளைச் செய்யவும், ஆஞ்ஞாபித்து, அவர்கள் பலநாளாய் அலைந்து திரியுமாறு கொடுமைசெய்ததால், குமாரக்கடவுள் தேவர்கள் துன்பத்தை நீக்குமாறு திருவுளங்கொண்டு, சூராதியவுணரையழித்து ஆட்கொண்டனர்

## கருத்துரை.

அகத்தியமுனிவருக்கு இனிய தமிழை உபதேசித்தவரே! நெறி தவறிய சூராதியவுணரை யழித்தவரே! உமாதேவியாரது திருக்குமாரரே! திருச்செந்திலாதிப! மரணகாலத்தில் பொறி புலன்கள் கலங்கி அடியேன் செயலற்றுக் கிடக்குங்காலத்தில், என் மனைவி மக்கள் கதறியழ இயமன் என்னை அழைக்காவண்ணம் தேவரீரது திருவடியிற் சேர்த்தருள்வீர்.

---

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:




(325-ம் பக்கத் தொடர்ச்சி.)

जयानन्द भूमन् जयापार धामन्
जयामोघ कीर्ते जयानन्दमूर्ते ।
जयानन्दसिन्धो जयाशेषबन्धो
जयत्वं सदा मुक्ति दाने स सूनो ॥

(32) ஜயானந்த[3] பூ[4]மன்! ஜயாபார தா[4]மன்!
ஜயாமோக[4] கீர்த்தே! ஜயானந்த[3] மூர்த்தே!
ஜயானந்த[3] ஸிந்தோ[4]! ஜயா சேஷ ப[3]ந்தோ[4]!
ஜயத்வம் ஸதா[3] முக்தி தா[3]னேச ஸூநோ! ॥

## பதவுரை.

ஹே ஆனந்த பூமன்! ஜய! - நிறைந்த இருப்பிடமே! தேவரீர் வாழ்ந்திருக்கவேண்டும்,

ஹே அபாரதாமன்! ஜய! - அளவற்ற காந்தியுள்ளவரே! அல்லது அளவற்ற ஆலயங்களை யுடையவரே! தேவரீர் வாழ்ந்திருக்கவேண்டும்,

ஹே அமோக கீர்த்தே! ஜய! - அழியாப் புகழ்படைத்தவரே! தேவரீர் எப்போதும் வாழ்ந்திருக்கவேண்டும்,

ஹே அனந்த மூர்த்தே! ஜய! - அளவிறந்த வடிவத்தை யுடையவரே! தேவரீர் என்றென்றும் வாழ்ந்திருக்க வேண்டும்,

ஹே ஆனந்த ஸிந்தோ! ஜய! - ஆனந்தக்கடலே! தேவரீர் சதாகாலமும் வாழ்ந்திருக்கவேண்டும்!

ஹே அசேஷ பாதோ ! ஜய ! - உலகத்திற்கெல்லாம் பாதுவே ! தேவரீர் எந்நாளும் வாழ்ந்திருக்கவேண்டும்,

ஹே முக்திதான நசஸம்ஶோ ! த்வம ஸதா ஜய! - ஓ முத்தியை யளிப்பவரே! பரமசிவனுக்குப் புத்திரரே ! தேவரீர் எக்காலமும் வாழ்ந்திருக்கவேண்டும்.

## பொழிப்புரை.

ஓ முத்தியை யளிக்கும் முருகக்கடவுளே ! ஆனந்தத்திற்கு இருப்பிடமானவரும், அளவிறந்த காந்தியும், அழியாப் புகழும், அளவிறந்த வடிவமும் படைத்தவரும், உலகிறகெல்லாம் உறைவினருமாகிய தேவரீர் எக்காலமும் வாழ்ந்திருக்கவேண்டும்.

சுவாமியானவர் பக்தர்களை அனுக்ரகிக்கச் சதாகாலமும் இவ்விடத்திலேயே எழுந்தருளியிருக்கவேண்டும் என்ற இந்நூலாசிரியரின் பிரார்த்தனையே இது.

भुजङ्गाख्यवृत्तेन क्लृप्तं स्तवं यः
पठेद्भक्ति युक्तो गुहं सं प्रणम्य।
सपुत्रान् कलत्रं धनं दीर्घमायुर्
लभेत् स्कन्दसायुज्यमन्दे नरःसः ॥

## பலசுருதி

(33) புஜங்காக்ய வ்ருத்தேன க்லுப்தம் ஸ்தவம்ய:
படேத் பக்தி யுக்தோ குஹம் ஸம்ப்ரணம்ய ।
ஸபுத்ரான் களத்ரம் தனம் தீர்க மாயுர்
லபேத் ஸ்கந்த ஸாயுஜ்ய மந்தே நர:ஸ: ॥

## பதவுரை.

| | |
|---|---|
| ய: குஹம் ஸம்ப்ரணம்ய | - எந்த மனிதன் முருகக் கடவுளை நமஸ்கரித்துக்கொண்டு, |
| பக்தி யுக்த : | - பக்தியோடு கூடினவனாய், |
| புஜங்காக்யவ்ருத்தேன க்லுப்தம் | - "புஜங்கப்ரயாதம்" என்னும் யாப்பினால் அமைக்கப்பெற்ற, |
| ஸ்தவம் படேத் | - ஸ்தோத்திரத்தை ஓதுவானோ, |

உ

ஓம் குஹாய நம.

# கந்தர் திருவிளையாடல்

(333-வது பக்கத் தொடர்ச்சி)

ஆறு சமயங்களுக்குந் தலைவனும், ஆறெழுத்தை யன்பினுடன் கூறுமவர் சிந்தை குடிகொண்டோனுமாகிய ஆறுமுகக் கடவுள், உள்ளுநவார் வினையகற்றும் வெள்ளியம் பொருப்பின் முன்வாயிலின் திருமண்டபத்தின்கண், வீரவாகு தேவர் முதலிய ஒன்பான் துணைவரும், இலக்கஞ் சேனைவீரர்களும் புடை சூழ்ந்து போற்றிநிற்ப வீற்றிருந்தருளினர். அத்தருணத்தில் வீணைவல்லோராகிய நாரத முனிவர், கங்கைசூடிய மங்கைபங்கரான்றத உவகையுண்டாகுமாறு ஒரு வேள்வி செய்ய விரும்பினர் அந்தணர், இந்திரன், அருந்தவர் அயன் அரி முதலியவர்களுடன் பூவுலகின்கண் யாகத்திற்கு இடம் வகுத்து, வேதாகம விதிப்படி செய்யத்தொடங்கினர். அவ்வாறு செய்யும்போது மந்திர மாறுபாட்டால் யாகாக்கினியினின்றும் செவ்வானம்போன்ற நிறத்துடன் ஓராட்டுக்கடா தோன்றியது. அதன் கோரவடிவத்தையும் பெருஞ்சினத்தோடு செய்யும் ஆரவாரத்தையும்

---

ஸ:புத்ரான், களத்ரம், தனம், தீர்க்கம் ஆயு. - அவன் புத்திரர்கள், மனை, பொருள், நெடுங்கால வாழ்வு இவை களையடைந்து,

அந்தே ஸ்கந்த ஸாயுஜ்யம் லபேத் - முடிவில் முருகப் பெருமானுடைய ஸாயுஜ்ய முத்தியையும் அடைவான்.

## பொழிப்புரை.

எவனொருவன் சுவாமியை வணங்கிப் பக்தியோடு இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பானோ அவன் தனதான்ய புத்திர களத்திராதிகளுடன் நெடுநாட்கள் இவ்வுலகில் வாழ்ந்திருந்து முடிவில் முருகப்பெருமானது திருவடி நிழலையடைந்து அழியாப் பேரின்ப சுகத்தையும் அனுபவிப்பான்.

ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரம்
முற்றிற்று.

---

கண்டு அங்குள்ளார் அனைவர்களும் அஞ்சி நடுங்கினார்கள். அந்த ஆட்டுக்கடா தோன்றியதை ஆராயுங்காலத்து, "பூமியினகண் சிலர் வேதியரென்றிருப்பார் வேதத்தினுட் பொருளையறியாமல், பசு நிருட பந்தம், பௌண்டரீகம், அசுவமேதம், அஜமேதம் முதலிய பெயர்களை வைத்துக்கொண்டு, நம்மினத்தவராம் ஆடுமுதலியவற்றை வதைக்கின்றனர். இனி அவ்வதைகளுக்கு இருப்பிடமாகிய யாகங்களையே புரியாவண்ணம் இந்த குழுமியுள்ள யாவரையும் வேரோடழித்துப பழிக்குப்பழி வாங்குவேன்' என்று புறப்பட்டது போலிருந்தது.

ஆட்டுக்கடாவானது அண்ட கோளகையும் வெடித்துத் திகளாகவும்; அஷ்டகுலாசலங்கள அசைந்தாடவும ஆர்த்தது. தலையைச்சாய்த்து வயிரத்திற்கு நிகரான கொம்புகளை நிலத்திற் குத்தித் தூளி கிளப்பியது. யுகமுடிவில் தோன்றும் சண்டமாருதமும், வடவாமுகாக்கினியையுங் குளிரவைக்கும் ஊழித்தீயும், ஏழு மேகங்களும, ஏழு கடல்களும ஒன்றுகூடி முழங்கிவருதல்போலச் சீறிக் குதித்து வருவதைக்கண்ட நாரதர் முதலியோர் நடுநடுங்கி, யாகத்தைவிட்டு 'உயிர்பிழைத்தாற் போதும' என்று ஏங்கி, மனங்கலங்கி ஓடினர்; அங்ஙனம் ஓடுகின்றவர்களைக்கண்ட ஆட்டுக்கடா பின் தொடர்ந்து கொம்புகளால்குத்திச் சிலரைக் கொன்றது; சிலர் காலொடிந்தார்; சிலர் குடல் கிழியப்பெற்றார், சிலர் கரமிழந்தனர். இவ்வாறு ஆட்டுக்கடாவானது உயிர்களுக்குத் துன்புறுத்தி உலகமெங்கும் உலாவியது; உலகங்கள் நடுங்கின, அநேக வுயிர்கள் மாண்டன அத்தகர் ஆகாயத்திற் பாய்ந்து சூரிய சந்திரர்களது தேர்களையழித்து அவைகளிற் பூட்டிய குதிரைகளுடன் போர்புரிந்தது. தனக்கு எதிர்ப்பட்டவரையெல்லாம் கொம்பாற் குத்திக்கொன்று திசைகள் சுழலத் திரிந்தது.

இப்பெரும் விபத்தைக்கண்டஞ்சிய நாரதர் முதலியோர் விரைந்தோடி, சகலருக்கும புகலிடமாகிய கண்ணுதற்கடவுள் வீற்றிருக்கும் கயிலைமலையை யடைந்து, திருமலையின்மீது ஏறிவரும்போது, ஆங்கே எல்லா ஆற்றலும் எல்லா முதன்மையும் எல்லா அனுக்கிரகமுமுடைய எந்தை கந்தவேள் எழுந்தருளியிருக்கக்கண்டனர். சந்திரனைக்கண்ட சமுத்திரம்போல் உவகைபொங்க உளமகிழ்ந்து, "நாம் ஐம்முகச்சிவனிடஞ் செல்லவேண்டாம், அறுமுகச்சிவனே ஈண்டு இலக்கத்தொன்பான் வீரர்களுடன் திருவிளையாடல் செய்தருளுகின்

ளூர். சேய்களின் குறைகளை நீக்கத் தாய் வலிந்துவருதல்போல் நமது இன்னலை நீக்க எம்பெருமான் நம்மெதிரே எழுந்தருளிவந்தனர்; இவர் சிறுவரல்ல; இந்திரன் முதலிய நிலையுடையவர்களைக்கொன்று மீளவும் உயிர்ப்பித்த முழுமுதற்கடவுள்; நமது நிலைமையை இவர் எளிதில் நீக்குவர், இப்பெருமானது [illegible] போற்றி நிகழ்ந்ததனை விண்ணப்பம் புரிவோம்" என்று தங்களுள் உணர்ந்து, நம்பினார்க்கருளும் எம்பிரான் திருமுன்சென்று அப்பரமபதியின் பாதபங்கயங்களை அடியற்ற மரம்போல் வீழ்ந்து, வலமிட்டுத் துதிப்பாராயினர்.

மூவர்கள் முதல்வா போற்றி முக்கண்ணன் புதல்வா போற்றி
சேவலங் கொடியாய் போற்றி சிறந்த சிற்பரனே போற்றி
தேவர்கள் தேவே போற்றி தெய்வநாயகனே போற்றி
ஆவலும் அருள்வாய் போற்றி அமரா போற்றி போற்றி

என்று முறையிட்டு நின்றனர். கந்தப்பெருமான் அவர்களுடைய துன்பத்தைக்கண்டு, "அஞ்சாதொழிமின்கள்; அஞ்சாதொழிமின்கள்" என்று அபயமளித்தருளி, 'நீங்கள் மிகவும் வருந்தினீர்கள்; நுமக்குற்ற துன்பம் யாது? சொல்லுங்கள் என்று அறியார்போல் வினவியருளினார். தேவர்களும் முனிவர்களும் அது கேட்டு, "எந்தையே! தேவரீர் அறியாததொன்றுளதோ? அடியேங்கள் வேதவிதிப்படி ஒரு வேள்வி செய்தேம்; அந்த யாகாக்கினியினின்றும் ஓராட்டுக்கடா தோன்றி எம்மைக் கொல்ல யத்தனித்தது. அதனால் யாங்கள் பெருந்துன்பமுற்று இங்கு வந்தோம். அது கோபத்தோடு அநேகரைத் துடர்ந்துபோய்க் கொன்றும், அநேகரை வருத்தியும், உயிர்களுக்கு ஊறுவிளைத்துக்கொண்டு உலகமெங்கணுந் திரிகின்றது; விண்ணிலும் மண்ணிலும் பல வுயிர்கள் மாண்டன. இன்னும் ஒரு நாழிகைக்குள் எல்லா உயிர்களும் இறந்துவிடுமென்பது ஒருதலை. உய்வகையறியா அடியேங்கட்குத் தெய்வநாயகராம் தேவரீரே புகலிடமாம். எமது துன்பத்தை நீக்கிக்காத்தருள்வீர்" என்று விண்ணப்பஞ்செய்தார்கள்.

அறுமுக வள்ளல் அவர்கள்மீது திருவருள்நோக்கஞ்செய்து திருக்கரமமைத்துத் தேற்றி, தமது ஆக்ஞையை எதிர்பார்த்துக் கொண்டு பக்கலில் நிற்கும் வீரவாகுதேவரைத் திருநோக்கஞ் செய்தருளி, யாகாக்கினியினின்றுந்தோன்றி இவர்கள்யாகத்தை அழித்து உயிர்களைக்கொன்று எங்குந்திரியாநின்ற அவ்வாட்டுக்கடாவை நீ

விரைந்து சென்று இப்பொழுதே பிடித்துக்கொண்டுவா" என்று பணித்தருளினார். வீரவாகுதேவர் எம்பெருமானுடைய ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு, அறுமுகனாரது அருண சாரொவிந்தங்களை வணங்கித் துதித்து விடைபெற்று ஆட்டுக்கடாவைத் தேடிச் செல்வாராயினார்.

அதுகாலை ஆட்டுக்கடாவானது, தேவர் முனிவர் முதலியோர் அஞ்சியோடுதலையால் பூமியிலுள்ளாரைச் சிதைத்து, கீழ் ஏழுலகினுஞ்சென்று அங்குள்ளாரையும் வதைத்து, சுவர்க்கலோகம் முதலிய மேல் உலகங்களையுந் தன் கொம்பால் தகர்த்து நாசஞ்செய்து, பிரமனுலகமான சத்திய உலகத்தையடைந்து, இறுமாந்து ஆரவாரித்து நின்றது. வீரவாகுதேவர் பூமியினும், கீழ் ஏழுலகங்களினும் தேடிக்காணாமையால் மேலுலகங்களினுந்தேடிக் காணாது பிரமலோகஞ்சென்று தேடுங்கால், ஆங்கோரிடத்தில் வடவாமுகாக்கினி அநேக ஆயிரம்யோசனை உயர்ந்து பரந்து வளர்ந்தாற்போன்ற உடலையும், அதன்கொழுந்து நீண்டாற்போன்ற நாக்கையும், ஆலகாலவிடம் போன்ற கொம்புகளையும், இடியைப்போலொலிக்கும் குளம்புகளையும் வைரவூசிபோன்ற வான்மயிரையும், பல மேருமலைகளைப் பருக்கைக் கற்களாக்கி தன் காற்சிலம்புகளில் சேர்த்தாற்போன்ற அத்துணைப் பெரிய தோற்றத்தையுமுடைய ஆட்டுக்கடாவைக் கண்டார். இவரைக் கண்டவுடனே கடா குமுறிக்கிளம்பி எதிர்த்துவந்தது வீரவாகுதேவர் சிறிதும் அஞ்சாது அவ்வாட்டுக்கடா அஞ்சும்வண்ணம் உரப்பி, விரைந்துபோய் அதன் கொம்பைப்பற்றி காகாவென்று சத்தமுண்டாகுமாறு இழுத்துக்கொண்டுபோய் திருக்கைலாச மலையை யடைந்து, அறுமுகத்தண்ணல்முன் அத்தகரை விடுத்துப் பணிந்துநின்றார்.

குமாரக்கடவுள் அதுகண்டு முறுவல்பூத்து, தேவர் முனிவர் திசைமுகன் திருமால் முதலியோரை நோக்கித் திருவாய்மலர்ந்தருளுவர். "அன்புடையீர்! ஆட்டுக்கடா நம்மிடத்து வந்துவிட்டது; இனி நீவிர் ஒரு சிறிதும் அஞ்சாது பூமியிற்சென்று நீங்கள் தொடங்கிய யாகத்தை இனிது முடியுங்கள்" என்று அருளிச்செய்தனர். அன்னவரெல்லாம் அதுகேட்டு துன்பவேலையினின்று மெழுந்து இன்பவேலையில் மூழ்கிக் கூத்தாடிப் பரவசமுற்று, வந்த வினையகற்றும் கந்தநாயக! மாய இருட்படலத்தை மாற்றும் தூய அருட்கதிரே! தேவரீர் திருவருட்கோர் எல்லையுளதோ? அடியேங்கட்கு

இன்னும் ஓர் வரந்தரல்வேண்டும்; இவ்வாட்டுக்கடாவை வேறெங்கும் விடவொல்லாது; தேவரீர் வாகனமாகக்கொண்டருளல்வேண்டும். அடியேங்களும் மறையோரும் அஜாரூடராகிய தேவரீரைக் கண்டகாலத்தே, எங்கட்குண்டாகிய இடர்களை நீக்கியாண்ட பரம்பொருளிவரென்று நல்லறிவுற்று உய்தற்கேதுவாகும். வேண்டுவார் வேண்டியவண்ணம் வழங்கு வேதவித்தகரே! இவ்வரத்தை நல்கியருள்வீர் என்று குறையிரந்தார்கள்.

ஏர்தரு குமரப்புத்தே ளிவ்வகை யிசைப்ப வன்றோர்
கார்தரு கண்டத் தேந்தை காதல வேள்வித் தீயிற்
சேர்தரு தகரி னேற்றைச் சிறியரே நுய்யு மாற்றல்
ஊர்திய தாகக் கோடியே யூர்ந்திடல் வேண்டு மென்றார்.

பக்தாபீஷ்டவரதராகிய பார்வதி புதல்வர் அதுகேட்டுப் புன்னகைசெய்து "நாம் இதனை வாகனமாகக்கொள்வோம் நீங்கள்போய் யாகத்தைமுடியுங்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். நாரதர் முதலியோர் யாவரும் முருகக்கடவுளை வணங்கிக்கொண்டு, பூதலத்தில் வந்து சிவாகமமுறைப்படி மந்திரமுறை வழாது யாகத்தை முடித்தார்கள். அவ்வளவிலே முன்னருளுற்றிய தவங்காரணமாக அத்தகரை வாகனமாகக்கொண்டருளினார். அதன்மேலேறி உலகமெல்லாம் பவனிவந்தனர். அக்காட்சியைக்கண்டார் அனைவர்களும் கண்ணுங் கருத்துங்களித்து கரமலரைச் சிரமீது குவித்தும் போற்றிப்புகழ்ந்தார்கள். நாரதர் முதலியோர் யாகாதிபதியும், யாகபரிபாலனரும், யாகபலப்பிரதானரும் கந்தக்கடவுளே என்று தெளிவுற்றனர். "அக்னிபூ" என்று வேதங்களாற் பிரதிபாதிக்கப்படுகின்ற குமாரக்கடவுள் அதற்கியையவும், அவ்வுண்மையை எம்போன்றார் எளிதிலுணர்ந்துய்யவும், "சோதியே சுடரே சூழொளிவிளக்கே" என்ற தமிழ்மறைக்கிணங்கவும் அக்கினிதேவனுக்குள்ளேயிருந்து வசிக்கின்ற மூலாக்கினிதேவன் தானே என்பதைக் காட்டுதற்பொருட்டு, அக்கினிதேவனைப்போல் தாமும் ஆட்டுக்கடாவாகனமுடையராயினர். அதனால் அறுமுகச்சிவனாரை வேதங்கள் "அஜன்" என்று அழைக்கின்றன அருண (ஆடு) மூர்ந்த கருணை நாயகன் உலகெலாம் பவனிவந்தபின் அதினின்றுமிறங்கி திருக்கைலாசமலையில் பண்டுபோல் வீற்றிருந்தருளினார்.

அஜா மேகாம் லோகித சுக்ல க்ருஷ்ணும்
பஹ்வீம் ப்ரஜாம் ஜநயந்தீம் ஸ ரூபாம்!
அஜோஹ் யே கோஜுஷ மாணோநு சேதே
ஜஹாத் யேநாம் புக்த போகா மஜோந்ய: !!

(தொடரும்).

---

ஓம் குருப்யோ நம.

# கற்பு

(339-ஆது பக்கத் தொடர்ச்சி)

நாயகனும் நாயகியும் எக்காலத்தும் கருத்துவேறுபாடின்றி ஒற்றுமையாக இருக்கவேண்டும். அங்ஙனம் வாழும் வாழ்க்கையில் தான் நித்தியானந்தம் ஊற்றெடுத்து இல்வாழ்வு நல்வாழ்வாக விளங்கும். பெண்மணிகள் உளன்புடன் தன் கணவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொண்டு வருவார்களாயின் ஒருவர்க்கொருவர் ஒற்றுமையுடன் வாழ்வதற்கு யாதொரு தடையுமிராது. நாயகன் ஒருசமயத்தில் தன் கருத்துக்கு மாறுபட்டால் அதனை மெல்லமெல்ல இதவசனங்களைக் கூறி பணிவாலும் நயத்தாலும் மாற்றவேண்டும். நாயகன் ஒன்றுசொன்னால் நாயகி ஒன்று சொல்வதும், அவன் ஒன்றைச் செய்யச்சொன்னால் இவள் ஒன்றைச்செய்வதும், அவன் வேண்டுமென்பதை இவள் வேண்டாமென்பதுமாக இருந்தால் அந்தக்குடும்பத்தில் எப்போதும் தீராத மனோவேதனையே வளரும். சாந்தியும் சந்தோஷமும் ஒருபோதுமிரா. நாயகியின் மாறுபட்ட செய்கைகளைக்கண்டு நாயகனுக்கும் அவளிடத்தில் அன்பு நாளுக்குநாள் தேய்பிறைச் சந்திரனைப்போலத் தேய்ந்து முடிவில் விரோதியாகவே பாவிக்கிறான். அந்தத் தம்பதிகளுக்குள் எந்நேரமும் கலகந்தான் கண்டபடி செய்யும். இதனால் கணவனுக்கும் துன்பம்; மனைவிக்கும் துன்பம். குடும்பத்திலும் சாந்தியற்று துடித்துக் கொண்டிருக்கும். மனைவியைக் கண்டால் கண்ணுக்கு வெறுப்பு; அவன் நின்ற இடத்தில் இவள் நிற்பதில்லை; இப்படி நெடுநாள் இருந்து அவர்கள் இல்வாழ்க்கை துன்பவாழ்க்கையாக மாறி, அவன் இல்லறத்தைவெறுத்துத் துறவறத்தை மேற்கொள்ளுகிறான். உள்ளபடி மனத்துறவுடன் துறந்தால் அவன் பரகதிக்கு வழிதேடுவான். தாம்பத்தியத்தில் மனைவியின் வேதனையைப் பொறுக்கமுடியாமல் "இவளுடனிருந்து படுவதைக்காட்டிலும் நாலு வீடுண்டு, ஒரு வோடுண்டு" என்று துறந்தவனாதலால், துறவு மார்க்கத்தின் தூய்மையையும் உணராது கெட்டு இரண்டு தன்மையையுமிழந்து பிறர் பழித்து நகையாடநிற்கிறான். கணவன் கதி இப்படியாக மனைவி

சிறிது துன்பமுண்டானவுடனே, "இந்த வாழ்விலிருந்து துன்புறுவதைக்காட்டிலும் இறந்து படுவதே மேல்" என்று துணிந்து கிணறு குளங்களில் வீழ்ந்து அவமே மடிகின்றனள். காமதேனுவின் பாலைக் கடலிற்கொட்டியதுபோல, கிடைத்தற்கரிய இவ்வரிய மனிதப்பிறவியை முத்திவீட்டிற்கு வழிதேடாது வீணாக்கி விளிக்கின்றனர். அந்தோ! பரிதாபம். தற்கொலை செய்துகொண்டவர்கள் பல ஆயிரமாண்டுகள் இருள் உலகில் அலைந்து பைசாசமாகித் திரிந்துழன்று மீளா நரகுக்கு ஆளாகின்றார்கள். இதனை யறியாத பேதைப்பெண்கள் சகிக்குந்தன்மையின்றித் தானுமாண்டு, பிறமாதருக்கும் தன்னைப்போல் மடியுமாறு வழிகாட்டியாகின்றனர். "மெலியவானொழுக்குத் தானின்ற காய கூற்றங்கூற்றமே இல்லிற நிசைநெடுங்காப்பெண்" என்ற முதுரைக்கு நாயகன் மடியுமாறு நடந்து இலக்கியமாகின்றனர். இவைகளுக்குக் காரணம் நல்லுணர்ச்சியில்லாமையே. அந்நல்லுணர்ச்சி பெற்றோராலும் பெரியோராலும் உயர்ந்த நீதிகளைப் போதிக்கும் அறிவு நூல்களாலுமே உண்டாகும்.

பெண்கள் தமது கணவரோடுகூடி வாழுங்காலத்தில் எல்லா சுக துக்கங்களுக்குங் காரணம் தமது ஒற்றுமையே. ஆதலால் சகோதரிகள் தமது இல்வாழ்க்கையில் அதுவிஷயத்தில் மிகுந்த ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். எந்தக் காரியத்தில் ஒற்றுமை குறைகிறதோ அந்தக்காரியத்தைச் செவ்வைப்படுத்தி ஒழுகவேண்டும். நாளுக்கு நாள் தமது ஒற்றுமை வளர்ந்து வருவதற்குண்டான முறையை அனுசரிக்கவேண்டும். அதனால் இன்பமாகிய தரு வளர்ந்து செழித்துத் தழைத்தோங்கும். அதன் நிழலில் நாயகனும் நாயகியும் பகையென்னும் வெய்யிலின் துன்பமின்றிக்கூடி மகிழ்ந்திருக்கலாம். அத்தருவில் அன்பென்னும் பூங்காற்று மெல்ல வீசும்; சாந்தியென்கின்ற மலர்கள் மலரும்; சற்புத்திரபாக்கியம் என்கின்ற பழங்கள் பழுக்கும்; சகோதரிகளே! உற்று நோக்குங்கள். இந்த இன்பமாகிய மரத்திற்கு தண்ணீர் எது? ஒற்றுமைதான். ஒற்றுமை என்னும் தண்ணீரைவிட்டு அந்த இன்பமாகிய மரத்தை வாடவிடாமல் பாதுகாப்பது உங்கள் பொறுப்பாக இருக்கிறது. மரம் வாடி உலர்ந்துவிட்டால் காற்று, பூ, கனி நிழல்முதலிய எந்த நற்பயன்களையும் பெற முடியாதல்லவா? கணவன் செல்வவந்தனாக வாழ்ந்தாலும் மகிழ்ந்து அவனுடைய சந்தோஷத்தில் பங்கெடுத்துக்கொள்ளவேண்டும்; நித்திய தரித்திரனாகத் தாழ்ந்தாலும் அவனுடைய துக்கத்தில் பங்கெடுத்

ருக்கொள்ளவேண்டும். நளன், சக்கிரவர்த்தியாக அரியணைமேல் வீற்றிருந்து அரசாண்டபோதும், ஒற்றுடையுடன் தனிவனம்போந்து மூர்க்கல மிருகாதிகளின் துன்பத்தால் வாடியபோதும் கற்பரசியாகிய தமயந்தி நிகரற்ற நிழல்போல் தொடர்ந்திருந்து சுகதுக்கங்களையனுபவித்தாளன்றோ? அந்நல்லவரின் ஒழுக்கமே இன்னும் புகழுடம்புடன் எங்கும் நின்று நிலவுகின்றன.

நாயகன் ஒரு சமயத்தில் கோபியாகவும், நியாயத்திற்கு மாறாகவும் நடப்பானேயானால் அப்போதுதான் பெண்கள் தமது முழு சகிப்புத்தன்மையும் உபயோகப்படுத்தி, மிகத் தாழ்மையாகவும் இதமாகவும் நடந்துகொண்டிருந்தால் அவனே தன் குற்றத்தையும் பத்தினியின் குணத்தையும் உணர்ந்து, தன் குற்றத்தினின்றும் விடுபட்டு மீளவும் எக்காலத்தும் குணசீலனாகவே நின்று மாறாத அன்புடன் இருக்கத் தலைப்படுவன். நான் கோபமாக நடந்ததை எண்ணி நெஞ்சம் நெகிழ்வன். சகிப்புத்தன்மையும் ஒற்றுமையும் நன்கு புலனாக்கும்; இவ்வெடுத்துக்காட்டை உற்றுநோக்குக.

நடுநாட்டிலே பெண்ணையாற்றின்கரையிலே திருக்கோவலூர் என்னும் நகரம் சகல வளப்பெற்று விளங்கும் அந்நகரத்தை அறநெறிவழுவாது பிரதாபசீலன் என்னும் குறுநில மன்னனொருவன் அரசுசெலுத்திவந்தான். அவன் இன்சொல் வழங்கி குடிகளைத் தாய்போல் புரந்துவந்தான். காண்டற்கினியனும் காட்சிக்கெளியனும் பொறுமைக்கு உறைவிடமாய் விளங்கினான். செவியாறப் பார்த்தும் கண்ணுறப் பேசியும் நீதிக்கு மாறுபாடின்றி நடுநிலையாகத் தீர்ப்பு செய்வான். தன்னாலும், தன் பரிசனத்தாலும், பகைவராலும், கள்ளராலும், மிருகங்களாலும் துன்பம் நேராவண்ணம் பாதுகாத்துவந்தான். ஆறிலொரு கடமைவாங்கி எல்லா மக்களுக்கும் உயிர்போலும், தனத்தின் பொக்கிஷம்போலும் இருந்தான். அவனைப்புகழாதார் ஒருவருமில்லை. எவர்களிடத்தில் நல்லொழுக்கமுள்ளதோ அவர்களை உயிரினுஞ் சிறந்தவர்களாக எண்ணுவான். அவர்களோடு கலந்து உறவாடுவான். இத்தகைய மன்னர்பெருமான் நெடுநாள் மனையில்லாமல் தனித்திருப்பது குறித்து குடிகள் வருந்தினர். அறிவுடைப் பெருமக்கள் சிலர் அரசனிடம்போந்து வணங்கி, "கொடை அளி செங்கோல் குடிவோம்பலென்னும் நான்கையுமுடைய குரிசிலே! தண்ணருள்மிக்க தயாநிதியே! நீர் தனித்திருந்து அரசாள்வது நன்றன்று; இல்லறமே நல்லறமென்பது ஆன்றோர் துணிபு; ஆதலால்

தாங்கள் கற்பிற் சிறந்த காரிகையை மணந்து அரசனாதலே சாலவும் சிறப்புடைத்தாம்'' என்றனர். அதுகேட்ட மன்னன் நகைத்து, ''நன்று நன்று கல்யாணம் புரிந்துகொண்டு கண்கலங்கி கருத்தழிந்து கவலையுற்றோர் கவலையுறுகின்றோர் எண்ணிலர், நான் அதனை விரும்பவில்லை. மனைவி கற்புடையவளாயமைந்தாலதான் இன்பம்; அமையவில்லையேல் அதைவிட நரகம் வேறொன்றுமில்லை; ஆதலால் இதுவிஷயத்தில் என்னை வற்புறுத்தாதீர்கள்'' என்று கூறிவிட்டான். அதுகேட்ட அவர்கள் மீளவும் மறுத்துச்சொல்ல அஞ்சி வாளா இருந்துவிட்டனர். பின்னும் ஒரு காலத்தில் தமது எண்ணத்தை முற்றுவிக்க எண்ணிய அறிவுடையோர்கள் மன்னனிடமடைந்து வணங்கி, ''வரையாது வழங்கும் வள்ளலே! தாங்கள் யார் எது கேட்டாலும் மறுக்காது நல்கும் பெருங்கொடையாளி, குடிகளின் குறைகளைநீக்கும் குணபூஷணர், எமக்கு நேர்ந்துள்ள குறையைநீக்கி ஒரு பெரும் பாக்கியத்தைத் தரவேண்டும்'' மென்று குறையிரந்தனர். அதுகேட்ட மன்னன் ''குடிகளுக்கு யாதொருகுறையும் உண்டாகா வண்ணம் கண்ணுங்கருத்துமாகக் காத்துவந்தோமே? அங்ஙனமிருக்க இப்போது என்னகுறை நேர்ந்திருக்கும்? அதனைக்கேட்டு உடனே அதை நீக்கவேண்டும்; குறைநேராவண்ணம் அரசாள்பவனன்றோ கொற்றவன்?'' என்று பற்பல எண்ணி, ''அறிஞர்களே! நுமக்கு யாது குறை? உமக்கு என்னவேண்டும்? கூறுங்கள்; உடனே அக்குறையை நீக்கி வேண்டியவற்றை வழங்குவன்'' என்றான். குடிகள், ''நற்றவத்தாற் கிடைத்த கொற்றவர்பெரும! தங்களுக்குப்பின்னால் தம்மைப்போல் நீதிதவறாது அரசாள்வதற்கு ஓர் இளவரசர் இல்லையென்பதுதான் எமது பெருங்குறை; ஆதலால் தாங்கள் கருணைகூர்ந்து எமக்கோர் மகாராணியாரையும் அவர்கள் வயிற்றில் உம்மைப்போல் எம்மைக்காத்தருள ஓர் இளவரசனையுந் தந்தருள வேண்டும்'' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். மன்னன் அது கேட்டு மறுக்கமுடியாதவனாகி ஒருவாறு இணங்கினான். கற்பின் மிக்க கன்னிகையை மணப்பதாக உறுதிகூறினான். குடிகள் தமது எண்ணம் நிறைவேறியதாக எண்ணி உவகைபூத்தனர்.

மன்னன், செல்வத்தையும் குலத்தையும் பெரிதாக மதியாமல் குணத்தையே பெரிதாக மதித்தவனாதலால் எக்குலத்திற்பிறந்தாளாயினும் நல்லொழுக்கமும் நற்குணமும் பொருந்திய நங்கையை மணப்பேனென எண்ணி யாராய்ந்தான். திருக்கோவலூருக்கடுத்த ஆயர்

பாடியில் இடைக்கோன் என்கின்ற ஓர் இடையன் இருந்தான். அவனுக்கு ஒரு செல்வப்புதல்வியுண்டு. அவள் இயற்கையழகில் இலக்குமிக்கு நிகரானவள்; கோலஞ் சிறந்ததுபோல் குணமுஞ் சிறந்திருந்தது; பொறுமையில் பூதேவி நாணத்தக்கவள்; அவள் திருமேனியின் இயற்கைவனப்பைக்கண்டு தேவமாதர்களும் தலைகுனிவார்கள்; அவளது நற்குணத்தைக்கண்டு புத்தேளிரும் புகழுவார்கள்; பிரதாபசீலன் அவளைத் தேர்ந்தெடுத்தான் தனக்கு வாழ்க்கைத் துணைவியவளேயென்று தீர்மானித்தான். அமைச்சர்களைவிட்டு இடைக்கோனை வரவழைத்தான்; தன் கருத்தை அமைச்சர்கள்மூலம் இடைக்கோனிடங்கூறி அவனது மகளைக்கேட்டான். அச்சமும் அதிசயமுங்கொண்டு இடைக்கோன் இறைவனை அஞ்சி

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப்படும்" என்ற

பொய்யாமொழிக்குப் புகழ்ந்த புண்ணிய புருஷரே! சாந்தமிக்க வேந்தர் பெரும! "யார்க்கும் இலைமுகப் பைம்பூணிறை" என்றபடி குடிகளுக்குத் தெய்வம் மன்னவனேயல்லவா? உயர்குடியிற்றோன்றிய தாங்கள் என்னைப் பொருள்படுத்திப் பெண்கேட்பது வியப்பினும் வியப்பே! தங்கட்கு சம்பந்தியாவதற்குக் குலத்தாலும் தனத்தாலும் கீர்த்தியாலும் பிறவாற்றாலும் தகுதியற்றிருக்கின்றேன்; அடியேனுடைய உடல் உயிர் பொருள் யாவும் தமது உடைமைகளே. ஆதலால் தங்கள் உடைமைகளில் ஒன்றாகிய என் பெண்ணை யான் எவ்வாறு தருவது? சுதந்தரமற்ற என்னைக்கேட்பது தங்கள் பெருந்தகைமையின் பெருமிதமே! ஆதலால் என் மகளைமட்டுமல்ல எனது ஆவியை வேண்டுமென்றாலுந் தருவதற்கு கடமைப்பட்டிருக்கிறேன்" என்று பணிவாகவும் அழகாகவுங்கூறினன். அவனுடைய பொருளடங்கிய உரைகளைக்கேட்ட மன்னன் மகிழ்ந்து மணத்திற்கு நாள் முதலியவற்றை நிச்சயித்து, குறித்த நாளில் திருமணம் நடைபெறுவதற்கான ஏற்பாடுகளைச் சிறப்பாகச்செய்தான். அரசர்கள் கூட்டங்கூட்டமாகவந்து குழுமினர்; எல்லாவகையாலும் அந்நகரத்தை அளகாபுரிபோல் அலங்கரித்தார்கள், ஆனால் குடிகளுக்குமட்டும் சிறிது அதிருப்தி, அரசகுலத்திற் பிறந்தவளை மன்னன் மணங்கொள்ளாது இடைச்சியை மணக்கப்போவதைக்குறித்து வருந்தினார்கள்; தடுப்பதற்கு ஆற்றலற்றுப் புழுங்கினர். குறித்த காலத்தில் பிரதாபசீல மன்னருக்கும் இடைக்கோனுடைய மகள் மங்கலவதிக்கும் திரு

மணம் சிறப்பாக நடைபெற்றது. தன் எண்ணம்போல் மனைவி வாய்த்ததற்கு மன்னன் மகிழ்ந்தார். அரண்மனையைச் சேர்ந்த பிரபுக்கள், அரசனது சுற்றத்தார்கள் முதலாயினோர் இறைவன் இழிந்த இடைச்சியை மணந்துகொண்டதைக்குறித்து வெறுத்தார்கள்; மறைவில் இழிவாகப் பேசினார்கள் குறிப்புணர்வதில் சமர்த்தனாகிய கொற்றவர் பெருமான இதனையுணர்ந்தான். இவர்களுக்கு நல்லறிவுபுகட்ட எண்ணினான். குலம்பெரிதல்ல குணமே பெரிது என்பதை உலகிற்கு வெளிப்படுத்தவும் எண்ணினான்.

பிரதாபசீலன் தன் காதலிபால் அன்புபூண்டு வாழ்ந்திருந்தான், மங்கலவதி தன் கணவனையே கடவுளாகக்கருதி உபசரித்துவந்தாள்; பதியின் சொல்லே வேதவாக்காகவும் பதியின் பாதசேவையே தெய்வசேவையாகவும் பதியின் திருவடியே சுவர்க்கலோகமாகவும் எண்ணி, அருந்ததிக்கு நிகரென்று அனைவரும் புகழ இனிது வாழ்ந்தாள். அரசன அரசகுடும்பத்தார்க்கு இவளது கற்பின் பொற்பையுணர்த்த எண்ணி சின்னாள் கழித்து தன் உத்தம நாயகியாகிய மங்கலவதியை துன்பத்திற்காளாக்கினான். மங்கலவதி கருவுற்று ஓர் பெண்மகவை யீன்றாள்' செல்வபுத்திரி பிறந்ததைக் கேட்ட மன்னன் மனைவியின்பால்வந்து, 'மடமயிலே! உன்னை நான்மணந்துகொண்டதற்காக அரசகுடும்பத்தாரும் குடிகளும் என்னைப் பரிகசிக்கின்றார்கள்; நமமிருவரையும் வேம்பைப்போல கருதுகிறார்கள்' நம சீமந்தபுத்திரியைப்பார்த்து "இடைக்கோனுடைய பௌத்திரி திருக்கோவிலூரையாள்வாள்" என்று ஏளனம் செய்கிறார்கள்; நான் பழி சுமந்ததோடு என் மகளையும பழிக்காளாக்க என மனம் இசையவில்லை, குடிகள மனமறிந்தாசுசெய்வதே மன்னர்கடமை; மகள் பழி சுமந்து உயிர்வாழ்வதை நான் விரும்பவில்லை; ஆதலால் குழந்தையைக் கொன்றுவிடக் கருதியுளேன், நின் கருத்து யாது?" என்றான்.

மங்கலவதி! "அன்பின்வடிவாயமைந்த ஆருயிர்காதல! பதியின் வாக்கியமே வேதவாக்கியம்; தங்களுக்கு எது சரி என்று தோன்றுகிறதோ அதுவே எனக்கும் சரி; தங்களுக்கு வந்த இன்ப துன்பத்தில் எனக்கும் பங்குண்டு; உமக்குச் சந்தோஷத்தை யுண்டு பண்ணுவதே எனகடமை; இந்தப் புத்திரியல்ல வேறே எதுவானாலும் —உயிரையேனுந்தருகிறேன்; தங்கள் திருவுளமெப்படியோ அப்படியே செய்யலாம்" என்று கல்லுங்கரையுமாறு கனிவுடன் கூறினாள். இவ்வார்த்தைகள் பிரதாபசீலனுடைய மனதைப் பிளந்தது. கண்ணில் நீருருவி பெருகிற்று; அவைகளை அவன் சிரமப்பட்டுமறைத்துக்கொண்டு மனைவியிடம் விடைபெற்று நீங்கினான்.

(தொடரும்).

சாத்திரியே ஏ ஐயா

# மகன் தாய் தந்தைக்காற்று முதவி

## சச்சிதானந்தம்

[மாத்ரு தேவோபவ பித்ரு தேவோபவ]

கை. சிரீபம -- சிகாமணி 11 அனுபாகம்

சாந்தமிகும் சத்திய சீலர்களே!

என்றும் இல்லாத நெடுங்காலமாக எண்ணில்லாத பல பிறவிகளை எடுத்தெடுத்திளைத்தோம்; இப்பொழுது பெறுதற்கரிய பிறவியாகிய மனிதப் பிறவியைப் பெற்றுள்ளோம். இம்மனித யாக்கையால்தான் நாம் பெறுதற்கரிய பேற்றை யடையமுடியும். அயனொடு மாலும் தேடித் தேடிக் காணுறாத தேவதேவனுடைய திருச்சீரடியில் இருமாந்தமர்ந்திருக்க இவ்வாக்கை ஒரு வழிகாட்டியேயாகும். இவ்வரும் பிறவியை நாமடைவதற்கு அநுகாரணமாக இருந்தவர் மாதாபிதாக்கள். ஆகவே தாய்தந்தையரிடத்தில் மக்கள் ஒழுகவேண்டிய ஒழுககத்தைப்பற்றிச் சிறிது வரைகுவோம் என்ற பேராவலுடையவனாயினேன். இம்பெரியதோர் விஷயத்தை மாதரு பித்ரு பக்தியில்லாத அடியேன் எழுதுவது இழுக்காமெனினும், சேற்றினுட் பிறந்த தாமரையும் இப்பியிற் பிறந்த முத்தையும் எவ்விதம் பெரியோர்கள் ஏற்றுக்கொள்கிறார்களோ அவ்விதம் இதனையும் ஏற்றுக்கொள்வீர்களாக.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"

(தாய்தந்தை செய்யும் நன்றி)

நமது வேதங்களும் பெரியோர்களும் மக்கட்கு தாய்தந்தை தெய்வம் என்று கூறுகின்றனர். மாதாபிதாக்களைக்காட்டிலும் அன்னியமாக மற்றொரு தெய்வம் மக்களுக்கு இல்லையென்பதற்குக் குணம் நிறைந்த முனிவர்களும் சாக்ஷி கூறுவார்கள். அவர்களைக்காட்டிலும் சிறந்த வஸ்து ஒன்று உண்டானதும் இல்லை; உண்டாகப்போகிறதுமில்லை. ஆகவே மனிதனுக்கு தாய்தந்தையரைவிடச் சிறந்த வஸ்து மூன்றுலகங்களிலும் இல்லை. நம்மைப் பெறுவதற்காக அநேக தானதருமங்கள் புரிகின்றனர்; சரீரம் இளைத்துப்போகும்படி விரதமிருக்கின்றனர்; குழந்தையைவேண்டி தமது மெல்லிய பாதங்கள் கல்லிலும் முள்ளி

லும் அடிபட்டு யாத்திரைபுரிகின்றனர்; இவ்விதம் தவமாதவமிருந்து கர்ப்பம் உண்டானபிறகு தாயானவள் மாம்பழமுதலிய கனிவர்க்கங்களை சாப்பிடுவது கிடையாது உண்டியைச் சுருக்குகிறாள்; கர்ப்பம் நாசமடையாமலிருக்கவேண்டுமேயென்று விசாரப்படுகிறாள், மூன்றுவது மாதத்தில் மசக்கை என்னும் நோயால் மிகுந்த துன்பத்தையடைகிறாள்; மாதங்கள் ஏற ஏற அநேகவிதமான துன்பங்களை அநுபவிக்கிறாள்; 9-வது மாதத்தில் திருப்பிப் படுப்பதாயிருந்தால் மெள்ள அசர்ந்து பிறகு படுக்கிறாள்; நடக்கமுடியாமல் தவிக்கிறாள்; கர்ப்பத்தினால் தாய்படும்பாடுகளை எண்ணிலடங்காவென்பது மிகையாகாதன்றோ? குழந்தை வெளிப்படுங்காலத்தில் அளவில்லாத வருத்தத்தையடைகிறாள்.

"வந்திப்பரிவாய் மகனைப் பெருந்துயரம்
நொந்தறிவாளோ நுவல்" நீதிவெண்பா.

தாயுமானபெருந்தகையார்

'பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளைப்
பெறாப் பேதை யறிவாளோ"

என்றனர். குழந்தை மலஜல விசர்ஜனம்செய்தால் கொஞ்சங்கூட அசங்கதமில்லாமல் எடுத்தெறிகிறாள், குழந்தைக்கு ஏதேனும் வியாதி வந்தால் தான் மருந்து சாப்பிட்டு பத்தியமிருக்கிறாள், தூக்கத்தை வெறுத்துவிடுகிறாள், குழந்தை இளைத்துப்போனால் சந்திகளில்கழிப்பு கழித்துப்போடுகிறாள்; குழந்தையை முன்னிட்டு சிறுதெய்வங்களையும் வந்திக்கிறாள்; குழந்தை பாலருந்தாவிட்டால் கண்ணீர்விட்டழுகிறாள், குழந்தையின் சௌக்கியத்திற்காக தாழ்ந்தவர்களைக்கொண்டு மந்திரித்து கயிறுகட்டிக்கொள்ளுகிறாள்; குழந்தை சாப்பிடாமுன் தான் சாப்பிடமாட்டாள், மகன் பள்ளிக்குச்சென்று வீட்டுக்குத் திரும்பிவர சிறிது காலதாமதமானால் இன்னும் என் அருமைக் கண்மணி வரக்காணோமே? பசியினால் வாடுவானே! என்று பரிதபித்து அடிக்கடி வாசலில் வந்து பார்க்கிறாள். குழந்தை சாப்பிடாவிட்டால் "அப்பா வருவார் பழம் வாங்கிவருவார்" என்று இனிய வார்த்தைகளைக்கூறி அன்னம் அருந்தச்செய்கிறாள்; சில தாய்கள் குழந்தைக்கு சலதோஷம் உண்டானால் அடிக்கடி மூக்குச்சிந்தினால் நாசி வலிக்குமேயென்றெண்ணி வாயினாலும் உறிஞ்சுகின்றனர்; ஆ! என்னே! மாதாவின் கருணை, அவர்கள் பரிவுதான் என்னே! குழந்தையினால் தன்னுயிரையும் திரணமாக மதிக்கின்றனர்; கவிசாதுரியத்திலுள்ள

பலவகைகளையும் நைஷதகாவியத்தில் காணலாம். நைஷதம் இயற்றியவர் ஸ்ரீஹர்ஷகவி; இவருடைய தகப்பனாராகிய ஸ்ரீஹீரன் ஒரு ராஜ சபையில் வித்வானாக இருந்தார். ஒருநாள் வேறு தேசத்திலிருந்து ஒரு வித்வான் அரச சபைக்கு வந்தனர். அவர் தம்முடைய திறமையினால் ஸ்ரீஹீரனை ஜயித்தார். தோல்வியுற்ற ஏக்கத்தினால் ஸ்ரீஹீரன் காலமானார். அந்நாளன்று ஸ்ரீஹர்ஷர் சிறுகுழந்தையாக இருந்தார். இவர் தாயாராகிய மாமல்லாதேவிக்கு ஸ்ரீஹீரன் சிந்தாமணி மந்திரத்தை உபதேசித்திருந்தார். அம்மந்திரத்தை ஜபித்தவர்கட்கு ஸரஸ்வதி கடாக்ஷமுண்டாகும். மாமல்லா தேவியானவள் தன் குழந்தைக்கு அச் சிந்தாமணி மந்திரத்தை சொல்லி வைத்தாள். அக் குழந்தையானது எப்பொழுதும் அம்மந்திரத்தை கூறிக்கொண்டே இருக்கும். வாமாசாரப் பிரயோகங்களில் சவத்தின்மேலிருந்துகொண்டு ஒரு மந்திரத்தை ஜபித்தால் அதிகபலன் உண்டாகுமென்று மாமல்லாதேவிக்குத் தெரியும். ஒருநாள் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது தன் மார்பின்கண் குழந்தையை வைத்துக்கொண்டாள். குழந்தையானது மந்திரத்தைக் கூறிக்கொண்டிருந்தது. எப்படியாவது நம் குழந்தை அபிவிருத்தி யடைந்து சமானமில்லாத வித்தையடைந்தால் போதும்; நம்முடைய உயிர் போனாலும் போகட்டும் என்று நினைத்து மாமல்லாதேவியானவள் தன் கழுத்தை வெட்டிக்கொண்டாள். தாயின் சவத்தின்மேலிருந்து குழந்தை மந்திரத்தைக்கூறவே உடனே ஸரஸ்வதிகடாக்ஷமுண்டாகி யாவராலும் புகழப்பெற்ற பெரும்புலமைவாய்ந்தது. அவர்தான் பிறகு நைஷதகாவியத்தை இயற்றினார். குழந்தைக்கு ஏதேனும் சில ஆபத்துக்கள் உண்டானால் மாதாக்கள் தன்னுயிரையும் மாய்த்துக்கொள்ளுகின்றார்கள். விபவவருஷம் ஐப்பசிமாதம் ஆறாம் நாள் காங்கேயநல்லூரில் எமது தகப்பனாரால் முருகப்பெருமானுடைய திருவாலயத்தில் திருக்கோபுரம் புதுக்கிக்கொண்டிருக்கும்பொழுது எமது தமையனார் ஸ்ரீசைலவாசர் அக்கோபுரத்தின்மீது ஏறினார்; மழையால் வழுக்கி அறுபதடி உயரத்திலிருந்து தவறிவிட்டார். எம் தாயாராகிய ஸ்ரீமதி கனகவல்லியம்மையார் மகன் கோபுரத்தின் மேலிருந்து விழுந்தான் என்று கேட்டவுடனே மரணத்திற்குத் தகுந்த மூர்ச்சையடைந்து கீழே விழுந்தார்கள்; பற்களெல்லாம் கிட்டிவிட்டன; அவ்வூரிலுள்ளோரனைவரும் இம்மாது பிழைக்கமாட்டாளென்று கூறினார்கள்; குறைந்தபட்சம் அரைமணிநேரம் வரைக்

கும் அம்மூர்ச்சை தெளியவே இல்லை. ஆனால் விழுந்தவருக்கு காயங்கள் ஒன்றும் ஏற்படவில்லை. தாயாருக்குக் குழந்தையின்மீதுள்ள அன்பை அன்றொன்று யான் கண்டேன். 1937-வருஷத்தில் திருவனந்தபுரம் மார்க்கமாகச் சென்றுகொண்டிருந்த ஒரு புகைவண்டியில் ஒரு மாது, தன் குழந்தைக்கு வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தாள்; எவ்விதமோ குழந்தை தவறிவிட்டது, குழந்தையின் தாயானவள் பிள்ளையின்மேல் வைத்த அன்பால் மகனே என்று குழந்தையைத் தாவி கீழேவிழுந்தாள். குழந்தைக்குச் சொற்பகாயங்கள் ஏற்பட்டன; தாய் உயிர் துறந்தனள் என்று சுதேசமித்திரன்பத்திரிகையில் கண்ணுற்றோம். இவைபோல் இன்னும் அநேக சரித்திரங்களைக் கண்டும் கேட்டுமுள்ளோம். ஆகவே குழந்தைகள் துன்பப்படத் தாய்தந்தைகள் மனஞ்சகிக்கமாட்டார்கள். தமக்கு யாது துன்பம் வந்தபோதிலும் மகனுக்குத்தெரியாவண்ணம் தாமேயனுபவிக்கிறார்கள். ஆகாரம் சிறிது கிடைத்தால் அதை மகனுக்குத் தந்து தாய்தந்தைகள் பட்டினியாக இருக்கின்றார்கள். தாய் தந்தைகள் செய்யும் நன்றியை யாரே கூறவல்லார்? குழந்தையினால் மாதாபிதாக்கள் படுந்துன்பம் அளவிடமுடியாது. இதனாலல்லவோ முற்றத்துறந்த முழுஞானியாகிய பட்டினத்தடிகள்

"முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்து
யந்திபக லாச்சிவனை யாதரித்து—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாய்" என்றும

"வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோண்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்" என்றும்

"நொந்து சுமந்துபெற்று நோவாம லேந்திமுலை
தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே—யந்திபகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந் தாய்" என்றும்

அருணகிரிநாதர்

தந்தபசி தனையறிந்து முலை யமுது
தந்து முதுகு தடவிய தாயார் என்றும்

கூறியவற்றால் அறியக்கிடக்கின்றதன்றோ?

## துற்புத்திரன் இயல்பு.

இப்படி வெகுபாடுபட்டு வளர்த்த தாய்தந்தைகட்கு சில மக்கள் துன்பத்தைப் புரிகின்றனர். மனைவி வந்தபிறகு மாதாபிதாக்களு

டைய முகத்தைப் பார்ப்பதே கிடையாது. அவர்கட்கு குடிக்கத் தண்ணீர் கொடுப்பதும் இவனுக்கு சுமையாக இருக்கிறது; காலையில் எழுந்தவுடன் தாய்தந்தையரை வசை பாடுகின்றனர்; "தந்தைதாய்ப் பேண" என்னும் அமுதவாக்கை மறந்து, தாயதந்தையரைக் காப் பாற்றாமல், தன் மனைவியையே காப்பாற்றுகிறார்கள; படிப் பித்த குரங்கு சொன்னபடியாடுவதுபோலவும், கூண்டிலடைக்கப்பட்ட கிளி கற்றுக்கொடுத்தபடி கூறுவதுபோலவும், மனைவி படுக்கையில் சொல்லிக்கொடுத்தபடி மாதாபிதாக்களிடத்தில் பேசுகிறான்; தான் சம்பாதித்து அவர்களுக்கு ஒன்றும் தருவது கிடையாது, தனம் வஸ் திரம் ஆபரணம் எல்லாம், அருமை மனைவி சிர வுபயோகத்திற்கே சமர்ப்பிக்கின்றன். அந்தோ! அருமையாகப் பெற்றுவளர்த்த தாய் தந்தைகளின் ஞாபகமே இருக்கிறதில்லை, தாயதந்தையரை வேலைக்கார ரைப்போல் நினைக்கிறார்கள். இன்னும் சிலமக்கள் தன் அழுக்கு வஸ் திரத்தை தோய்க்கும்படி தாயாருக்குக் கட்டளையிடுகிறார்கள். இந்த இரண்டு கிழட்டுப்பிணங்களும் தொலைந்துபோகவில்லையே? என்று கூறுகின்றார்கள; நல்ல உணவு தருவது கிடையாது; நல்ல ஆடை தருவது கிடையாது; தாய்தந்தையைப் பார்க்கும்பொழுதே முணு முணுக்கிறார்கள்; மாதாபிதாக்கள் பசியால்வாடத் தானும் தன் மனைவியும் வயிறு வெடிக்க உண்டு உறங்குகின்றனர் மனைவியின் இனிய வார்த்தையாகிய விஷங்கலந்த தேனைக்குடித்து அதனால் புத் தியை மாய்த்துக்கொண்டு, வயதுமுதிர்ந்த பெற்றோர்களை நோக்கி, "ஊருக்கு வருகிறது உங்களுக்கு வரவில்லையே? என்று சினந்து அவர்களைத் தனியே அலையவிட்டு, பொருளையெல்லாம் எடுத்துக் கொண்டு, தானும் தன்மனைவியும் வேறோரிடத்திற்குக் குடிபோகின்ற னர். ஐயோ! கொடிது!! கொடிது!!! சில மக்கள் பிதாமாதாக் களை அடிக்கிறார்கள்; இவர்களா உருப்படப்போகிறார்கள்? இதுவோ மக்களுக்கு அழகு? இவர்களா மனிதர்கள்? "மனிதனை மனித னறிவான் மடையனைத் தடிக்கொம்பறியும்" என்னும் பழமொழிக் கிணங்க, இவர்களை மாக்களதான தம் இனம் என்று சேர்த்துக் கொள்ளவேண்டும், மக்கள் அல்ல என்பது இழுக்காகாது. பெற் றோர்கள் செய்த உபகாரத்திற்கு இவர்கள் செய்வதா பிரதியுபகாரம்? "நன்றி மறவேல்" என்னும் அருமையான திருமொழிக்கு மேனோக் காக சொற்பொருளைமட்டும் நோக்கினால் நீ தாய்தந்தைக்குச் செய்ய வேண்டிய நன்றியை மறவேல் என்றும், உனக்குப் பெற்றோர்கள்

செய்த நன்றியை நீ மறவேல் என்றும் ஔவை பாட்டி கூறியிருக்கின்றாள்.

> ஒன்றொரு பயனையுன்னா யுதவினோர் மனம்
> கன்றிட லொருவினை கருதிச் செய்வரேல்
> புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
> கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ

எனனும் கந்தபுராணச்செய்யுளை சிந்திக்கப்படாதா? தாய்தந்தைகள் மனம் நொந்தால் வாழுவார்களா? "மாதா வயிறெரிய வாழா வொருக்காலும்" என்று ஆன்றோர் மொழிந்திருக்கின்றனரே? எவனொருவன் ஈன்றோரை நிந்திக்கிறானோ அவன் மறுபிறவியில் ஊமையாகப்பிறக்கிறான்; பெற்றோர்கள பசியால்வாட எவன உண்டுஉறங்குகின்றானோ அவனுக்குத்தான் பைத்தியம்பிடிக்கிறது: கடுஞ்சொல்கூறுகிறவனுக்கு நாக்குப்புற்று உண்டாகிறது; அடிப்பவர்கட்குத்தான் தொழுநோயுண்டாகிறது; தாய் தந்தையைக் கோபத்தினால் கண்சிவந்து பார்க்கிறவனுடைய கண்களை இயமதூதுவர்கள் அக்கினியினாற் காய்ச்சிய ஊசிகளைக்கொண்டு குத்துகின்றனர்; அவர்களுக்கு ஏவல்செய்யக்கூசின பாவியை இயமதூதுவர்கள சுடுகின்ற தாமிரநீரை அவர்கள் சரீரம் நடுங்கி அலறும்படி அவர்கள்மீது வார்ப்பார்கள்; எமபுரத்தில் படுகிற துன்பம எழுதொண்ணாது.

பாரதத்தில்

> "தாவர்நல்லுரை மறுப்பினும் . . . . . . . .
> இரவியுள்ளளவும் மதியமுள்ளளவும்
> இவர்களே நரகி லெய்துவார்"

என்று கூறப்பட்டுளது

## மகன் ஆற்று முதவி.

ஆகவே தாய்தந்தைக்கு ஒருநாளும் துன்பம் செய்யப்படாது; அவர்கள் மனம் வருந்துமாறு யாதொரு காரியத்தையும செய்யப்படாது; அவர்கள் இஷ்டத்துக்கு மாறாக நடக்கப்படாது. இரண்டாயிரம் வருடத்திற்கு முன் சங்கரபகவத்பாதாள் சன்னியாஸம் பண்ணிக்கொள்ள நினைத்தார்; ஆனால் அவருடைய தாயாரோ தன்னுடைய ஒருபிள்ளைக்கு மணஞ்செய்து பார்க்கவேண்டுமென்று மிகவும் ஆசையுடையவளாக இருந்தார். ஆகையால் சன்னியாசம் வாங்கிக் கொள்ளுகிறேனென்று சொன்னால் தாயாருக்கு மிகவும் துக்கமுண்டாகுமே? என்று நினைத்தாராம்; ஆகவே பெற்றோர் இஷ்டம் இல்

லாமல் ஒரு காரியத்தையும் செய்யப்படாது. ஒரு கருமம் புரிய ஆரம்பிக்கும்போது தாய்தந்தையை வணங்கியே தொடங்கவேண்டும். இதனை பிரம்மாவின் அவதாரமாகிய திருவள்ளுவர் முப்பால் கூறத்தொடங்குமபோது

அகர முதலவெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு

என்று தம் தாய்தந்தையராகிய ஆதியையும் பகவனையும் தோத்திரஞ் செய்து ஆரம்பித்தார் என்றும் ஊகித்தற் கிடமிருக்கிறதல்லவா? காலையில் எழுந்தவுடன் பெற்றோர்களைத் தூரத்திலிருந்து வணங்கி அவர்கள் விரும்பினால் நெருங்கிவரவேண்டும். அவர்கள் சன்னிதியில் நிமிர்ந்தும் பார்க்கப்படாது.

வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதிற்
றந்தையுந் தாயுந் தொழுதெழுக வென்பதே
முந்தையோர் கண்ட முறை

— ஆசாரக்கோவை.

மக்கட்கு தாய்தந்தை கூறும் நல்வாக்கே வேதவாக்கு; பெற்றோர்களே மூன்றுலகங்களுமாவர், தாய்தந்தையரைப் பூசிப்பதால் புண்ணியலோகங்களைப் பெறுகிறார்கள்; அவர்களைப்பூசிப்பதால் மூன்று லோகத்திலும் கீர்த்தியுண்டாகிறது; அவர்களைப் பூசிப்பதால் மும்மூர்த்தியும் பரமசந்தோஷத்தை யடைகிறார்கள்; தாய்தந்தையைத் தெய்வம்போல்நினைத்து சதாசர்வகாலமும் பூசிக்கவேண்டும்; ஈன்றோரைத் தவிர வேறு தெய்வம் இல்லை, அவர்கள் சம்மதிபெறாமல் ஒரு காரியத்தையும் செய்யப்படாது; தாய்தந்தைக்குப் பணிவிடை செய்வதே சிறந்தவேலையென்று பணிசெய்யவேண்டும்.

மாதரம் பிதரஞ்சைவ ஸாக்ஷாத் ப்ரத்யக்ஷ தேவதாம்
மத்வா க்ருஹீ நிஷேவேத ஸதா ஸர்வப்ரயத்நத:

என்றும், நீதிநெறிவிளக்கத்தில்

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்

என்றும், நான்மணிக்கடிகையில்

ஈன்றாளின் என்ன கடவுளு மில்

என்றும், கூர்மபுராணத்தில்

தாயினிற் சிறந்த தெய்வமில்லை யுயர் தந்தை தன்னில்
ஓயாநற் குருவு மில்லை யொன்னில் மற்றிவர்க டாளில்

தூய்மலர் தூவி நாளுந் தொழுதிடு மற்றோர் தாமே
ஆய்கதிர் பாப்பு போன்றுட் டமரா யினிது வாழ்வார்

என்றும் கூறுமாறறுலுணர்க.

கவுரவத்துக்குரிய யாவருக்குளளும் தாயே அதிக கவுரவத்துக் குரியவள் ; தாய் பூமியைவிட குருத்துவமுடையவள் ; அப்படியே தந்தை வானத்தைவிட அதிக உயர்நதவர்.

குருணாஞ்சைவ ஸர்வேஷாம் மாதா பாமகோ குரு
மாதா குருதா பூமே:காத்பிதோச்சதரஸ் ததா

என்று கூறப்பட்டுளளது. தாய்தந்தைகள் மனங்கோணுமல் நடத்தல்வேண்டும்; வெந்நீரினுல் பெறறோர்களுக்கு அபிஷேகஞ் செய்ய வேணடும்; அவர்கள் வஸ்திரத்தைத் தன காத்தினுல தோய்க்கவேண்டும் ; அவர்களுக்கு இனிமையான உணவு தாவேணடும்; அவர்கள் உண்டபிறகு தான் உணவுகொள்ளவேண்டும். பெற்றோர்களுக்குத் தன் காத்தினுல் படுக்கை விரிக்கவேண்டும்; பிதாமாதாக்களின் பாதத்தை மெலலப்பிடிக்கவேண்டும்; ஈன்றோர்கள் உறங்கின பிறகு தான் உறங்கவேண்டும, அவர்களிடத்தில நயமாக வார்த்தை சொல்லல்வேண்டும் ; வயதுமுதிர்ந்த காலத்தில் தாய்தந்தைகள் படுக்கையிலேயே மலஜலங்கழித்தால் சிறிதுகூட அசங்கதமில்லாமல்—முகம் சுளிக்காமல் சுத்தப்படுத்தவேண்டும், பவ்வியம்பட்ட உடைகளையெல்லாம் தோய்த்து உலர்த்திவைக்கவேண்டும் ; புத்திமாறாட்டத்தால் ஏதேனும் தன்னைவைதாலும அவையெல்லாம் ஆசீர்வாதமென்று நினைத்துச் சுடுமுகத்தைக்காட்டாமல் பொறுத்துக்கொளல் வேண்டும்; புத்திதடுமாற்றத்தினுல் சிலசமயம் தன்னையடித்தாலும் "அப்பா ஓங்கியடித்தால் அந்த அதிர்ச்சியினுல் தங்கள் கைவலிக்குமே" என்று இனிமையாகப் பரிவுடன் கூறவேண்டும் ; பெற்றோர்கள் செய்த நன்றிக்கு மக்கள் நூறுண்டுவரைக்கும் தொண்டுபுரிந்தாலும் ஒருநாள வளர்த்ததற்கு சமானமாகாது.

ஈன்று வளர்த்த தாய்தந்தைக் கேவரோ கைம்மா றியற்றிடுவார்
ஆன்ற மதலை நூறுவய தளவு மடிமைத் திறம்பூண்டு
மூன்று புவனத் துள்ளபொருண் முற்றுமளித்து முறைமுறையே
ஏன்று வழிபா டியற்றியற்றிடினு மொருநாள் வளர்த்தற் கியையாதே

யம்மாதாபிதரௌக்லேசம் ஸஹேதே சம்பவேந்ருணாம்
நதஸ்யநிஷ்க்ருதி: ஸக்யாகர்தும் வர்ஷசதைாபி

என்பவற்றுலறிக.

தாய் தந்தைக்குப் பணிவிடை செய்வதே சிறந்த தவம்; பெற்றோரை நிராகரித்துக் கானகத்திற் சென்று அருமையாகத் தவம்செய்தாலும் தேவர்களும் முனிவரும் இகழ்வார்கள்.

காசிகாண்டத்தில்

“ தந்தை தாய் பணிதல் செய்யுந் தவமலாற் றவம்வே றில்லை ”

என்றும், உபதேசகாண்டத்தில்

ஈன்றதாயினை யின்புறுத் திருபுயத் தனைக்கும்
ஆன்ற தந்தையை யாதரித் தகன்றுபோ யடவி
தோன்றி மாதவந் தொடங்கினோ ரிவர்களைத் தொல்லை
மூன்று தேவரு முனிவரு நிரயமுற் றிழிவார்

வருமாறு காண்க.

ஆகவே பெற்றோர்கள் எந்தக் குடிசையில் வாழ்கின்றனரோ அந்தக் குடிசையே சிறந்தகோயில்; அவர்கள் கூறும் நல்லுபதேசமே சிறந்த மந்திரம்; அவர்கள் வாழுகின்ற நாடே அமரர் வாழும் பொன்னாடு.

“ தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை ”
“ தாய்சொற் றுறந்தால் வாசகமில்லை ”
“ தந்தைசொன் மிக்க மந்திரமில்லை ”

என்னும் அருள்வாக்குகளை நினைமின்கள்; அவர்கள் காலநிலை யடைந்தபிறகு நீர்க்கடன்களை முறைப்படி செய்யவேண்டும்; ஊரிலுள்ளோரனைவரும் “இக்குழந்தையைப் பெற்ற தாய் தந்தைகள் என்ன மாதவஞ்செய்தனரோ” எனப்புகழ

மகன் றந்தைக்காற்றுமுதவி இவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்

என்ற பொய்யில் புலவர் திருவாக்கிற்கு இலக்கியமாகத் திகழ்தல் வேண்டும்.

உ

ஓம் தத் ஸத்:

# இரவல்

A. திருநாளி. சமயபுரம்.

(328-ம் பக்கத் தொடர்ச்சி.)

உண்டவுடன் படுத்திருந்த சாய்வான நாற்காலியை நாற்காலிக்குச் சொந்தக்காரரைத் தண்ணீர் கொண்டுவர அனுப்பிவிட்டு வண்டியில் எடுத்துப்போட்டுக்கொள்வதையும், உண்ணும்போது மேலே உலர்த்தப்பட்டிருக்கும் வஸ்திரத்தைப்பார்த்து இது மிகவும் நன்றாய் இருக்கிறதே! நீர் தீபாவளிக்குக்கூட என்னை மறந்துவிட்டீரே என்று சொல்லிவிட்டு சாப்பிட்டவுடன் அந்த வஸ்திரத்தை எடுத்துக்கொள்வதையும், என்னுடைய குழந்தையின் உடுப்பு சிறிதாக இருப்பதால் இவ்வூரில் இம்மாதிரி துணியில்லாததால் உங்கள் ஊர் கடையில் தைத்துக்கொண்டுவாரும் என்று சொல்வதையும், அரிசி, கருப்பு, வெல்லம் இவைகளைக் கொடுக்கவேண்டுமென கட்டாயப்படுத்தி வாங்கிக்கொள்வதையும் எந்த இனத்திற் சேர்ப்பதென்பதை வாசகர்கள் அறிந்திருப்பார்களென நம்புகிறேன்.

துவிச்சக்கரவண்டியை இரவல் கேட்பதும் கொடுப்பதும் சகஜந்தான். ஊரார் வீட்டு "பைசைக்கிளில் ஏறி உட்கார்ந்துவிட்டால், ஒரு தனிவேகந்தான். குதிரைசவாரி செய்வதைப்போல் வேண்டுமென்றே உடம்பைத் தூக்கித்தூக்கிப்போட்டுக்கொண்டு, கல்லிலும், முள்ளிலும், வெகுவேகமாயக் கவலையில்லாது போவது ஒரு வித்தையன்று. சிலசமயங்களில் ரப்பர் குழாய்களில் சிறைவைக்கப்பட்டிருக்கும் வாயு பகவானையும் விடுதலை செய்துவிடுவர். பிறருடைய வண்டிகளிற்றான் இவர்கள் சர்க்கஸ் பயிற்சிகள் கற்றுக்கொள்வது இவ்வளவு ஜாக்கிரதையாகக் கையாளப்பெற்றால் நாம் இரவல் கொடுத்த பொருளின் நிலையைச் சொல்லவும் வேண்டுமோ?

ஒருவர் வீட்டுக்குத் தன் மருமகனோ உறவினர்களோ வந்துவிட்டால் வீட்டிலுள்ள பெண்கள் பக்கத்து வீடுகளுக்குப்போய் கூசாமல் தங்கநகைகளையும், வெள்ளிப்பாத்திரங்களையும் இரவல் வாங்கிக்கொண்டுவந்து ஷோக்பண்ணிவிடுகிறார்கள். திருப்பிக்கொடுக்கும்போது ஏதாவது ஒன்று பின்னமாகப்போவது வழக்கம். உடனே கிளம்பிவிடுகிறதையா! பெரிய இந்தியப்பெண்களின் யுத்தம் (சச்சரவு). நம்வீட்டுப்பெண்கள் சிறிது நேரம் வாங்கி விருந்தினருக்காக பகட்டினது நமக்கு ஆபத்தாய் நம்முடைய மானம் கால் காசுக்கு விற்றுப்போகிறது

கிராமபோன் இரவல் கேட்பது மன்னிக்கத்தக்கதே சங்கீதப் பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் ஆகிய எல்லோரையும் வசீகரித்துவிடுகிறது. அன்றே! அன்றையதினம் உங்கள்வீட்டில் "காந்தியோ பரம ஏழை சந்நியாசி" என்ற பாட்டைக் கேட்கச்சொன்னீரே? என்ன அது மகா இனிமையாயிருந்தது? உங்கள் மிஷினை ஒரு நாளைக்கு இரவல் கொடுங்கள்; எனது வீட்டில் என் சம்சாரம், பெண், மகன், தாயார், எல்லோரும் அந்தப் பாட்டைக்கேட்க மிகுந்த ஆவலுள்ளவர்களாய் இருக்கிறார்கள்; ரிக்கார்டுகளைவைத்து முடிந்தவுடனேயே கொடுத்துவிடுகிறேன் என்கிறார் நம் நண்பர். நாமும் தட்டமுடியாமல் கொடுத்துவிடுகிறோம். அவருடைய வீட்டில் அப்போது காந்தியடிகளின் கடவுள் தத்துவத்தைப்பற்றின பேச்சை யாவரும் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அப்போது, அவ்விடம் கிராமபோன்குழாய்க்குள் தலையை விட்டுக்கொண்டு கேட்கும் ஒருவன் பாஷாபிமான மிகுதியால் "இது என்னத்திற்கு இந்த இங்கிலீஷ் பிளேட்" என்று சொல்லி, ரிக்கார்டை இறுகப்பிடித்து நிறுத்திவிடுகிறான்; அவ்வளவே, அங்கே ஒரு கீறல் விழுந்துவிடுகிறது; இந்த இடத்திற்கு ஊசிவந்ததும் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லுகிறது, இவ்விதம் நான் சொல்வது பொய்யென்று வாசகர்களுக்குத் தோன்றினால் உடனே இரவல் கிராமபோன் வாங்கி, ரிக்கார்ட்டில் ஒரு கீறல் இழுத்து, அதற்கு நேராக ஊசியை நிறுத்திப்பாருங்கள்; ஓர் வேண்டுகோள்—சந்தேக நிவர்த்திக்காக இரவல் வாங்கவேண்டிய சிரமத்தை தியாகம்பண்ணவேண்டும்.

இப்படி அநேகமாதிரியான இரவல்கள் உலகத்தில் மலிந்துகிடக்கின்றன. மிகவும் முக்கியமானவைகளையும் விலை உயர்ந்தனவுமான பொருள்களை, ஒருவருக்கும் இரவல் கொடுக்கவே கூடாது. புத்தகங்கள், பத்திரிகைகள் ஆகியவைகளை இரவல் கேட்பது இழிவினும் இழிவு. சொந்தமாக வாங்கிப் படித்து இவைகளின் வளர்ச்சியை விரும்புதல் தனவான்களாகவுள்ள பெரியோர்களின் கடமையாகும்.

இரவல் கொடுப்பவர்களே! உங்களிடமும் குற்றமிருக்கிறது; இரவல் கொடுத்தாற்றானே அவர்களும் வாங்குகின்றார்கள்; நீங்கள் ஏன் கொடுக்கின்றீர்கள்? கொடுத்துவிட்டுத் திரும்பிவரும்போது "அதில் சொத்தை இதில் சொள்ளை" என்று ஏன் கலகத்திற்காளாகவேண்டும்? கொடுத்துவிட்டுப் பொல்லாதவனாய்ப் போவதைவிட, கொடாமலேயே பொல்லாதவனாயிருப்பது நலம் என எனக்குத் தோன்றுகின்றது. இரவல் கேட்பதையே தொழிலாகக்கொண்ட தனவான்களாகயிருக்கும்பெரியோர்கள் என்மீது சினந்துகொள்வது பிசகு என்பதைக்கூறி எனது வார்த்தைகளையும் நிறுத்திக்கொள்ளுகின்றேன். "வாழ்க சீரடியாரெல்லாம்"

---